அமுதம்—62.
முதற் பதிப்பு—மார்ச்சு, 1953.
இரண்டாம் பதிப்பு—அக்டோபர், 1959.

## பொருள் அடக்கம்



விலை ரூ. 2-00

நாஷனல் ஆர்ட் பிரஸ்,
தேனும்பேட்டை, சென்னை-18.

# முகவுரை

‘சிறு கதை எழுதுவதற்குக் காதலையே நிலைக்களமாக வைத்துக்கொள்கிறார்களே யொழிய, மனித வாழ்க்கையில் வேறு எத்தனையோ விதமான உணர்ச்சிகள் இருக்கின்றனவே! அவற்றை வைத்து எழுதக் கூடாதா?’ என்று சிலர் குறை கூறுவது உண்டு. இப்போது தமிழில் வந்துள்ள சிறு கதைகளில் பெரும்பான்மையும் காதலையும் அதனைச் சார்ந்த இயல்புகளையும் கருவாகக் கொண்டே அமைந்துள்ளன என்பது உண்மை. ஆனாலும் வேறு வகைக் கதைகளும் இல்லாமற் போகவில்லை.

‘கதைகளைப் படித்துவிட்டு அதனால் உண்டான உற்சாகத்தில் கதை எழுத வருகிறார்களேயன்றி இயற்கையாக எழுந்த கற்பனையைக் கொண்டு கதை எழுதுபவர்கள் குறைவாக இருக்கிறார்கள்.’—இது வேறு ஒரு வகையான குறை.

தமிழில் நூற்றுக் கணக்கான கதைகள் வந்துவிட்டமையால் அவற்றினூடே உள்ளே குறைகள் இன்னவை என்று தெரிந்து சொல்ல முடிகிறது. உண்மையில் பாரத நாட்டு மொழிகளில் தமிழ் பழைய இலக்கியங்
களால் சிற ப்புப் பெற்றது என்ற பெருமையோடு, சிறு
கதைகளாலும் சிற ப்புப் பெற்றது என்ற புதுப் பெரு
மையையும் இம் மொழி பெற்றி ருக்கிறது. தமிழ் மக்கள் சி ங்
கதைகளைப் படிப்பதில் ஆர்வ ம் காட்டுகிறார்கள்; அத ம்
பத்திரிகைகள் இடைவிடாது சிறு கதைகளை வெளியிட் க்குத்
கொண்டே இருக்கின்றன; எழுத தாளர்களும் மே
மேலும் சிறு கதைகளை உற்பத்தி செய்த வண்ண

...ருக்கிறார்கள். எழுத்துலகில் புகுந்து தலை நரைத்தவர்களும் கதை எழுதுகிறார்கள்; பள்ளிக் கூடத்தில் படிக்கும் மாணாக்கனும் சிறு கதை எழுதுகிறான். ஆடவரும் எழுதுகிறார்கள், பெண்களும் எழுதுகிறார்கள். அரசாங்க உத்தியோகஸ்தரும், தொழிலாளியும், விவசாயியும், ஏவலாளரும்—யாவருமே சிறு கதை எழுதுகிறார்கள். தமிழில் சிறு கதை தண்ணீர் பட்ட பாடாக இருக்கிறது.

நான் எழுதிய சிறு கதைகளிற் பல இதுகாறும் ஐந்து தொகுதிகளாக வெளிவந்துள்ளன. கலைஞன் தியாகம், நீலமணி, அறுந்த தந்தி, கலைச் செல்வி, பவள மல்லிகை என்பன அவை. இது ஆறாந் தொகுதி. பொதுவாகவே இத் தொகுதிகளில் காதற் கதைகள் என்ற பிரிவில் வருவதற்குரியவை, மிக மிகச் சிலவே, இந்தத் தொகுதியில் உள்ள பன்னிரண்டு கதைகளில் மூன்றே அந்தப் பகுப்பில் அமைவதற்கு உரியவை. மற்றவை வெவ்வேறு துறைகளில் அமைந்தவை.

இவற்றில் 'வியாபாரி' என்ற கதை இமயத்திலும், 'ராஜபவனி' என்பது தினமணிக் கதிரிலும், பரிகாரம் என்பது ஆனந்த விகடன் தீபாவளி மலரிலும், 'புது மலர்ச்சி' என்பது தமிழ் நாட்டிலும், 'விடுதலை உண்டா?' என்பது சுதேச மித்திரனிலும், 'எங்கள் ஆண்டவன்' என்பது திருப்புகழ் அமிர்தத்திலும் வந்தவை; மற்ற ஆறு கதைகளும் கலைமகளில் வெளியானவை.

என் கதைகளைப் பத்திரிகையில் வெளியிட்டும் ...படித்து இன்புற்றும், வேறு மொழிகளில் மொ... ...ய, ...ம் ஊக்கமூட்டி வரும் அன்பர்கள் ... ...ழி பெயர்த் ...றியறிவைத் தெரிவித்துக் கொ... அனைவருக்கும் என் ...ள்கிறேன்.

20—3—'53

கி. வா. ஜகந்நாதன்

விலை ரூ. ௨

# வளைச் செட்டி

''வாடா வளைச்செட்டி வந்திறங்கு திண்ணையிலே
துப்பட்டி யைப்போட்டுத் தோள்சுமையைக் கிழிறக்கு''

என்று ரங்கநாயகி பாடிக்கொண்டிருந்தாள்.

"இதோ வந்துவிட்டேன்'' என்ற குரல் கேட்டது. குடுகுடு வென்று நாராயணன் உள்ளே புகுந்தான். "இதோ வளைச் செட்டி வந்திருக்கிறேன். கையை நீட்டு; உனக்கு வளை போடுகிறேன். காசே கொடுக்கவேண்டாம்; எல்லாம் இனும்'' என்றுன்.

அவன் கைநிறையக் கருவளைகள் அஞ்சாறு இருந்தன.

''ஏதடா இது உனக்கு?'' என்று ரங்கம் கேட்டாள்.

"ஏதென்ருல் வாங்கிவந்தேன். நீ என்னைப் பாட்டுப் பாடி அழைத்தாயே; அதனுல் வளை கொண்டுவந்தேன்."

''விளையாடாதே; இந்த வளை ஏது?'' என்று மறுபடியும் அவள் கேட்டாள்.

''இன்றைக்கு என்ன விசேஷம், தெரியாதோ?''

''இன்றைக்கு ஆடிப் பதினெட்டு; அதற்கும் இதற்கும் என்ன?''

"ஆடிப் பதினெட்டுக்கு நம் ஊருக்கு எங்கெங்கிருந்தோ ஜனங்கள் காவேரி ஸ்நானத்துக்குக் கூட்டம் கூட்டமாக வந்திருக்கிருர்களே; அது உனக்குத் தெரியாதா?''

''வரட்டுமே!''

"அவர்கள் கருகுமணியும் கருவளையும் காதோலையும் கொண்டுவந்து காவேரியம்மனுக்குப் பூஜைசெய்து போட்டு விட்டு ஸ்நானம் பண்ணுவார்கள்."

"ஓஹோ! இப்போதுதான் புரிந்தது. அந்தக் கருவளையைப் பிச்சைக்காரன் மாதிரி பொறுக்கிக் கொண்டு வந்தாயோ?" என்று ஏளனமாக அவள் கேட்டாள்.

"காவேரியம்மன் போட்டுக்கொள்ளவா போகிருளென்று எடுத்துக்கொண்டு வந்தேன். ரங்கநாயகி கையிலே போட்டுப் பார்க்கலாமென்று ஆசையோடு வந்தேன். நீயும் பாட்டுப் பாடி வளைச் செட்டியை அழைத்தாய்; பொருத்தமாகத்தான் இருக்கிறது. எங்கே, கையை நீட்டு."

ரங்கநாயகி கையை நீட்டினுள். அவன் கைக்கு மூன்று வளையல்களாக ஆறு வளையல்களைப் போட்டுவிட்டு, "ஆகா, உன் சிவப்பு உடம்புக்கும் இதற்கும் எத்தனை அழகாக இருக்கிறது!" என்று சொல்லி ஆனந்தம் அடைந்தான். "சரி, நான் வருகிறேன். இந்த வளையை யார் என்ன சொன்னுலும் கழற்ருதே; நான் அகத்துக்குப் போகிறேன்" என்று நாராயணன் போய்விட்டான்.

★

ரங்கநாயகியின் அகக் கண்ணில் இந்தக்காட்சி பசுமரத்தாணிபோலப் பதிந்திருந்தது. இப்போது அதை நினைக்கும்போதே மனசு பகீரென்றது.

இன்றைக்குக் காலையில் நிகழ்ந்த நிகழ்ச்சிதான் அந்தப் பழைய காட்சியை அதிகமாக நினைப்பூட்டியது.

அம்மா சொன்னுள்: "வெறும் மொட்டைக் கையாக எத்தனை நாளைக்குத்தான் இருப்பாய்? கோவிலுக்குக் குளத்துக்குப் போகும்போது நாலுபேர் கண்ணில் படவேண்டியிருக்கிறதே; கையில் நாலு வளையாவது

போட்டுக்கொள்" என்று அவள் வற்புறுத்தினுள். நவ ராத்திரி காலமாகையால் பெண்களெல்லாம் அழகாக உடுத்துக்கொண்டு அலங்காரம் செய்துகொண்டு வீடுவீடா கப் புகுந்து கொலுவைப் பார்த்து வருவது, அவள் கண் ணில் படாமலா போகும்? தன் மகள் ரங்கம் தளதள வென்று வளர்ந்து பூத்துக் குலுங்கும் பூஞ்செடிபோல நிற்கவேண்டியவள், உடம்பு ஒட்டிக் கன்னம் ஒட்டி நிற்பதையும் பார்த்தாள். அவள் நிலையை நினைந்து குமைந்தாள். உடம்பிலே ஊட்டத்தை ஏற்றப் பகவான் தான் கண் பார்க்கவேண்டும். நாலு வளைகளாவது அடுக்க லாமென்று நினைத்தாள்.

அம்மா சொல்லிக் கொண்டிருந்ததற்குத் துணையாக அன்று காலையில் வளைச் செட்டி வீதியிலே வந்தான். அவர்கள் வீட்டுத் திண்ணையிலே வந்து இறங்கினுன். அம்மாவின் தொந்தரவு பொறுக்காமல் அவள் இரண்டு வளைகளை அடுக்கிக்கொள்ளச் சம்மதித்தாள். ஆனுல் அவள் கை சம்மதிக்கவில்லையே!

வளைச் செட்டி பொறுமையோடுதான் வளை போட் டான். முதல் வளை உடைந்துபோய் விட்டது. "என் னம்மா, இப்படி உடம்பைத் திருப்புகிருயே! சும்மா உட்கார். வளை உடைந்தால் எனக்குத்தானே நஷ்டம்?"

அவள் பல்லைக் கடித்துக்கொண்டுதான் உட்கார்ந் திருந்தாள். அவள்தான் என்ன செய்வாள்? கையில் மணிக்கட்டு எலும்பெல்லாம் தெரிந்தன. வாழைத்தண்டு போல் உருண்டு திரண்டிருந்தால் எத்தனை வளை வேண்டு மானுலும் பொடலாம். அவள் கை வளைக்கு வாகாக இல்லை. "முரட்டுக் கை அம்மா, இது" என்று வளைச் செட்டி அலுப்புடன் சொன்னுன். ஒன்று, இரண்டு, மூன்று வளை களை அவன் உடைத்துவிட்டான். நாலாவது வளையைப்

போடும்போது முக்கால்வாசி போய்விட்டது. மணிக்கட்டுக்குப் பக்கத்தில், வளைச்செட்டி மெதுவாக வளையை நகர்த்தினான். கையில் சதைப்பிடிப்பா இருக்கிறது, லாகவமாக விரல்களால் நெண்டிப் போட? இந்த நான்காம் வளையும் உடைந்துவிட்டது!

வளைச் செட்டி பொறுமையை இழந்தான். "அம்மணி, இந்தக் கைக்கு வளைபோட நம்மால் முடியாது. எந்தப் புண்ணியவான் இதைப் பிடிக்கப்போகிறானோ, அவனே போட்டால்தான் உண்டு" என்று சொல்லி விட்டு அவன் வளைகளைத் தோளில் போட்டுக்கொண்டு போய்விட்டான். நெற்றியில் குங்குமம் மட்டும் இருக்க, கழுத்தில் ஒன்றும் இல்லாமல் இருந்த ரங்கத்தின் கோலத்தைக் கண்டு அவன் துப்பறிந்து கொண்டான், அவள் கன்னிதான் என்று. அந்தக் கையைப் பிடிக்கிற புண்ணியவான் வளை போடுவானா, என்ன? அவன் ஆத்திரத்தில் வாய்க்கு வந்த எதையோ சொன்னான்; அவ்வளவுதான்.

ஆனால் அந்த வார்த்தை ரங்கத்தின் மனசுக்குள் ஆறாதிருந்த புண்ணிலே போய்க் குத்தியது. 'அந்தப் புண்ணியவான் வந்து இந்தக் கையைத் தொடுவானா? தொடுவதற்கு எனக்குப் பாக்கியம் இருக்கிறதா?' என்று நினைத்துக் கண்ணீர் சிந்தினாள். நேரே உள்ளே போய்த் தன் பெட்டியில் இருந்த கருவளை உடைசலை எடுத்தாள்; அதைக் கண்ணில் ஒத்திக்கொண்டாள். கண்ணீரால் கழுவினாள். அப்படியே உட்கார்ந்துகொண்டாள்.

தன் பெண்ணுக்கு வளைச் செட்டி வளை போட முடியாதென்று சொல்லிப் போனதைத் தாய் கேட்டுவிட்டுச் சும்மா இருப்பாளா? அவளுக்கும் மனசிலே துக்கம் பொங்கி வந்தது. "எந்தப் புண்ணியவான் வரப்போகிறானோ!" என்று அவள் ஏங்கினாள். ரங்கத்தினிடம்

போய் ஏதாவது சொன்னால், அவளுக்கு ஆறுதலாக இராமல் அவள் துக்கத்தைத் தூண்டிவிடுமென்று அவளுக்குத் தெரியும். ஆகவே அவள் சமையலறைக்குள்ளே புகுந்தாள்.

இப்போது ரங்கத்தின் அகத்திரையில் பழைய நாடகத்தின் இரண்டாவது காட்சி ஓடியது.

★

"என்னடி பைத்தியம்?" என்று அம்மா கேட்டாள்.

"வளை அம்மா" என்று சிரித்துக்கொண்டே ரங்கம் சொன்னாள்.

"அது தெரிகிறது. இந்த அற்புதமான கருவளையலை எங்கே சம்பாதித்தாய்?"

"அத்தான்தான் போட்டான் அம்மா."

"நீ ஒரு பைத்தியம்; அவன் ஒரு பைத்தியம். கைக்கு மூன்றாகப் போட்டுக்கொண்டாயோ? மூன்று கூடாதடி. முதலில் இதை உடைத்தெறி."

"இல்லையம்மா; நாராயணன்தான் காவேரியிலிருந்து பொறுக்கிக்கொண்டு வந்தான்."

"அட கிரகசாரமே, எந்த எச்சில் துப்பலில் இருந்ததோ; இதோ நானே உடைத்தெறிகிறேன். அழகுதான் போ!" என்று சொல்லி அம்மா அவற்றை உடைத்துவிட்டாள்.

"போ அம்மா!" என்று ரங்கம் சிணுங்கினாள். அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

"உன் அருமை அத்தான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு கை நிறையத் தங்கவளை போடட்டும். இந்த அசட்டுப் பிசட்டு வளையலெல்லாம் எதற்கு? நல்ல நாளும் அதுவுமாய், மூன்று வளை போட்டுக்கொண்டாயே; போதும் போ, சமத்து!"

உடைந்த வளையலை அவள் பொறுக்கி வைத்துக் கொண்டாள்.

அப்போது அவளுக்கு ஏழு வயசு. அவனுக்குப் பத்து வயசு. அவன் ரங்கத்துக்கு அத்தை பிள்ளை. அப்பா இல்லை. இருக்கிற கையகலம் பூமியை வைத்துக்கொண்டு அந்த அத்தை அவனைப் பள்ளிக்கூடத்தில் படிக்க வைத்தாள்.

இப்போது ரங்கத்துக்கு வயசு பதினேழு. அன்று வளையலை அம்மா உடைத்தாள்; இன்று அந்தக் கை வேறு வளையலை ஏற்கவில்லை.

★

அவள் தந்தை வெளியிலிருந்து வந்தார். எங்கெங்கோ அலைந்துவிட்டு வந்திருக்கிறாரென்று தெரிந்தது. அவர் வந்தவுடன் தொப்பென்று கீழே உட்கார்ந்தார்; "அம்மா, ரங்கம், ஒரு தம்ளர் தீர்த்தம் கொண்டுவா அம்மா" என்று கேட்டார். ரங்கம் வரவில்லை. அவள் தாய்தான் தண்ணீரைக் கொண்டுவந்து கொடுத்தாள்.

அதைக் குடித்துத் தம்ளரைக் கீழே வைத்தார். உடம்பிலுள்ள வேர்வையைத் துண்டால் துடைத்துக் கொண்டார். அவர் என்ன சொல்லப்போகிறாரோ என்று ஆவலுடன் காத்து நின்றாள் அவர் மனைவி. அவர் நிமிர்ந்து பேசினார். "ஒன்றும் பிரயோசனம் இல்லை. நேற்று வரைக்கும் நம்பிக்கையோடிருந்தேன். சந்திரமௌலியும் நிச்சயமாக இந்த வரன் முடிந்துவிடும் என்றே சொன்னான். 'இரண்டாந் தாரம். இரண்டு குழந்தைகள் வேறு. அவனுக்கு வலிக்கிறதா என்ன?' என்று நானுந்தான் நினைத்தேன். உலகத்தில் நம்மைப்போல எத்தனையோ பேர்கள் பெண்களை வைத்துக்கொண்டு தவிக்கிறார்கள் என்பதை அப்போதைக்கு மறந்துபோனேன்."

"இப்போது ஞாபகம் வந்ததாக்கும்!" என்றாள் அவர் மனைவி.

"ஆமாம்; அந்த வரனுக்கு வேறு இடத்தில் நிச்சய மாகி விட்டதென்று தகவல் வந்ததாம். இதைச் சந்திர மௌலி எனக்குச் சொல்லும்பொது அவன் முகத்தில் ஈயாடவில்லை. அவன்தான் என்ன செய்வான்? எத் தனையோதான் சிரமப்பட்டான்."

"வேளையும் போதும் ஒத்துக்கொள்ளவில்லை" என்று அம்மாள் தீர்ப்புக் கூறினாள்.

"ரங்கம் எங்கே?" என்று கேட்டார்.

"உள்ளேதான் இருக்கிறாள். அவள் துக்கத்தைக் கிளறிவிட ஏதாவது ஒன்று வந்து சேர்கிறது."

"என்ன, என்ன?" என்று வேகமாகக் கேட்டார் அவர். அம்மாள் வளையல் உடைந்த விஷயத்தைச் சொன் னாள். அவர் அதைக் கேட்டார். பெருமூச்சு விட்டார். "அம்பிகே! தாயே! என்றைக்கு உன் கடாக்ஷம் கிடைக்கப் போகிறதம்மா?" என்று நைந்த குரலில் அவர் லோகமாதாவினிடம் முறையிட்டுக்கொண்டார்.

உள்ளே இருந்த ரங்கத்தின் காதில் இந்தச் சம்பா ஷணை விழுந்துகொண்டே இருந்தது. அப்பா அவளுக்கு எப்படியாவது கல்யாணம் பண்ணிவிட வேண்டுமென்று படுகிற பாடு கொஞ்சமா, நஞ்சமா? அவளுக்கு அது சம்மதமே இல்லை. அவளுடைய அத்தான் என்று அவள் கையைத் தொட்டானோ, அன்றே அவள் தன்னையும் அறி யாமல் அவனுக்கு மனைவியாகி விட்டாள். கையைத் தொட்டு வளை போட்டானே அன்று முதலே அவனுக்கு அவள் தர்ம பத்தினி என்ற பந்தம் ஏற்பட்டுவிட்டது. இது அவள் எண்ணுகிற எண்ணம்.

ஏழு வயசிலேயே அப்படி ஓர் எண்ணம் வருமா? வராது. பின்னாலே அவளுக்கு அறிவு வந்தது முதல் தன் நாயகன் நாராயணன்தான் என்ற உறுதியான எண்ணம் ஏற்பட்டுவிட்டது. சின்ன வயசில் அவனோடு பழகியது மாத்திரம் இந்த எண்ணத்துக்குக் காரணம் அல்ல. அம்மா, அப்பா, அத்தை, சொந்தக்காரர் யாவரும் அந்தக் காலம் முதற்கொண்டே அவர்களை அகமுடையான் பெண்டாட்டியாக முடிச்சுப் போட்டுப் பேசினார்களே, அதுகூட முக்கியமான காரணம் அல்ல. அவன் தன் கையைத் தொட்டு வளைபோட்டானே, அந்த ஒன்றுதான் அவனுக்கும் தனக்கும் யாராலும் பிரிக்கமுடியாத உறவை ஏற்படுத்திவிட்டதென்று எண்ணினாள். அப்போது அதிகமாக அதை எண்ணவில்லை. நாளாக ஆக அது அவள் உள்ளத்தில் ஊன்றி உருப்பெற்று மெருகு பெற்று இன்ப நினைவாக இருந்தது. இப்போதோ அது விரதமாக, தவமாக, பிரதிக்கினையாக வைரமோடிக் கிடக்கிறது.

இப்போது பழைய நாடகத்தின் மூன்றாவது காட்சி அவள் உள்ளத்தில் ஓடியது.



சாயங்காலம் நாராயணன் வந்தான்; "ஏண்டி ரங்கம், நான் போட்ட வளையல் எங்கே? கழற்றிவிட்டாயா?" என்றான்.

"இல்லை; அம்மா உடைத்துவிட்டாள்."

"உடைத்துவிட்டாளா!" அவனுக்கு அதைக் கேட்கும்போது முகம் சுண்டிப் போயிற்று.

"கழற்றி வைக்கப்படாதோ? காவேரி அம்மன் வளையை உடைக்கலாமோ? இவ்வளவு தெரிந்த மாமிக்கு இது தெரியவில்லையே!" என்று அவன் சாஸ்திரம் பேசினான்.

"நான் வேண்டாமென்றுதான் சொன்னேன். அவள் பல்லைக் கடித்துக்கொண்டு உடைத்துவிட்டாள்."

"அப்படியானால் அம்மாவுக்கு என்னிடத்தில் பிரியமில்லை என்றுதானே அர்த்தம்? நான் எதற்காக இந்த வீட்டுக்கு வரவேண்டும்?"

இதைக் கேட்டுக்கொண்டே வந்துவிட்டாள் ரங்கத்தின் தாய். "என்னடா, அவளைப்போய் மிரட்டுகிறாய்?" என்று அவள் கேட்டாள்.

"காவேரியம்மன் பிரசாதத்தை உடைக்கலாமா, மாமி?" என்று அவளையே நேரில் கேட்டான் நாராயணன்.

"ஆமாம். காவேரியம்மனை நீ கண்டுவிட்டாயோ இல்லையோ! எவள் போட்டாளோ, எந்த எச்சிலில் கிடந்ததோ, அதைக் கொண்டுவந்து ரொம்ப அருமையாய் இவள் கையில் போட்டுவிட்டாய்! போதாக் குறைக்கு எண்ணி மூன்று மூன்றாகப் போட்டாயே! உனக்குத் தெரிந்த லட்சணம் இதுதானா?" அவள் பேச்சில் காரம் ஏறியது.

"இங்கே பார் மாமி; நான் விளையாட்டுக்காகப் போட்டேன். நீ அதை உடைத்துவிட்டு என்னைக் கோபித்துக் கொள்கிறாய். நான் ஒன்றும் தப்புச் செய்யவில்லை. நான் போட்ட வளையைத்தான் உடைத்துவிட்டாயே. இனிமேல் எதற்கு வீண் சண்டை?" என்று சொல்லி அவன் விடுவிடு வென்று தன் வீட்டுக்குப் போய்விட்டான்.

'இந்த அம்மா என்ன, இதைப் பெரிசுபடுத்தி ராட்சசியைப் போலக் கத்துகிறாள்?' என்று ரங்கம் நினைத்தாள். அதை வெளிப்படையாகச் சொல்ல முடியுமா?

பத்மநாப ஐயர் - ரங்கத்தின் தகப்பனார் - செயலாக இருந்த காலம் அது. ஜோஸியம் பார்ப்பதில் கெட்டிக்

காரர் என்ற பேர் சுற்றுவட்டாரத்தில் பல ஊர்களுக்கு எட்டியிருந்தது. தினமும் பொழுது விடிந்தால் அஞ்சாறு பேர் சோதிடம் பார்க்க வந்துவிடுவார்கள். நாள் நட்சத்திரம் பார்க்க, ஜாதகம் எழுத, விவாகப் பொருத்தம் பார்க்க, தோஷத்துக்குப் பரிகாரம் தெரிந்துகொள்ள—இப்படியாகப் பல வகையில் ஜனங்கள் வருவார்கள்.

அவருக்கும் நல்ல காலம் இருந்தது. சம்பாதித்தார். தம்முடைய ஒரே தங்கைக்கு அவர் கல்யாணம் பண்ணி வைத்தார். அவளுக்கு ஒரு பிள்ளை பிறந்தது. அதற்கு மேல் அதிருஷ்டம் இல்லை. கணவனை இழந்தாள். அவளையும் அவள் பிள்ளையையும் தம்முடைய ஊருக்கே அழைத்துக்கொண்டு வந்தார். தனியே ஒரு வீட்டில் குடியிருக்கச் செய்தார்.

புத்திர தோஷத்துக்கு எத்தனையோ பரிகாரங்களை அவர் மற்றவர்களுக்குச் சொன்னார். ஆனால் அவர் விஷயத்தில் ஒன்றும் பலிக்கவில்லை. நாலைந்து குழந்தைகள் ஆணும் பெண்ணுமாகப் பிறந்து இறந்து போயின. கடைசியில் ரங்கநாயகி பிறந்தாள். ரங்கநாயகியோடு அவர் மனைவி மருத்துவச்சிக்கு வேலை கொடுப்பதை நிறுத்திக் கொண்டாள்

பத்மநாபையர் தம் பெண்ணை நாராயணனுக்கே கொடுத்து இரண்டு குடும்பங்களையும் ஒன்று படுத்திவிட வேண்டுமென்று எண்ணினார். அவர் மனைவி கொஞ்சம் வாய்த் துடுக்கு. ஆகையால்தான் அவர் தம் தங்கையைத் தனியே ஒரு வீட்டில் இருக்கும்படி ஏற்பாடு செய்திருந்தார். தம்மோடு இருக்கும்படி செய்தால் ஏதாவது சச்சரவு நேர்ந்து, அதனால் பிற்காலத்தில் தாம் நினைத்தபடி அந்த இரண்டு குழந்தைகளையும் தம்பதிகளாக்குவதற்குத் தடை வரக்கூடாதென்பது அவர் அபிப்பிராயம்.



"அம்மா, ரங்கம்" என்று அழைத்தார் பத்மநா பையர்.

ரங்கம் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கூடத் துக்கு வந்தாள்.

"ஏன் அம்மா வருத்தப்படுகிறாய்? அம்பிகை கடாட்சம் சீக்கிரம் கிடைக்கும் அம்மா" என்று ஆறுத லாகப் பேசினார்.

"இப்போதெல்லாம் மிலிடெரியில் ரொம்பப் பேர் சேர்ந்திருக்கிறார்களாமே?" என்று மெல்லிய குரலில் கேட்டாள் ரங்கம்.

"ஆமாம். சந்திரமௌலியின் பிள்ளைகூட மிலிடெரி யில் சேர்ந்திருக்கிறான்."

"அங்கே தேடினால் கிடைக்கலாமோ?" என்று கேட்டாள்.

"தேடுகிறதா?..." என்று இழுத்தார் அவர்.

"அத்தான் ஒருகால் அதில் சேர்ந்திருப்பாரோ!"

அதற்குள் அவள் தாய் குறுக்கிட்டாள். "இத்தனை நாள் வராதவன் இனிமேல்தான் வரப்போகிறானோ? அவன் இருக்கிறானோ..."

"போதும், நிறுத்து" என்றார் பத்மநாப ஐயர்.

'ஐயோ அம்மா; நீ முன்பு வளையலை உடைத்தது போதுமே! என் இருதயத்தையும் உடைக்கவேணுமா?' என்று மனசுக்குள்ளே ரங்கம் கடிந்துகொண்டாள்.

"சரி, இலையைப் போடு" என்றார் ஐயர். அவர் சாப்பிட உட்கார்ந்தார்.

ரங்கம் மறுபடியும் உள்ளே புகுந்துகொண்டாள். விட்ட நாடகத்தின் நான்காவது காட்சி தொடங்கியது.

★

நாராயணன் அன்று முதல் அதிகமாக அந்த வீட்டுக்கு வருவதில்லை. பத்மநாபையரிடம் அவசியமான காரியம் இருந்தால் வந்து போவான். ஆனால் ரங்கம் மாத்திரம் அத்தை வீட்டுக்குப் போய் வருவாள். அத்தை பின்னிப் பூச் சூட்டுவாள். நாராயணன் ஏதாவது கதை சொல்வான். தன் அம்மாவைக் கண்டால் நாராயணனுக்குப் பிடிக்கவில்லை என்பதை ரங்கம் ஒருவாறு உணர்ந்து கொண்டாள். அம்மா பேசுவது அவளுக்கே சில சமயம் பிடிக்கவில்லையே!

அந்தப் பாழும் தெய்வத்துக்குக் கொஞ்சங் கூடக் கருணை இல்லை. திடீரென்று ஒரு நாள் அவள் அத்தையை உலகத்திலிருந்து கொண்டு போய் விட்டது. அப்போது நாராயணன் நாலாவது பாரம் படித்துக் கொண்டிருந்தான். தம் தங்கை காலமாகவே நாராயணனைத் தம் வீட்டுக்கே அழைத்துக் கொண்டு வந்து விட்டார் பத்மநாபையர். உள்ளூரில் ஹைஸ்கூல் படிப்பு நன்றாக இல்லையென்று பன்னிரண்டு மைலில் இருந்த நகரத்தில் அவனை அனுப்பிப் படிக்க வைத்தார். அவன் அங்கே நன்றாகப் படித்து வந்தான்.

இங்கே பத்மநாபையர் வரும்படி இறங்கி வந்தது. தம் மருமகன் படிப்புக்கு அவன் நிலத்து வரும்படியோடு தாமும் கொஞ்சம் போட்டுச் செலவு செய்து வந்தார். வர வர அதற்கு வசதி இல்லாமற் போயிற்று. லீவு நாளில் நாராயணன் வந்திருந்தபோது அவனுடன் யோசித்து அவன் நிலத்தை விற்க முடிவு செய்தார். அதை வைத்துக் கொண்டு அவன் எஸ். எஸ். எல். ஸி. வரையில் படிப்பை நிறைவேற்றிக் கொள்ள முடியும் என்று நினைத்தார்; படிப்பு முடிந்தவுடன் கல்யாணத்தையும் கையோடே முடிக்க வேண்டுமென்று திட்டம் போட்டிருந்தார்.

எல்லாம் ஒழுங்காகவே நடந்து வந்தது. ஓய்வு நாட்களில் நாராயணன் நகரத்திலேயே இருந்தான். படிப்பிலே ஊன்றியிருக்கிறான் என்று பத்மநாப ஐயர் நினைத்தார். அது ஓரளவு உண்மையே. ஆனாலும் தம் மனைவியின் கடு கடுப்பே அவனை ஊருக்கு வராமற் செய்தது என்பதை அவர் அப்போது தெளிவாக உணரவில்லை.

ரங்கம் தன் அத்தானின் உடம்பு வளர்ச்சியையும் அறிவு வளர்ச்சியையும் பார்த்துப் பூரித்துப்போனாள். அவளும் வளர்ந்து வந்தாள். அவளுக்கு இப்போது வயசு பன்னிரண்டு. சின்னப் பெண்ணாக இருந்தாலும் அவளுக்குக் குடும்ப நிலை நன்றாகத் தெரிந்திருந்தது.

பரீட்சை எழுதிவிட்டு நாராயணன் ஊருக்கு வந்தான். மேலே என்ன செய்வதென்று யோசித்தான். 'பரீட்சையில் தேறுவதைப் பற்றி அவனுக்குச் சந்தேகமே இல்லை. மேலே காலேஜில் படிக்க வசதி வேண்டுமே! நிலம் விற்ற பணத்தில் கொஞ்சந்தான் எஞ்சியிருந்தது. அதை வைத்துக் கொண்டு என்ன செய்ய முடியும்?

அன்றைக்குப் பரீட்சையின் முடிவு வந்தது. பத்திரிகையில் அவனுடைய எண் வரவில்லை. நாராயணனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அவன் தன் வகுப்பில் முதல்வனாக விளங்கினவன். அவன் தேர்ச்சி பெறாவிட்டால் வகுப்புப் பிள்ளைகள் அத்தனை பேரும் தோற்றிருக்க வேண்டும். 'இதில் ஏதோ சூது இருக்க வேண்டும்' என்று நினைத்தான். அவன் மாமாவிடம், "நான் நகரம் போய் என்ன விஷயம் என்று விசாரித்து வருகிறேன். எப்படி இது நேர்ந்தது என்று எனக்கே தெரியவில்லை" என்றான். அவரும் அதில் ஏதோ சூது இருக்கிறதென்று எண்ணினார்.

ஆனால் அவர் மனைவி அப்படி எண்ணவில்லை. "மருமான் கெட்டிக்காரன் கெட்டிக்காரன் என்று பேரிகையடித்ததெல்லாம் இப்பொழுது தெரிகிறதா? ஜமீன்தார் வீட்டுப் பிள்ளையைப் போல ஹோட்டலில் சாப்பிட்டு ஊர் சுற்றிக் கொண்டிருந் திருப்பான். இங்கே இவர் பாவம், அவன் வீவுக்குக்கூட வராமல் படிக்கிறதாக மனோராஜ்யம் பண்ணிக் கொண்டிருந்தார். இப்போது வண்டவாளமெல்லாம் வெளியாகி விட்டது" என்று விமரிசனம் செய்தாள். நாராயணன் காதில் கேட்கும்படியாகவே பேசினாள். அவள் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் அவன் நெஞ்சில் கூரிய அம்பு போலத் தைத்தது. அப்பாவை இழந்து அம்மாவையும் இழந்து நைந்து போன அவன் இளைய உள்ளத்துக்கு அது தாங்கவில்லை. "நான் என் தலைவிதியைத் துணையாகக் கொண்டு புறப்படுகிறேன். என்னைத் தேட வேண்டாம்" என்று ஒரு நறுக்கு எழுதி வைத்துவிட்டுப் புறப்பட்டு விட்டான்.

அன்று இரவு அவன் வீட்டுக்கு வரவில்லை. மறுநாளும் வரவில்லை. மறுநாள் பத்திரிகையில் அவன் எண் தனியாக வந்தது. முதல் நாள் இதழில் விட்டுப் போயிற்றென்று கண்டு, தனியே வந்த எண்களில் அவன் எண்ணும் இருந்தது.

"அடி படுபாவி! அந்தக் குழந்தையை வீட்டை விட்டு ஓட்டி விட்டாயேடி!" என்று அதைக் கண்டவுடன் கத்தினார் பத்மநாப ஐயர். அவருக்கு முதல் நாள் நடந்தது தெரிந்திருந்தது. போதாக்குறைக்கு இரண்டு நாள் கழித்து நகரத்திலிருந்து ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் ஒரு கடிதம் நாராயணனுக்கு எழுதியிருந்தார். அவன் வகுப்பில் முதல்வனாகத் தேர்ச்சி பெற்றதாகத் தெரிகிற

தென்றும், அதற்காகப் பரிசொன்று கிடைக்கு மென்றும் எழுதித் தம் சந்தோஷத்தைத் தெரிவித்திருந்தார். பத்ம நாபையர் இந்தக் கடிதத்தைக் கண்டவுடன் ருத்திர மூர்த் தியே ஆகிவிட்டார்.

அதுமுதல் ஒரு வாரத்துக்கு அவர் தம் மனைவியைத் தண்டித்ததற்கும் கண்டித்ததற்கும் கணக்கில்லை, வழக் கில்லை. அவரும் அப்படி இருப்பாரா என்று ரங்கம்கூட ஆச்சரியப்பட்டாள். இப்போது நினைத்தாலும் உடம்பு நடுங்குகிறதே.

ஆனாலும் அவ்வளவும் அம்மாவுக்கு வேண்டும். இப் போது கூட அவள் கெட்ட எண்ணம் போகவில்லையே!

நாராயணன் போன இடமே தெரியவில்லை. பத்ம நாபையர் எங்கெங்கோ சொல்லியனுப்பினார். ஒரு செய்தி யும் கிடைக்கவில்லை. அவருடைய பாக்கிய சக்கரமும் மந்தமாகிவிட்டது. அன்றாடம் வயிறு வளர்ப்பதே கஷ்ட மாகிவிட்டது.. நாராயணன் வருவான் வருவான் என்று பார்த்தார்; வரவில்லை.

ஒரு வருஷம் ஆயிற்று; இரண்டு வருஷங்கள் ஆயின; மூன்று நான்கு வருஷங்களும் மறைந்தன. ரங்கம் மணப் பருவம் அடைந்த பெண்ணாகி விட்டாள். அவளை அவ னுக்கே கல்யாணம் செய்து வைக்கவேண்டு மென்றிருந்த அவர் எண்ணத்தில்தான் மண் விழுந்து விட்டதே! இனி மேல் அவன் எங்கே வரப்போகிறான்? வேறு நல்ல வரன் பார்க்கலாமென்றால் அதற்குப் பணம் இல்லை. எப்படியா வது ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்துவிட வேண்டு மென்று பரவாய்ப் பரந்தார்.

அவருக்குத் தம் மகளின் அபிப்பிராயம் தெரியும். 'பாவம்! பேதைப் பெண்! அவன் மறுபடியும் வரப் போகிறான் என்று காத்துக் கொண்டிருக்கிறாள். இத்தனை

பேசியதே இல்லை. எல்லாவற்றையும் இழந்தவள் போல, உடல் குறுகி, தசை கரைந்து, உள்ளம் உருகி இருந்த வளுக்கு அந்தக் கடிதம் புத்துயிரைக் கொடுத்தது.

"ஜோஸ்யரைத்தான் கேட்கிறேன்!" என்று அம்மா சிரித்தபடியே பதில் சொன்னாள்.

★

நாராயணன் வந்தான். கைநிறைய மோதிரம், உடம் பிலே நல்ல அழகு, முகத்திலே வசீகரம், பேச்சிலே பணிவு இவைகளுடன் விளங்கிய நாராயணன், முதலில் மாமிக்கு நமஸ்காரம் செய்தான். பிறகு மாமாவை வணங்கினான். ரங்கம் கண்ணீர் வழிய அறைவாசற்படியில் நின்றாள்.

"ரங்கமா அது! என்ன இப்படி கருவளை மாதிரி இருக்கிறாள்? உடம்புக்கு என்ன?" என்று கேட்டான்.

'ஆம், கருவளையல்தான். உடைந்துபோன கருவளை யல் தான்' என்று அவள் சொன்ன பதில் மனசுக்குள்ளே நின்று விட்டது.

"உடம்புக்கு ஒன்றும் இல்லை. அந்த அந்தக் காலத் தில் இருக்க வேண்டியபடி இருந்தால் அவள் நன்றாகத் தான் இருப்பாள். தெய்வம் அவளைத்தான் அதிகமாகச் சோதித்து விட்டது" என்றார் அவன் மாமா.

அவன் கலகலவென்று பேசினான். சிரித்துச் சிரித் துப் பேசினான். தன் அநுபவங்களைக் கதை கதையாகச் சொன்னான்.

ஊரை விட்டு ஓடினதும் நேரே பம்பாய் போனான். சேட் கடையில் குமாஸ்தாவானான். அவன் கண்ணாடித் தொழிற்சாலை வைத்திருந்தான். அதிலே வேலை செய் தான். தொழில் நுணுக்கங்களை அறிந்தான். அவனுக்கு நல்ல பெயர் உண்டாயிற்று. சேட் வயசானவன். லாபம்

வந்த பணத்தை யெல்லாம் எடுத்துக்கொண்டு மார்வார் போய் விட்டான். போகும்போது நாராயணனிடம் தொழிற்சாலையைக் கொடுத்து விட்டான். இப்போது நாராயணன் தொழில் முதலாளி.

இவ்வளவும் சொல்லிவிட்டு, "எப்போது முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்?" என்று கேட்டான்.

மாமா சிரித்தார். "இவளுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்று உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

"என் மனசுக்குள் ஏதோ ஒன்று அப்படிச் சொல்லிக் கொண்டே இருந்தது. என் வியாபார விஷயமாகச் சேலத்துக்கு ஒரு மாசத்துக்கு முன் வந்தேன். அப்பொழுது விசாரித்த போதும் உண்மை தெரியவந்தது."

★

கல்யாண ஏற்பாடுகள் நடை பெற்றன. நாராயணனே எல்லாவற்றையும் கவனித்துச் செய்தான். பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்கும் போது கல்யாணம் சாமான்யமாகவா இருக்கும்?

கல்யாணத்துக்கு முதல் நாள் ரங்கம் அத்தானிடம் ஒரு கேள்வி கேட்டாள்; "அத்தான், நீங்கள் கண்ணாடித் தொழிற்சாலை நடத்துகிறீர்களே; அதில் வளைகளும் செய்வதுண்டோ?" என்று கேட்டாள்.

"வளையல் இல்லாமலா? உயர்ந்த ரகமான வளையல்களைச் செய்கிறோம். உனக்கு மிகவும் சிறந்த வளைகள் கிடைக்கும். உன் கை அளவு தெரிந்திருந்தால் இப்போதே கொண்டு வந்திருப்பேன். ஆனால் இன்னும் சில மாசம் கழித்துத்தான் உனக்கு வளை போடவேண்டும்."

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

"உலர்ந்து போன உன் உடம்பு ஊற வேண்டும். உன் கையில் இப்போது வளைகளைப் போட்டால் உடைந்து போய்விடும்."

"நீங்கள் பெரிய வளைச் செட்டிபோலப் பேசுகிறீர்களே!"

அவள் உள்ளத்தில் சில நாளைக்குமுன் வளைச் செட்டி கூறினது ஞாபகத்துக்கு வந்தது; அதனால்தான் அப்படிச் சொன்னாள்.

கல்யாணம் மிகமிகச் சிறப்பாக நடந்தது. கல்யாணம் ஆகி ஒரு வாரம் ஊரில் இருந்தான் நாராயணன். பிறகு ரங்கத்தை அழைத்துக் கொண்டு பம்பாய் போய் விட்டான்.



முதல் தீபாவளிக்கு அவர்கள் வரவில்லை. வேலை இருந்ததாம். இரண்டாவது தீபாவளிக்கு ஒரு வாரத்துக்கு முன்பே வருவதாகக் கடிதம் வந்தது. முதல் தையில் கல்யாணம் நடந்தது. சரியாக ஒரு வருஷம் பத்து மாசம் ஆகிவிட்டன. தீபாவளிக்கு வருவதோடு மற்றொரு விசேஷமும் இருந்தது. ரங்கம் பிள்ளையாண்டிருக்கிறாள், வளை காப்பு சீமந்தத்தைத் தீபாவளிக்கு முன்போ பின்போ நடத்திவிடலாமென்று நாராயணன் எழுதியிருந்தான்.

மாப்பிள்ளையும் பெண்ணும் டாக்ஸியில் வந்து இறங்கினார்கள். ரதியையும் மன்மதனையும் போல இருந்தார்கள். ரங்கத்தின் தாய் வாசலில் நிறுத்தி வைத்து ஆலத்தி எடுத்தாள். ரங்கத்தின் உடம்பு நன்றாகத் தேறி வாளிப்பாக இருப்பதைக் கண்டு கண்டு பூரித்துப் போனாள்.



அன்று வளைகாப்பு. வளைச் செட்டி வந்திருந்தான். வழக்கம்போல் வந்திருந்த பெண்களெல்லாம் வளை அடுக்கிக் கொண்டார்கள்.

ரங்கம் அம்மாவைக் கூப்பிட்டாள். "அம்மா, அவர் தம்முடைய தொழிற்சாலையில் உயர்ந்த வளையல்களை எனக்காகவே பண்ணிக்கொண்டு வந்திருக்கிறார். அவை களைப் போட வளைச் செட்டிக்குத் தெரியாது. தவிர எனக்கு ஒரு விரதம்; எனக்கு அவரே வளை அடுக்க வேணும்" என்றாள்.

"ஓஹோ, அவருக்கு வளை உற்பத்தி பண்ணத்தான் தெரியும் என்று நினைத்தேன். வளை அடுக்கக் கூடத் தெரி யுமா?" என்று அம்மா சிரித்தாள்.

"சரி, நான் போட்டுக்கொண்டு வருகிறேன்" என்று உள்ளே போய்க் கதவைத் தாழிட்டுக்கொண்டாள்.

உள்ளே பட்டு ஜமுக்காளத்தில் வளையும் கையுமாக உட்கார்ந்திருந்தான், நாராயணன். அவள் அவன்முன் அமர்ந்தாள். அவன் மெல்ல மெல்ல வளைகளை அடுக் கினான். உருண்டு திரண்டிருந்த கைகளில் வளை அடுக்கு வது சுலபமாக இருந்தது. அவளுக்குத்தான் எத்தனை ஆனந்தம்!

"வாடா வளைச் செட்டி
வந்திறங்கு திண்ணையிலே"

என்று அவன் காதுக்கு மட்டும் கேட்கும்படி அவள் பாடினாள்.

"வந்தேண்டி பூங்குயிலே
வளையை உடைக்காதே"

என்று அவன் எதிர்ப் பாட்டுப் பாடினான். அவள் அவனை நோக்கினாள். அந்தக் கண்ணில் நீர் நிறைந்திருந்தது. பழைய நினைவா? ஆனந்தமா?

# வியாபாரி

"கடவுளே, இன்னும் நீ என்னைச் சோதனை செய்ய வேண்டுமா? யார் யாரோ குழந்தைகள் இல்லை யென்று விரதம் இருந்தும் தல யாத்திரை செய்தும் வருந்துகிறார் கள். அவர்களுக்கு உன்னுடைய கருணையைக் காட்டா மல் இந்த ஏழைக்குக் குழந்தையின்மேல் குழந்தையைக் கொடுக்கிறாயே!" என்று ஆடி வெள்ளிக்கிழமை யன்று விளக்கை ஏற்றி வைத்து முருகன் படத்தின் எதிரே நின்று சரோஜா மிகவும் பய பக்தியோடு கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். அவள் அப்போது கருவுற்றிருந்தாள். இன்னும் நான்கு மாதங்கள் போனால் ஆணோ, பெண்ணோ பிறக்கும். முன்பே அவளுக்கு மூன்று குழந்தைகள் இருக்கின்றன. கடைசிக் குழந்தைக்கு இரண்டு வயசு.

வருவாயுள்ள குடும்பமானால், "கொடிக்குக் காய் கனமா?" என்ற பழமொழியைக் காட்டி அவள் எண் ணம் தவறு என்று சொல்லலாம். அவளுடைய கணவன் ராமசாமிக்கு ஒரு கம்பெனியில் குமாஸ்தா வேலை. ஓடி ஓடி ஓடாக உழைத்தாலும் எண்பது ரூபாய்க்கு மேல் ஒரு தம்படி வருவதில்லை. அதில் வீட்டுவாடகை பதினாறு ரூபாய் போய்விடுகிறது. எஞ்சியுள்ள அறுபத்து நான்கு ரூபாய்களைக் கொண்டு குடும்பத்தை நடத்த வேண்டும். முதல் இரண்டு குழந்தைகள் பள்ளிக்கூடம் போகிறார்கள். இலவசப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கலாம் என்றாலோ, "குழந்தைகளின் நடத்தை கெட்டுவிடும்; படிப்பு வராது"

என்று எல்லோரும் சொன்னார்கள். ஆகவே அவர்களைச் சம்பளம் வாங்கும் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார்கள். மாதம் பிறந்தால் அவர்களுக்குச் சம்பளம் கட்டியாக வேண்டும். குழந்தைகளுக்குப் பாலுந் தயிருமாகப் போட வழியில்லாத அவர்களுக்கு, வியாதி வந்தால் மருந்து வாங்கிக் கொடுக்காமல் முடியுமா? தர்ம ஆஸ்பத்திரியில் கூட மருந்தின் பெயரை எழுதிக் கொடுத்து விலைக்கு வாங்கிக் கொள்ளும்படி சொல்லி விடுகிறார்கள். இந்த நிலையில் வைத்தியத்துக்காக ஆகும் செலவு வேறு.

கூடிய வரையில் வீட்டு விவகாரங்களில் தன் கணவனுக்கு ஒரு விதமான கவலையும் வைக்கக்கூடாது என்றே சரோஜா நினைத்தாள். "அவர் ஒருவர் உழைத்து இத்தனை பேரும் சாப்பிட வேண்டியிருக்கிறது. கம்பெனியில் அவர் உழைத்துச் சிரமப் படுகிறார். அதற்கே அவருக்கு எவ்வளவோ ஊட்டம் வேண்டும். இங்கே பாலாறு நெய்யாறு ஓடுகிறது? ஏதோ கிடைத்ததை வாயிலே போட்டுக்கொண்டு அவர் கம்பெனிக்கு ஓடுகிறார். இதன் நடுவில் உப்பு வாங்கி வா, மிளகாய் வாங்கிவா என்று நான் வேறு ஓட்டலாமா? நாலு நாள் அவர் படுத்துக் கொண்டால் எல்லோருக்குமே கஷ்டம் அல்லவா?" என்று சரோஜா பேசுவதைக் கேட்பவர்களுக்கு, "இவள் இந்த நூற்றாண்டு வாசுகியோ?" என்று எண்ணத் தோன்றும்.

ராமசாமிக்குத் தன் குடும்ப வாழ்க்கை சரோஜாவின் சாமர்த்தியத்தால் நடக்கிறதே ஒழியத் தன் சம்பாத்தியத்தால் நடக்கவில்லை என்பது நன்றாகத் தெரியும். நான்காவது குழந்தை பிறக்கப் போகிறதென்றால், உடனடியாகச் செலவுக்குப் பணம் வேண்டும் என்றுதானே அர்த்தம்? முன்பெல்லாம் அவசரமான, அவசியமான செலவு வந்து

விட்டால் சரோஜா தன் கழுத்தில் மின்னிக்கொண்டிருந்த சங்கிலியை எங்கேயாவது வைத்துப் பணம் வாங்குவாள். பிறகு எப்படியோ வயிற்றைக் கட்டி வாயைக் கட்டிக் கடனை அடைத்து விடுவாள். இப்போது அந்தச் சங்கிலி அவள் கழுத்தில் இல்லை. போன வருஷம் ராமசாமி டைபாயிடு ஜுரத்தில் படுத்துவிட்டான். அதனால் வீடே கலகலத்துப் போய்விட்டது. உதவிக்காக அவனுடைய சொந்தக்கார அம்மாள் ஒருத்தி வந்திருந்தாள். அந்தக் கண்டத்தினின்றும் அவன் தப்பினது சரோஜாவின் மாங்கல்ய பலந்தான் என்று ஊரே சொல்லிக் கொண்டது. அவன் நோயினின்றும் நீங்கி எழுந்தான். சரோஜாவின் கழுத்துச் சங்கிலியும் கைமாறிப் போய்விட்டது; அவள் அதை விற்றுவிட்டாள்.

நான்காவது பிரசவத்துக்குப் பணம் வேண்டுமே; எங்கே போவது? ராமசாமிக்கும் இந்தக் கவலை உண்டாயிற்று. சரோஜா அதிகக் கவலைப் படுபவளாகத் தோன்றாவிட்டாலும் அவளுக்கு உள்ளூற யோசனை இருந்து கொண்டுதான் இருந்தது. மூன்று குழந்தைகளையும் வீட்டிலே விட்டுவிட்டுப் பிரசவ ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டும். அப்போது வீட்டையும் அவளையும் கவனிக்க யாராவது சொந்தக்காரரை அழைத்து வரவேண்டும். வருகிறவர்களுக்குப் பட்டும் பட்டாவளியும் எடுத்துக் கொடுக்கப் போவதில்லை. வரப்போக வழிச் செலவுக்குப் பணம் கொடுக்க வேண்டாமா? இப்படி ஒவ்வொன்றாகச் சேர்ந்தால் ஐம்பது ரூபாய்க்குமேல் ஆகிவிடுமே!

இதுவரைக்கும் திரும்பாத திசையில் ராமசாமியின் யோசனை திரும்பியது. அவனுடைய பெரியப்பாவின் பிள்ளை சிவகுமாரன் உள்ளூரிலே பெரிய வியாபாரி. எல்லோருக்கும் திடீரென்று அதிருஷ்டம் வந்து பணம்

குவிந்தது போல அவனுக்கும் குவிந்தது. உறவினர்கள் என்றால் அவனுக்குக் கொஞ்சம் அபிமானம் இருந்தது. ஏதோ ஒரு சமயத்தில், "ஏன் அப்பா ஊரானுக்கு உழைத்துத் தேய்கிறாய்? அந்தக் கம்பெனியிலே கொடுக்கிற சம்பளத்தை நான் கொடுக்கமாட்டேனா? என்னிடமே வந்து விடேன்" என்றுகூட அவன் ராமசாமியைக் கேட்டிருக்கிறான். லட்சம் வந்தாலும் சொந்தக்காரர்களிடம் வேலை செய்வது இளப்பமென்ற எண்ணத்தால் ராமசாமி அதைக் காதில் வாங்கிக்கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. வாரத்துக்கு ஒரு முறையாவது ராமசாமி சிவகுமாரனைப் போய்ப் பார்த்துவிட்டு வருவான். சிவகுமாரன் அவனை உபசரித்துச் சுமுகமாகப் பேசுவான். ஏராளமான லாபம் வந்ததனால் அவன் குணம் ஒன்றும் மாறவில்லை. உலகத்தில் எல்லோரும் அப்படி இருக்கிறார்களா? அவனுடைய இந்த இயல்பைக் கண்டபோது ராமசாமிக்கு அவனிடத்தில் இருந்த மதிப்புப் பல மடங்கு உயர்ந்துவிட்டது.

இதுவரையில் சிவகுமாரனிடம் எந்த விதமான உதவியையும் ராமசாமி பெற்றதில்லை. இப்போது அவனிடம் ஐம்பது ரூபாய் கடனாக வாங்கினால் என்ன என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அதைச் சரோஜாவிடம் சொன்னான். அவளுக்குத் துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்தது. "இதுவரையில் நீங்கள் ஒரு மனிதரிடம் கேட்டு வாங்கி வழக்கம் இல்லை. இப்போது போய் யாசகம் செய்யும்படி ஆகிவிட்டது. எல்லாம் என்னால்தானே?" என்று சொல்லிக் கண் கலங்கினாள்.

"என்ன இது, அசடாக இருக்கிறாயே! கடன் கேட்டு வாங்கினால் அது யாசகம் ஆகிவிடுமா? உன்னால் வந்தது, என்னால் வந்தது என்று சொல்வது தவறு. கடவுளாகப்

பார்த்துச் செய்கிற காரியம் இது. நீ கவலைப்படாதே'' என்று ராமசாமி ஆறுதல் கூறினன்.

## 2

ராமசாமிக்கே ஆச்சரியம் தாங்கவில்லை; சிவகுமாரன் மறு மொழி ஒன்றும் பேசாமல் ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டான். அப்போது அவனுக்கு, 'கேட்டது தான் கேட்டோம்; நூறு ரூபாயாகக் கேட்காமல் போனேமே!' என்ற நினைவு தோன்றியது. மனிதனுடைய சபல புத்தி! "இந்த ரூபாயை உனக்குச் செளகரியமான போது கொடுத்தால் போதும். உன் மனைவி பெற்றுப் பிழைத்து அந்தச் சங்கதியைச் சொன்னல் அதுவே பணத்தைத் திருப்பிக் கொடுத்ததற்குச் சமானம்'' என்று சொன்னதைக் கேட்டபோது, 'மனுஷன் எவ்வளவு தங்க மானவன்!' என்று பட்டது.

நல்ல வேளையாகச் சரோஜாவுக்குச் சுகப் பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தை பிறந்தது. இந்தச் செய்தியை முதல் முதலில் சிவகுமாரனிடம் வந்து சொன்னபோது அவன் மிகவும் சந்தோஷப்பட்டான். "நீ மிகவும் பாக்கிய சாலி'' என்று பாராட்டினன். அப்படிச் சொன்ன போது அவனிடமிருந்து ஒரு பெருமூச்சு எழுந்தது. அதற்குக் காரணம் மாத்திரம் அப்போது ராமசாமிக்குத் தெரியவில்லை.

ராமசாமிக்கும் சிவகுமாரனுக்கும் வரவர நெருக்கம் அதிகமாயிற்று. ஒரு நாள் சிவகுமாரன் தன் மனைவியை யும் அழைத்துக்கொண்டுபோய் ராமசாமியின் இளங் குழந்தையைப் பார்த்துவந்தான். சிவகுமாரனுடைய மனைவி பங்கஜம் குழந்தையைப் பார்த்துவிட்டு, "குழந்தை கிருஷ்ண விக்கிரகம் மாதிரி இருக்கிறது'' என்று புகழ்ந்

தாள். சரோஜா, "ஆம், கிருஷ்ணனும் ராமனுமாகத்தான் பிறக்கிறார்கள். இங்கே பிறந்து என்ன பிரயோசனம்? அரண்மனையிலே பிறக்கவேண்டியவர்கள் அவர்கள்" என்று அலுத்துக்கொண்டாள்.

"ஏன் அம்மா அப்படிச் சொல்கிறாய்?" என்று பங்கஜம் கேட்டாள்.

"எங்களுக்கு இரண்டு குழந்தைகள் இருந்தாலே போதும். மேலும் மேலும் பிறந்தால் குடித்தனத்தைத் தாங்குவதே சிரமமாகப்போகிறது" என்று சரோஜா விளக்கம் கூறினாள். அதைக் கேட்ட பங்கஜம் பெருமூச்சு விட்டாள்.

அவர்கள் இருவரும் குழந்தைக்கு வெள்ளிப் பாலோடை ஒன்றை அளித்துவிட்டுப் போனார்கள்.

"இவ்வளவு அன்பாக இருப்பார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்று சரோஜா தன் கணவனிடம் கூறினாள்.

"குழந்தைகள் என்றால் அவர்களுக்கு அளவற்ற ஆசை" என்றான் ராமசாமி.

"அவர்களுக்கு எத்தனை குழந்தைகள்?" என்று கேட்டாள் சரோஜா.

"ஒரு குழந்தைகூட இல்லை. அவர்களோடு நெருங்கிப் பழகாதபோது அவர்களைப்போலப் பாக்கியசாலிகளே இல்லை என்றுதான் நினைத்திருந்தேன். பழகப் பழக அவர்களுக்குக் குழந்தை இல்லையென்று தெரிந்தது. அந்தக் குறையினால் புருஷனும் மனைவியும் படுகின்ற மனவேதனை சொல்லி முடியாது."

"அதுதான் நான் குழந்தைகளைப்பற்றிப் பேசினபோது அந்த அம்மாள் பெருமூச்சு விட்டாளோ?"

"அவர்கூடக் குழந்தை என்று பேச்செடுத்தால் பெருமூச்சு விடுகிறார்."

"கடவுளுடைய சோதனையைப் பாருங்கள். வேண்டாம், வேண்டாம் என்கிற இடத்திலே இரண்டு மூன்று நான்கு என்று கொடுக்கிறார். வேதனைப்பட்டுக்கொண்டிருப்பவர்களுக்கு ஒன்றுகூடக் கொடுக்கிறதில்லை."

"அதைப்பற்றிப் பேச நமக்கு அதிகாரம் இல்லை. எல்லாம் தேவ ரகசியம்" என்று சொல்லிச் சிரித்தான் ராமசாமி.

ஒரு நாள் ராமசாமி சிவகுமாரனைச் சந்தித்தபோது பேச்சு வாக்கிலே சிவகுமாரன் கேட்டான்: "ஏன் அப்பா, உன் மனைவி குழந்தைகள் நிறையப் பிறந்துவிட்டன வென்று வேதனைப்பட்டுக்கொள்கிறாளாமே! அன்று குழந்தையை நாங்கள் பார்க்க வந்திருந்தபோது என் மனைவியிடம் அலுத்துக்கொண்டு பேசினாளாம்."

"இருக்கலாம். உடம்பு பலஹீனம் அடைகிறது. குடும்பமும் பெரிதாகி விடுகிறதல்லவா?" என்றான் ராமசாமி.

"கொஞ்ச காலமாக எனக்கு ஒரு யோசனை தோன்றியிருக்கிறது. அந்த விஷயத்தில் என் மனைவி அடிக்கடி தொந்தரவு கொடுக்கிறாள். அதுவும், உங்கள் வீட்டுக்குப் போய்வந்ததிலிருந்து என்னைத் துளைக்க ஆரம்பித்து விட்டாள்."

"என்ன விஷயம்?"

"சொல்லுகிறேன். இனிமேல் எங்களுக்குக் குழந்தை பிறக்காது என்பது நிச்சயம். கடவுள் பணத்தால் எங்களுக்குக் குறை வைக்காவிட்டாலும் இந்தப் பெரிய குறையை வைத்துவிட்டார். இயற்கையாக இந்தக் குறை நிறைவேற இடமில்லை. செயற்கையாக

அதை நிறைவேற்றிக் கொள்ளலாமா என்று தோன்று கிறது.''

ராமசாமிக்குச் சிவகுமாரன் கருத்துத் தெளிவாக விளங்கவில்லை. அவன் முகத்தையே பார்த்துக்கொண் டிருந்தான். சிவகுமாரன் மேலும் சொல்லலானுன்: ''உனக்கோ பல குழந்தைகள் பிறந்துவிட்டன என்று வேதனை. எனக்கோ ஒரு குழந்தை கூட இல்லையே என்று வேதனை. இந்த இரண்டு வேதனைக்கும் பொதுவாக ஒரு பரிகாரம் எனக்குத் தோன்றுகிறது. நீ எனக்குத் தம்பி தானே! அண்ணன் தம்பிகளின் குழந்தைகளை ஸ்வீகாரம் எடுத்துக் கொள்வது நம்மவர்களில் வழக்கந்தான். இந்த ஏற்பாட்டால் உனக்கும் சௌகரியம்; எனக்கும் சந் தோஷம். இதை உன்னிடம் தெரிவிக்க வேண்டுமென்று எண்ணும் போதெல்லாம் வாய் வரவில்லை. எப்படியாவது சொல்லிவிட வேண்டுமென்று தைரியத்தை வருவித்துக் கொண்டு சொல்கிறேன். இப்போது பிறந்திருக்கிற குழந் தையைக் கண்டது முதல் என் மனைவி அதே ஞாபகமாக இருக்கிருள். உங்களிடம் சில காலம் பழகின குழந்தை கள் வேறு வீட்டில் வந்து இருப்பது கஷ்டமாக இருக் கலாம். இளங் குழந்தைக்கு அந்தத் தொந்தரவு இல்லை. இன்னும் சில காலம் கழித்துப் பால் மறந்த பிறகு இந்த ஏற்பாட்டை நிறைவேற்றலாம்.''

ராமசாமிக்கு ஒன்றும் தோன்றவில்லை. தன் குழந்தை ஒரு பணக்காரன் வீட்டில் அவனுடைய வாரி சாக வளரப் போவது அவனுக்குச் சம்மதந்தான். ஆனுல் குழந்தையை விலைக்கு விற்றதுபோல ஆகாதா? சரோஜா வின் மனசு எப்படி இருக்கிறதோ?

ராமசாமி மௌனமாக இருப்பதைப் பார்த்த சிவ குமாரன் மறுபடியும் பேசலானுன்: ''நன்ருக யோசித்துப்

பார். நாங்கள் அன்பினாலே கேட்கிறோம். நீயோ, உன் மனைவியோ தவறாக நினைத்துக் கொள்ளக் கூடாது. ஆற அமர யோசித்துப் பதில் சொன்னால் போதும். ஒன்று மாத்திரம் சொல்வேன். இந்த ஏற்பாடு நிறைவேறினால் உன் குடும்பம், என் குடும்பம் என்ற வேறுபாடே இராது. நான் சம்பாதித்த பணமும், இனிச் சம்பாதிக்கப் போகும் செல்வமும் நம்முடைய குழந்தைக்குத்தான் சேரப் போகின்றன. தன்னைப் பெற்ற பாக்கியசாலி களை அந்தக் குழந்தை காப்பாற்றாமலா இருப்பான்?'' என்று அவன் அடுக்கடுக்காக விஷயங்களை எடுத்துச் சொன்னான்.

ராமசாமி, "வீட்டில் கலந்து யோசனை செய்து கொண்டு தெரிவிக்கிறேன்'' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான்.

## 3

சரோஜா இப்படி உணர்ச்சி வசப்படுவாள் என்பதை ராமசாமி எதிர் பார்க்கவில்லை. விஷயத்தைச் சொன்ன வுடனே சரோஜாவுக்குக் கோபமும் துக்கமும் மாறி மாறி வந்து விட்டன. "போதும் இந்தப் பணக்காரர் உறவு. நாம் இந்தக் குழந்தையைக் காப்பாற்ற மாட்டோமென்று எண்ணிக் கேட்கிறார்களோ? என் உயிருக்கு உயிரான இந்தக் கண்ணனை நான் விலைக்கு விற்று விடுவதா? எவ்வளவு துணிச்சல் அவர்களுக்கு? நான் பாவி! பேச்சுவாக்கில் குடும்ப சமாசாரத்தைச் சொன்னது தவறாகப் போய்விட்டது. குடும்பம் பெரிது என்று பெற்ற குழந்தையைத் தூக்கி எறிந்து விடுவார்களா? தகப்பனார் இன்னாரென்று தெரியாத குழந்தைக்கு அல்லவா அந்தக் கதி வரும்? இவர்களுக்கு உண்மையாக இரக்கம் இருக்கு

மானல் எத்தனையோ அநாதைக் குழந்தைகள் இருக்கிருர்களே; அவர்களை வளர்க்கட்டுமே" என்று அவள் தன் இயல்புக்கு மாருகப் பல வார்த்தைகளைக் கொட்டி விட்டாள்.

"அவன் எவ்வளவோ நயமாக, அன்பாகத்தான் கேட்டான். யோசித்துப் பதில் சொல்லும்படிதான் சொன்ஞன். கொடுக்கத்தான் வேண்டும் என்று கட்டாயப் படுத்தவில்லை" என்று ராமசாமி நிதானமாகச் சொன்ஞன்.

சரோஜாவின் ஆத்திரம் அடங்கவில்லை. "வியாபாரி பின்னே எப்படிப் பேசுவார்? ஒருவர் கையிலே இருக்கிற சரக்கை வாங்குவதற்கு நயமாகப் பேசவேண்டுமென்று அவருக்குத் தெரியாதா? குழந்தையைச் சிறு பிராயத்திலே வாங்கிக் கொண்டால் அதற்கு ஏக்கம் இராது என்ருரே. குழந்தையின் ஏக்கம் ஒன்றுதான் அவருக்குத் தெரியுமோ? தாய் என்று ஒருத்தி இருக்கிருளே, அவளுக்கு ஏக்கம் உண்டாகுமே என்பதை அவர் எண்ணிஞரா?"

"இரண்டு குடும்பத்துக்கும் ஒட்டுதல் அதிகமாகும். குழந்தை இரண்டு குடும்பத்துக்கும் சொந்தமாக வளரும். நீ அதற்குத் தாய் என்று உள்ள உரிமை எந்தக் காலத்திலும் மாருது."

"ஐயோ! கடவுளே! உங்களுக்கு அவர்கள் பேசியது நியாயம் என்று படுகிறது போலல்லவா தோன்றுகிறது? உலகில் எத்தனையோ பேர் இப்படிப் பிள்ளைகளை உயிரோடு பறி கொடுத்து விட்டுப் பிற்காலத்தில் கஷ்டப் படுகிருர்கள். அந்தச் சோகக் கதைகளை நீங்கள் கேட்கவில்லை போல் இருக்கிறது. அவர்கள் சொத்தையே நமக்கு எழுதி வைத்தாலும் என் கண்ணனை நான் கொடுக்க

மாட்டேன்" என்று அவள் சொன்னாள்; இப்போது அவளுக்கு அழுகையே வந்து விட்டது.

"இந்தா சரோஜா, அழாதே; நாம்தாம் கஷ்டப் படுகிறோம்; இந்தக் குழந்தையாவது சுகப்படட்டும்; இதனால் நமக்கும் சௌக்கியம் கிடைக்குமே என்று எண்ணினேன். நான் அவர்களிடம் ஒப்புக்கொண்டு வந்து விடவில்லை."

"பக்கத்து வீட்டு வேலைக்காரிக்கு ஏழு குழந்தைகளாம். அவ்வளவு பேரையும் அவள் கைவேலை செய்து முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறாள். மனிதன் கொடுத்துத்தானா மனிதன் சௌக்கியம் அடைய முடியும்? கடவுள் அவரவர்களுக்கு வகுத்தபடி தான் நடக்கும். அவன் கொடுத்த குழந்தையை அவன் வளர்க்க அருள் செய்ய மாட்டானா? மரம் வைத்தவன் தண்ணீர் விடுகிறான்."

"சரி, இதை மறந்து விடு. அவர்கள் நல்லவர்கள். அவர்களைப் பற்றித் தவறாக எண்ணக் கூடாது."

"நல்லவர்கள் என்பது இப்பொழுது தெரிகிறதே! ஐம்பது ரூபாய் கேட்டபோது தடங்கல் இல்லாமல் தந்தார் என்று சொன்ன போதே நான் நினைத்தேன். 'இவர் வியாபாரி ஆயிற்றே; அவ்வளவு சுலபத்தில் எப்படித் தந்தார்?' என்று ஆச்சரியப்பட்டேன். இப்போதுதான் தெரிகிறது, அந்த மனிதர் ஒன்று போட்டு நூறு எடுப்பவரென்று. இன்னும் ஒரு வாரத்துக்குள் எப்படியாவது அந்த ஐம்பது ரூபாயை அவரிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்."

சரோஜாவின் பேச்சில் இன்னும் காரம் குறையவில்லை. அவள் உணர்ச்சி மிக மிக மெல்லிய கம்பிதான். ஆனாலும் மின்சாரம் பாய்ந்த கம்பி. அது கண்ணுக்கே தெரியாது. அதைத் தொட்டுவிட்டாலோ உடம்பையே

உலுக்கிவிடும். ராமசாமி மேலே பேசவில்லை. வெளியே போய்விட்டான்.

மறுவாரம் எப்படியோ ஐம்பது ரூபாயை அவன் கையில் சரோஜா கொடுத்து, "இதை உங்கள் அண்ணுவிடம் கொடுத்துவிட்டு வாருங்கள்" என்ருள்.

"ஏது பணம்?"

"அதைப்பற்றிப் பிறகு சொல்கிறேன். இதைக் கொடுத்துவிட்டு வாருங்கள். பிறகுதான் எனக்குத் தூக்கம் வரும்" என்ருள் அவள்.

அவன் சில நாட்களாகச் சிவகுமாரன் வீட்டுப் பக்கமே போகவில்லை. போனுல் ஸ்வீகாரப் பேச்சு வருமே; அதற்காகத்தான். இப்போது போக வேண்டிய அவசியம் நேர்ந்து விட்டது.

"வீட்டிலே கலந்து யோசித்தேன். அவள் இந்தக் குழந்தையிடத்தில் உயிராக இருக்கிருள். முதல் குழந்தையினிடங் கூட இவ்வளவு ஆசையாக இருந்ததில்லை. அரைக் கணம் குழந்தையைக் கீழே விடுவதில்லை. அதனுல்........."

"சரி, இஷ்டமில்லாவிட்டால் வற்புறுத்த வேண்டாம். நீங்கள் படும் கஷ்டத்தைப் பார்த்தபோது இப்படி ஒரு யோசனை தோன்றியது; சொன்னேன். குடும்பத்தில் வரவு செலவு சரிக்கட்டுவதற்கு எத்தனையோ பாடு பட வேண்டியிருக்கிறது. என் தம்பியென்றே அபிமானம் வைத்து விட்டமையால் இதைச் சொன்னேன். குடும்பக் கஷ்டத்துக்கு வேறு உதாரணமே வேண்டாம். நீ ஐம்பது ரூபாயைக் கடனுக வாங்கினுயே; அதைத் திருப்பிக் கொடுக்க முடிகிறதா? வேறு யாரிடமாவது வாங்கியிருந்தால் எவ்வளவு தடவை கேட்டிருப்பான்?"

ராமசாமி சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பர்ஸை எடுத்து, "உங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுக்

கத்தான் வந்தேன். நீங்கள் செய்த உபகாரத்தை நான் என்றைக்கும் மறக்கமாட்டேன்'' என்று பணத்தை நீட்டினான்.

சிவகுமாரனுக்கு மூஞ்சியில் அடித்தது போலாகி விட்டது. சிறிது நேரம் அவன் பிரமித்துப் போனான்; பிறகு சமாளித்துக் கொண்டான்.

''நான் உன்னைப் பணம் கேட்க வில்லையே! சௌகரியப் பட்டபோது கொடுக்கலாம் என்றுதானே சொன்னேன்?'' என்றான் அவன்.

''சௌகரியப்பட்டதால்தான் திருப்பிக் கொடுக் கிறேன்'' என்று புன்னகை பூத்தபடியே ராமசாமி பதில் சொன்னான்.

அந்த ஐந்து நிமிஷ நேரத்தில் சிவகுமாரனுடைய வியாபார மனப்பான்மை புரிந்துவிட்டது. ஏதோ சிறிது நேரம் பேசி விட்டு வீடு வந்து சேர்ந்தான்.

## 4

சரோஜா இறந்துவிட்டாள். ஆம்; ஐந்தாவது பிரசவத் துக்காக ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தாள். ஏதோ கோளாறு வந்து குழந்தை வயிற்றிலே மாண்டு போயிற்று. டாக்டர்கள் என்ன சிரமப்பட்டும் சரோஜாவை மீட்க முடியவில்லை.

கம்பெனி உண்டு, தான் உண்டு என்று இருந்த ராம சாமி இப்போது துணையில்லாதவனாகி விட்டான். மாசந் தோறும் சம்பளத்தை வாங்கிக்கொண்டு வந்து கொடுப்ப தோடு சரி; மற்ற விஷயங்களில் அவன் அந்த வீட்டில் ஐந்தாவது குழந்தையாகவே இருந்தான். எந்த விதமான கவலையும் இல்லாமல் அவன் வாழ்ந்தான். இப்போது அவன் தலையில் பேரிடி விழுந்துவிட்டது. நான்கு

குழந்தைகளை அவன் தலையில் கட்டி விட்டு அந்த உத்தமி போய்ச் சேர்ந்துவிட்டாள். அவளுக்குச் சொர்க்கம் நிச்சயமாகக் கிடைக்கும். ஆனால் ராமசாமிக்கு இனி நரக வாழ்க்கையல்லவா ஆரம்பமாகிவிட்டது!

தன்னைத் தானே கவனித்துக்கொள்ளத் தெரியாதவன் அவன். சட்டைக்குப் பொத்தான் இல்லையென்றால் அவனுக்குத் தெரியாது; அவள்தான் அதைத் தெரிந்துகொண்டு வாங்கிப் போடுவாள். அப்படி வாழ்ந்தவனுக்கு நாலு குழந்தைகளை வைத்துக் காப்பாற்றுவது எளிய காரியமா? மற்றொரு கல்யாணம் செய்து கொள்ளலாமென்றாலோ அவனுக்கு வயசாகிவிட்டது. அன்றியும் சரோஜாவோடு வாழ்ந்த உள்ளம் வேறு யாரை ஏற்றுக்கொள்ளும்? சரோஜா இறந்த துக்கத்தை அவனால் தாங்க முடியவில்லை. ஒரு மாதம் லீவு போட்டு விட்டான். குழந்தைகளை எப்படிக் காப்பாற்றுவது என்ற யோசனையிலே மூழ்கியிருந்தான். உறவினர்களில் வயசு சென்ற கிழவி ஒருத்தியை அழைத்து வந்து வீட்டோடு வைத்துக் கொள்ளலாம் என்ற யோசனை தோன்றியது. செலவுக்குக் கட்ட வேண்டுமே! அந்தக் கிழவி செட்டும் கட்டுமாக இருப்பாளா? மூன்றும் பேருக்குத் தெரியாமல் காதோடு காது வைத்தாற் போல் குடித்தனத்தை எவ்வளவு கௌரவமாகச் சரோஜா நடத்தி வந்தாள்! அதை நினைக்க நினைக்க அவனுக்கு வயிற்றில் என்னவோ வேதனை செய்தது.

இப்படி மனசு குழம்புவதும், சிறிது தெளிந்து யோசனை செய்வதும், மறுபடி கலங்குவதுமாகப் பொழுது போய்க் கொண்டே இருந்தது. திடீரென்று பழைய நினைவு வந்தது. 'சிவகுமாரன் கண்ணனை ஸ்வீகாரம் செய்துகொள்ள விரும்பினானே. அப்போது சரோஜா இஷ்டப்படவில்லை. இப்போது அவனைப் போய்க் கேட்டால்...?' இது நல்ல

யோசனையாகப் பட்டது. இரண்டு மூன்று நாட்கள் இந்த யோசனை அவன் மனசில் ஊறி உரம் பெற்றது. நான்காவது நாள் செயலுருவம் அடைந்தது.

சிவகுமாரன் துக்கம் கேட்க வந்திருந்தான் முன்பு. இப்போது ராமசாமி அவனைத் தேடிச் சென்றான். அவன் மறுபடியும் சரோஜா இறந்ததைப் பற்றியே பேசி ஆறுதல் கூறினான். ராமசாமி மெல்லத் தன் கருத்தைச் சொல்ல அடிப் போட்டான். "சரோஜாவைப் போல உலகத்தில் பெண்ணைப் பார்க்க முடியாது. இனி எனக்கு என்ன வேண்டும்? இந்தக் குழந்தைகளைப் பற்றி எண்ணும் போதுதான் வயிறு பகீரென்கிறது. எப்படி நாலு குழந்தைகளையும் வைத்துக் காப்பாற்றப் போகிறேனோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்" என்றான்.

"ஆமாம், கஷ்டந்தான். என்ன செய்வது? கடமை என்ற ஒன்று இருக்கிறதே, அதைச் செய்யத்தானே வேண்டும்?"

"ஒரு யோசனை எனக்குத் தோன்றுகிறது. உங்கள் வீட்டில் கண்ணனிடம் அதிக ஆசை என்று சொன்னீர்கள். அவனை நீங்கள் ஏற்றுக் கொள்வதாக ஓர் ஏற்பாடு கூட நடப்பதாக இருந்தது..."

"ஓகோ, அதுவா? அதை இன்னும் நீ ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயா?"

"நீங்கள் எவ்வளவோ ஆசையாகக் கேட்டதை நான் மறப்பேனா? உங்கள் ஆசை நிறைவேற வேண்டுமென்றே கடவுள் இப்படிச் செய்து விட்டாரோ, என்னவோ!"

"சே சே! பைத்தியம் மாதிரி பேசாதே. ஏதோ ஒரு நாள் பேசினோம். உன் மனைவி இறந்து போனது நான் அந்த விஷயத்தைப் பற்றிச் சொன்னதனால்தான் என்று சொல்ல வருகிறாய்?"

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? நான் அப்படி நினைப்பேனா? உங்களுக்கு இருந்த ஆசையைப்பற்றிச் சொல்ல வந்தேன். இப்போது கண்ணன் என் குழந்தை அல்ல; உங்கள் குழந்தை. உங்களிடமே கொடுத்துவிடுகிறேன். அவனால் எனக்கு ஒரு லாபமும் வேண்டாம். அவன் சௌக்கியமாக இருந்தால் போதும்." ராமசாமி கண்ணில் நீர் ததும்பியது.

"அவ்வளவு சுலபமாகச் சொல்லி விடலாமா? குடும்ப விஷயமெல்லாம் எங்கள் வீட்டுக்காரியின் விருப்பத்தைப் பொறுத்தது. அவளைக் கேட்டுச் சொல்கிறேன்" என்று பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தான் சிவகுமாரன்.

மறுநாள் ராமசாமி வந்தான். சிவகுமாரன் விடையைத் தயாராக வைத்திருந்தான். "மனிதர்களின் மனசிலே நினைத்ததை நினைத்த அப்போதே செய்துவிட வேண்டுமென்று சொல்வார்கள். அப்போது அந்தக் குழந்தையைப் பார்த்துவந்த புதிதில் ஏதோ அவளுக்குச் சபலமாக இருந்தது. 'என்ன இருந்தாலும் அயலார் பிள்ளை அயலார் பிள்ளைதானே? சொந்தக் குழந்தை யாகுமா?' என்று அவள் இப்போது சொல்கிறாள். குழந்தை பிறந்து இரண்டு வருஷமாவதற்குள் அம்மாவைக் கொன்றுவிட்டதே, இங்கே வந்தால் என்ன ஆகுமோ என்று பயப்படுகிறாள். இங்கே வந்தபிறகு குழந்தைக்கு ஏதாவது நோய் நொடி வந்தால், உலகம் அதை வளர்த்ததையெல்லாம் சொல்லாது. குழந்தையில்லாப் பாவிகளுக்கு மற்றவர்கள் குழந்தையை வளர்க்கத் தெரியவில்லை என்று பொல்லாப்புச் சொல்லும். அது தவிர, அன்றைக்குக் குழந்தையைக் கொடுக்க விரும்பாத சரோஜா இப்போது நம்மிடையே இல்லாவிட்டாலும் இங்கே நடப்பதை அவள்

ஆத்மா பார்த்துக்கொண்டிருக்கும். அவள் விரும்பாத இதைச் செய்தால் அந்தப் பத்தினி அங்கிருந்தபடியே சாபம் இடுவாள். அது வேறு எங்கள் தலையில் வந்து விடியும்......''

சிவகுமாரன் நாள் முழுவதும் காரணங்களை அடுக்கிக் கொண்டே போவான் என்ற பயம் ராமசாமிக்கு ஏற்பட்டு விட்டது.

"நான் போய்வருகிறேன்'' என்று சொல்லிப் புறப் பட்டுவிட்டான். அவன் உள்ளக் கண்முன்னே சரோஜா நின்றுகொண்டு, "அவன் வியாபாரி!'' என்று சொல்வது போல இருந்தது.

# ராஜ பவனி

"முதலியாரே!" என்று கூப்பிட்டார் ஜமீன்தார் முத்தையத் தேவர்.

"எசமான்" என்ருர் ஜமீன் மானேஜர்.

"இனிமேல் நீர் முதலியாரும் அல்ல; நாம் எசமானும் அல்ல."

முதலியார் சிறிது யோசனையில் ஆழ்ந்தார்.

"சின்னச் சின்ன ஆசாமிகளெல்லாம் ராஜாவாகவும், மகாராஜாவாகவும் ஆகும்போது நாம் மட்டும் சும்மா இருக்கலாமா? நமக்கு என்ன, சொத்து இல்லையா, சுகம் இல்லையா? இனிமேல் நாம் மகாராஜா; நீர் நம் மந்திரி. ஆமாம். ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும். இனிமேல் அதற்கு இதற்கு என்று பணத்தைச் செலவு செய்யக் கூடாது. மகாராஜாவுக்கு வேண்டிய அங்கங்களையெல்லாம் நாம் சேர்த்துக்கொள்ள வேண்டும். மகாராணியிடமும் இதைச் சொல்லிவைக்கிறேன். அவள் நகையென்றும் நட்டென்றும் ஆசைப்பட்டுப் பணத்தைச் செலவழித்துக் கொண்டிருக்கிருள். அதை நிறுத்திவிட வேண்டும். அப்போதுதானே மகாராணியாகலாம்?"

மானேஜர் முதலியார் ஜமீன்தாரைக் கூர்ந்து கவனித்தார். நடுவிலே ஏதாவது பேசினுல் அவருக்குக் கோபம் வந்துவிடும் என்று தெரியும். ஆகவே, "எசமான்" என்று மாத்திரம் சொன்னுர்.

"சட், என்ன முட்டாள் மந்திரியாக இருக்கிறீர்! இப்போதுதானே சொன்னேம்? நம்மை மகாராஜா என்று

அழைக்கவேண்டும்; தெரியுமா?"—முதலியாரை 'முட்டாள்' என்று வைதாலும் மந்திரிப் பதவி கொடுத்ததை மாற்றவில்லை மகாராஜா!

"நான் என்ன செய்யவேண்டும் என்று உத்தரவாகிறதோ, அப்படிச் செய்யக் காத்திருக்கிறேன், மகாராஜா!"

"சபாஷ்! அதுதான் அழகு. இனிமேல் நம்முடைய ஸம்ஸ்தானம் வையப்பன்பட்டி அல்ல; வையை நாடு. இதற்கு நாம் மகாராஜா; நீர் மந்திரி. இப்போதைக்கு நீரே முதல் மந்திரி, இரண்டாவது மந்திரி, மூன்றாவது மந்திரி எல்லாம். நாளடைவில் மற்ற மந்திரிகளுக்கு ஏற்பாடு செய்வோம்."

"எசமான்!—இல்லை—மகாராஜா!"

அன்று முதல் வையை நாடு ஸம்ஸ்தானம் உதயமாயிற்று. மகா ராஜாதி ராஜ ராஜ மார்த்தாண்ட ராஜ கம்பீர ராஜகுல திலக ராஜ வைபோக முத்தைய ராஜ பூபதி அவர்கள் ஒவ்வொரு நாளும் கொலுவீற்றிருக்கத் தொடங்கினர். அவருக்குத் தங்கத்தால் சிங்காதனம் செய்து அதில் இருந்து ராஜரீகம் நடத்தவேண்டுமென்று ஆசை. ஆனால் ஸம்ஸ்தானத்துப் பொக்கிஷம் அதற்கு இடம் கொடுக்காததனால் மரத்தால் சிங்காதனம் அமைத்து அதன்மேல் தங்கமுலாம் பூசிய வெள்ளித் தகட்டை மூடிச் சிங்காதனம் அமைத்துக்கொண்டார். அவர் அமைத்துக் கொண்டாரா, என்ன? எல்லாம் மந்திரி மார்க்கசகாய தேவ குலசேகர ராயர் செய்த காரியம். வெறும் முத்தையத் தேவராக இருந்த ஜமீன்தார் ஒரு மூட்டை பட்டத்தைச் சுமக்கும்போது, மந்திரியான மார்க்கசகாய தேவ முதலியாருக்குமட்டும் பட்டத்துக்குப் பஞ்சமா? அவரும் மார்க்கசகாய தேவ குலசேகர ராயராகிவிட்டார்.

புதிய மகாராஜாவுடைய அறிவின் அளவைப் பழைய முதலியாராகிய புதிய மந்திரி நன்றாக அறிந்து கொண்டவர். முழுப் பைத்தியமாக இருந்து விட்டால் அறையில் போட்டுப் பூட்டிவிடலாம். அரைப் பைத்தியமாக இருந்தால் ஏதாவது சிகிச்சை செய்யலாம். இதுவோ கால் பைத்தியம். என்ன செய்வது? சொன்னபடி செய்வதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனால் சொன்னபடி செய்கிறதென்றால், அதற்கு வசதி வேண்டாமா? இருக்கிறதைக் கொண்டுதானே எல்லாம் செய்ய வேண்டும்? பொக்கிஷத்தில் இருக்கும் பணத்தையும் தம்முடைய புத்தியாகிய செல்வத்தையும் வைத்துக்கொண்டு செய்யவேண்டியதைச் செய்தார் மந்திரி. அந்த வகையில்தான் சிங்காதனம் தயாராயிற்று.

ஒரு நாள் மகாராணி அழைக்கிறாளென்று மந்திரிக்கு உத்தரவு வந்தது. அவர் போனார். அங்கே 'மகாராணி' முகத்தில் ஈயாடாமல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். மந்திரியைக் கண்டவுடன், "என்ன முதலியாரே! இதெல்லாம் நன்றாக இல்லையே! இவருக்கு என்ன, பைத்தியம் பிடித்துவிட்டதா? இந்தக் கூத்தெல்லாம் எதற்காக? மகாராணிப் பட்டம் வேண்டும் என்று நான் அழுதேனா?" என்று கேட்டாள்.

"நான் என்ன மகாராணி, செய்யட்டும்..." என்று ஆரம்பித்தார் மந்திரி.

"அந்த இழவு மகாராணிப் பட்டத்தை விட்டுத் தொலையும். அம்மா என்றே சொல்லும்" என்று அந்த அம்மாள் சீறி விழுந்தாள்.

"மகாராஜா திடீர் திடீரென்று நினைத்துக் கொண்டு ஏதாவது செய்து விடுகிறார். அவர் மூளையில் இந்த மகாராஜாப் பித்து பலமாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

பகவான்தான் அதை மாற்ற வேண்டும். நான் வேலைக் காரன்தானே? என்றால் என்ன செய்ய முடியும்? நடு நடுவில் முட்டுக் கட்டை போட்டுப் பார்க்கிறேன்."

"அதெல்லாம் கிடக்கட்டும்; இப்போது ஒரு பெரிய விபரீதம் அல்லவா நடக்கும் போல இருக்கிறது? இவர் என்னை மகாராணி யாக்கிவிட்டாராம். நான்தான் பட்டமகிஷியாம். மகாராஜா வென்றால் ஒரு ராணி இருந்தால் போதாதாம். குறைந்த பட்சம் நாலு பேராவது இருக்க வேண்டுமாம். அந்த நாலு பேருக்கும் நான் தலைவியாக—மகாராணியாக—இருக்க வேண்டுமாம்! இந்தக் கூத்தை யாரிடம் போய்ச் சொல்கிறது?" என்று அந்த அம்மாள் சொன்னாள்.

"அப்படியா சமாசாரம்? என்வரைக்கும் அந்த விஷயம் வரவில்லை. வந்தால் ஏதாவது சமாதானம் சொல்லிப் பார்க்கிறேன். ஆனால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. சரி, நான் வருகிறேன்."

மந்திரி புறப்பட்டுவிட்டார்.

அடுத்த நாள் மகாராஜா மந்திரியிடம் தமக்கு இன்னும் மூன்று தேவிமார்களைக் கல்யாணம் செய்துகொள்ளும் உத்தேசம் இருப்பதைத் தெரிவித்தார். மந்திரி பேச ஆரம்பித்தார்: "மகாராஜாவிடம் சில முக்கியமான விஷயங்களை விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டும். நம்முடைய ராஜ்யம் இப்போதுதான் உதயமாகி யிருக்கிறது. இதற்கு வேண்டிய அங்கங்களை யெல்லாம் ஒரேயடியாகச் சேகரித்துக்கொள்ள முடியாது. ராணிமார்கள் நாலு பேராவது இருந்தால்தான் மகாராஜாவின் ராஜ வைபவம் சிறப்பாக இருக்கும். தசரத சக்ரவர்த்தி அறுபதினாயிரம் ராணிகளுடன் இருந்தாராம். ஆனால் அதற்கு முன் ராணிகளுக்கு ஏற்றபடி அந்தப்புரம் கட்டவேண்டும்.

இப்போது மகாராஜாவுக்கு ஐம்பது வயசு ஆகிறது. இந்த வயசில் இளம் வயசு ராணிகளைக் கல்யாணம் செய்து கொண்டால் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வரவேண்டும்...''

''சபாஷ் மந்திரி, உம்முடைய புத்தியை மெச்சினேம்.''

''ஆகையால் தக்க பாதுகாப்புள்ள அந்தப்புரத்தையும் அதற்கு ஏற்ற காவலாளர்களையும் ஏற்படுத்தின பிறகே ராணிமார்களைக் கொண்டு வரவேண்டும். பழைய காலத்தில் அந்தப்புரத்தில் ஆண்களைக் காவல் வைப்பதில்லை. பெண்கள் காவலுக்குத் தகுதி யில்லாதவர்கள். அலிகளைத் தான் காவலாக வைத்திருந்தார்கள்.''

''அப்படியா? இந்த விஷயம் எனக்குத் தெரியாதே!''

''மகாராஜா பழைய சரித்திரங்களை வாசித்தால் இது தெரியவரும். அலிகள் அந்தப்புரங்களில் இருந்தார்கள். ஆகவே ராணிகளைத் தேடிப் பிடிப்பதற்கு முன்னுலே அலிகளைத் தேடிப் பிடித்துக் காவலாளராக நியமிக்கவேண்டும். சிலரைப் பணியாளராகவும் நியமிக்கலாம்.''

''சரி, அப்படியே செய்துவிடுகிறது'' என்ருர் மகாராஜா.

''இதெல்லாம் அரண்மனைக்குள்ளே நடக்கிற விஷயம். பிறகு பார்த்துக்கொள்ளலாம். முதலில் வெளிப்படையாக நாலு பேர் கண்முன்னுலே மகாராஜா சிறப்பாக இருக்கவேண்டும். ராஜ சின்னங்களெல்லாம் அமைத்துக் கொள்ளவேண்டும்.''

''மகாராஜ சின்னம் என்று சொல்லும்'' என்று திருத்தினுர் மகாராஜா.

“முதலில் செய்யவேண்டியது நிறைவேறிவிட்டது. சிங்காதனம் அற்புதமாக அமைந்து விட்டது. இனிமேல் வாகனங்களைத் தயார் செய்யவேண்டும்.”

“என்ன என்ன வாகனம் வேண்டும்?” என்று கேட்டார் மகாராஜா.

“பழைய காலத்தில் அரசர்களிடம் ரத கஜ துரக பதாதிகள் ஆகிய நான்கு படைகள் இருந்தன. கொடி, மாலை, திருச்சின்னம், கிரீடம் முதலிய அடையாளங்கள் இருந்தன. பட்டத்து யானை இருந்தது. அரசருக்கென்று தனியே குதிரை இருந்தது. இவற்றை யெல்லாம் ஒவ்வொன்றாகத் தேடிச் சேர்த்துக்கொண்ட பிறகு அந்தப்புரத்து விஷயத்தைக் கவனிக்கலாம். மகாராஜா என்றால் பல மந்திரிகள் வேண்டும். ஆனாலும் இப்போதைக்கு நான் மாத்திரம் இருக்கிறது போல, மகாராஜாவுக்கு இப்போதைக்கு மகாராணி இருந்தால் போதும்.”

“பின்னே, இப்போது எதைச் செய்வது?” என்று கேட்டார் மகாராஜா.

“மகாராஜாவுக்கு அதைத்தான் சொல்ல வருகிறேன். ரத கஜ துரக பதாதிகளாகிய படைகள் வேண்டும். ஆனால் அவைகளுக்கு இப்போது அவசரம் இல்லை. நாம் எந்த நாட்டோடும் சண்டை செய்யப் போகிறதில்லை.”

“ஆனாலும் அந்தஸ்து வேண்டாமா?”

“வேண்டியதுதான். அவற்றைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். முதலில் வாகனங்களை வாங்கலாம் என்று தோன்றுகிறது. குதிரை, யானை என்ற இரண்டையும் வாங்கினால் பிறகு மற்ற மகாராஜ சின்னங்களை வாங்கலாம். குதிரையை முதலில் வாங்கலாமா? யானையை வாங்கலாமா? மகாராஜாவின் திருவுள்ளக் குறிப்பை அறிந்து மேற்கொண்டு ஏற்பாடு செய்யவேண்டும்.”

மகாராஜா சற்று யோசனை செய்தார்.

"இரண்டும் வேண்டியதுதான். ஆனால் குதிரை என்ன, பெரிய விஷயமா? சாமானிய ஆசாமி யெல்லாம் குதிரை வைத்திருக்கிறான். முதலில் யானைதான் வாங்கவேண்டும்" என்று உற்சாகத்தோடு சொன்னார்.

"மகாராஜா தம்முடைய ராஜ வைபவத்திற்கு ஏற்ற படியே கம்பீரமாக எண்ணமிடுவதைக் கேட்க எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. மகாராஜா அற்ப சொற்பமானதையே நினைக்கிறதில்லை. சரி, உத்தரவுப்படியே யானை வாங்க ஏற்பாடு செய்கிறேன்."

இவ்வாறு அன்றைய மந்திராலோசனை முடிந்தது. மந்திரி, "ராணிமார்கள் இப்போதைக்கு வரமாட்டார்கள். அந்த விஷயத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்" என்று மகாராணிக்குச் சொல்லி ஆறுதல் உண்டாக்கினார்.

மற்றொரு நாள் மந்திராலோசனை நடந்தது. மகாராஜாவும் மந்திரி மார்க்க சகாய தேவ குலசேகர ராயரும் பேசிக்கொண்டிருந்தனர்.

"என்ன மந்திரி, யானை வாங்கும் விஷயம் எப்படி இருக்கிறது?" என்று மகாராஜா விசாரித்தார்.

"மலையாளத்தில்தான் யானை வாங்கவேண்டும். யானை விலையை விசாரித்தேன். இரண்டாயிரம் மூவாயிரம் பொன் கொடுத்தால்தான் கிடைக்கும். மகாராஜாவின் குளங்களுக்குத் தூருவெடுத்த செலவு இந்த வருஷம் எதிர்பாராமல் அதிகமாகிவிட்டது. ஆகவே, யானைவாங்கப் பணம் தேறாதென்று தெரிகிறது."

"என்ன! மூவாயிரம் பொன் தேறாதா? என்ன, இது வேடிக்கையாக இருக்கிறதே!"

"மற்றச் செலவுகளுக்கெல்லாம் பணத்தை வைத்துக் கொண்டல்லவா யானைக்குச் செலவு செய்ய வேண்டும்?

மகாராஜா அந்தப்புரத்தைப் பற்றிச் சொன்னது ஞாபகம் இல்லையா? அந்தப்புரம் கட்டவும், ராணிமாரைக் கல்யாணம் பண்ணவும் பணம் ஒதுக்கி வைக்கவேண்டும் அல்லவா? அதுதானே முக்கியமான காரியம்? அதற்கு முன்னாலே அங்கமாகச் செய்யவேண்டியதுதானே இதெல்லாம்? அந்தப் பணத்தை இதற்குச் செலவழித்து விட்டால் நாளைக்கு ராணிமார் மாலையும் கையுமாக நிற்கிறபோது மகாராஜா பணம் இல்லையென்று அவர்களுக்கு முன் விழிக்கலாமா?''

மகாராஜா அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டார். மீசையைக் கோதினார். "சே சே! அப்படி ஏமாந்து போகலாமா? முன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்'' என்றார்.

"இத்தனையையும் யோசனை செய்து பார்த்தால் யானையே வாங்கவேண்டாம் என்று தோன்றுகிறது. ஆனால் யானை இல்லாமல் மகாராஜ சின்னம் பூர்த்தியாகாது.''

"என்னதான் செய்யப்போகிறீர்?'' என்று ஆவலுடன் கேட்டார் மகாராஜா.

"கடவுளைக் காட்டிலும் பெரியவர் ஒருவர் இல்லை. எல்லா மகாராஜாக்களுக்கும் மேலான மகாராஜா அவர். அவருக்குப் பல வாகனங்கள் உண்டு. அவருக்கும் யானை உண்டு. மன்னர்களும் கடவுளுக்குச் சமானம் என்று சொல்வார்கள். ஆகையால் கடவுள் எழுந்தருளும் யானையைப்போல ஒரு யானையை மகாராஜாவுக்கு ஏற்பாடு செய்யலாம் என்று தோன்றுகிறது.''

மகாராஜா மந்திரியின் கருத்தைப் புரிந்துகொள்ளவில்லை. "எப்படி ஏற்பாடு செய்வீர்?'' என்று கேட்டார்.

"ஒன்று சொல்ல மறந்துவிட்டேனே. மலையாளத்து யானைகளைப்பற்றி விசாரித்தேன். யானைக்கு அகாத விலை

கேட்கிருர்கள். போனுல் போகிறது என்று பார்த்தால் அதைக் காப்பாற்றுவது என்பது மகா கஷ்டமாம். காட்டிலே வாழும் யானையை இங்கே கொண்டுவந்தால் அதற்கு மதம் உண்டாகிவிடுமாம். போனமாசங்கூட ஒரு கோவில் யானைக்கு மதம்உண்டாகி ஊரையே அழித்துவிட்டதாம்."

"பிறகு.........?"

"பிறகு என்ன? ஊரெல்லாம் சேர்ந்து அதை அழித்து விட்டார்கள். நாம் யானை வாங்கிஞேமாஞல் யானையின் மேல் மகாராஜா ஏறி ஊர்வலம் வரவேண்டும். அது மிகவும் அபாயமானது. நான் அதற்குச் சம்மதித்தாலும் மகாராணி சம்மதிக்கவே மாட்டார்கள்."

"ஆமாம், அவளுக்கு எப்போதும் கோழை மனசுதான்" என்று தம் மனைவியைப் பற்றிச் சொல்லிக் கொண்டார் ஜமீன்தார்.

"நம்முடைய ராஜ்யத்திலுள்ள குடிகளும் மகாராஜா யானையின்மேல் ஏறக்கூடாதென்றுதான் சொல்வார்கள். ஏருமல் இருப்பதாஞல் யானை எதற்கு? அதை வாங்கிக் கட்டிக்கொண்டு தீனிபோடுவதில் யாருக்குச் சுகம்? அந்தத் தீனிச் செலவு வேறு இருக்கிறது. ஆகையால் நான் ஒரு யோசனையை மகாராஜாவிடம் தெரியப் படுத்த விரும்புகிறேன்."

"என்ன? சட்டென்று சொல்லும்."

"யானை மாதிரியே, ஏன், யானையைப்போல இரண்டத்தனை பெரிதாக, நல்ல மரத்தால் ஒரு வாகனம் பண்ணி அதன்மேல் மகாராஜாவை ஏற்றிப் பவனிவரச் செய்யலாம் என்று தோன்றுகிறது."

"அந்த யானை நடக்குமா?"

"யானை நடந்தால் நாம் ஓடவேண்டியதுதான். இந்த யானையைக் கீழே சக்கரங்கள் வைத்து இழுத்துவரச் சொல்லலாம்."

ஜமீன்தார் சிறிதுநேரம் யோசனை பண்ணினார். கடைசியில் ஒப்புக்கொண்டார்.

யானை வாகனம் தயாராகிக்கொண்டு வந்தது. மந்திரி அதை எவ்வளவு சாமானிய மரத்தால் செலவு சுருக்கமாகச் செய்யலாமோ, அவ்வளவு சுருக்கமாகச் செய்து வந்தார். ஒரு நல்ல நாளில் மகாராஜா யானையின்மேல் பவனி வருவதாக ஏற்பாடு ஆயிற்று.

மகாராஜாவுடன் மகாராணியும் சேர்ந்து வருவதுதான் முறை. அதற்கு வேண்டிய வாத்தியங்கள், வாண வேடிக்கை எல்லாவற்றையும் மந்திரி திட்டம் செய்தார்.

"நம்முடைய குடி ஜனங்கள், இரண்டு பேரும் பவனி வந்தால்தான் அந்தமாக இருக்கும் என்கிறார்கள்" என்று மந்திரி மகாராஜாவிடம் சொன்னார்.

"அப்படியே செய்துவிட்டால் போகிறது" என்றார் மகாராஜா.

மகாராஜா இந்த விஷயத்தை மகாராணியிடம் தெரிவித்தார்.

"நன்றாக இருக்கிறது! இந்த வயசில் ஊராருக்கு முன்னாலே உங்களுடன் உட்கார்ந்து ஊர்வலம் போகிறதாவது! வெட்கமாக இல்லை?" என்று கேட்டாள்.

"மகாராணி என்றால் அப்படித்தான் வரவேண்டும்" என்றார் மகாராஜா. அவள் வரத்தான் வேண்டும் என்று வற்புறுத்திக் கட்டாயம் செய்தார்.

யானைப் பவனி ஆரம்பமாயிற்று. யானையை மிகச் சிறப்பாக அலங்கரித்திருந்தார்கள். ஊரெல்லாம் வீதி நிறைய நின்று வேடிக்கை பார்த்தார்கள். அயலூரி

விருந்து இந்தப் பைத்தியக்கார ஜமீன்தாரைப் பார்க்கப் பலர் வந்திருந்தார்கள். வாண வேடிக்கையும் நடந்தது.

யானை வாகனத்தின்மேல் மகாராஜாவும், மகாராணியும் ஏறிக்கொண் டிருந்தார்கள். அதை இழுத்துவரும்போது மேடு பள்ளங்களில் அவர்கள் உடம்பு குலுங்கியது. மகாராணி நடுங்கினாள். கீழே குதித்துவிட முடியாது. மிகவும் உயரமானதல்லவா? ஏறும்போது ஏணி வைத்து ஏறினார்கள். மகாராஜாவும் யானையின்மேல் உட்கார முடியாமல் தவித்தார். ஓரிடத்தில் சிறிது பள்ளமாக இருந்தது. அங்கே யானையை இழுத்துப் போகும்போது நொடித்தது. மகாராணி பயத்தினால் மகாராஜாவைக் கட்டிக்கொண்டாள். அவரும் அவளைக் கட்டிக்கொண்டார். ஜனங்கள் அதைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தார்கள். மகாராணி, "போதுமே உங்கள் பவனி! என் மானம் போகிறது. என்னைக் கீழே இறக்கி விடுங்கள்" என்று கத்தினாள். இறக்கி விடாவிட்டால் கீழே குதித்துக் காலை முறித்துக்கொள்வாள் என்று பயமாகப் போய்விட்டது.

மகாராஜா சுற்று முற்றும் பார்த்தார். எல்லோரும் சிரித்தார்கள். அப்போதுதான் அவருக்கு உறைத்தது. அவமானமும் தோன்றியது.

"முதலியாரே!" என்று கத்தினார்.

மந்திரி வந்தார்.

"கொண்டுவாரும் ஏணியை!" என்று உத்தரவிட்டார்.

அவர் தயாராக வைத்திருந்த ஏணியைக் கொண்டு வந்தார்.

ஐந்து நிமிஷத்தில் ஊர்வலம் கலைந்தது.



"முதலியாரே! அந்த யானையை என்ன செய்தீர்?" என்று கேட்டார் ஜமீன்தார்.

"நம் ஊர்க் கோயிலில் இருந்த யானை வாகனம் உடைந்து போய்விட்டது. இதைக் கோயிலுக்குக் கொடுத்துவிட்டேன்" என்றார் முதலியார்.

"நல்ல காரியம் செய்தீர்!" என்றார் ஜமீன்தார்.

இவர் புதிய ஜமீன்தார்; முத்தையத் தேவரின் பிள்ளை. முத்தையத் தேவர் இப்போது 'அரண்மனை'யில் ஒரு பெரிய அறையில் உலாவிக் கொண்டிருக்கிறார். "ஏய் மந்திரி! அந்த யானைக்குச் சரியாக அம்பாரி கட்டச் சொல். நம்முடைய மூன்றாவது ராணியை இங்கே வரச் சொல்" என்பனபோன்ற உத்தரவுகளைப் போட்டுக்கொண்டே இருக்கிறார்.

ஆம்; அவர் இப்போது முழுப் பைத்தியமாகிவிட்டார்!

# ஒரே குடும்பம்

கூத்தங்குடி வட்டாரத்தில் வேலாயுதம் என்ற பெயரைச் சொன்னால் போதும், வாயை மூடிக்கொண்டிருந்த குழந்தை அழ ஆரம்பிக்கும். சின்ன வயசிலிருந்தே அடங்காப் பிடாரியாக இருந்த வேலாயுதத்துக்கு எப்போதுமே முரட்டுத்தனம் அதிகம். அந்தக் காலத்திலெல்லாம் அவனுக்கு முரட்டு வேலாயுதம் என்ற பெயரே பிரசித்தமாக வழங்கியது. யாரோடு பார்த்தாலும் சண்டையும் சச்சரவுமாகவே இருப்பான். வேளைக்கு இரண்டு சண்டையைக் கொண்டு வராவிட்டால் அவனுக்குப் பொழுதே போகாது.

அவனுக்குப் படிப்பு எங்கே வரும்? ஏதோ நாலு பாரம் வரையில் பேருக்குப் படித்தான்; அவ்வளவுதான். அதற்குள் அவன் இருந்த வகுப்புப் பலகைகளெல்லாம் குழிந்து போயின. அவனுடைய தகப்பனார் சின்ன வெற்றிலை பாக்குக் கடை வைத்துப் பிழைத்தவர். அதில் என்ன, ஆயிரம் ஐந்நூறு லாபம் வந்துவிடப் போகிறது? கிடைத்ததை வைத்துக் கொண்டு மானமாய்ப் பிழைத்து வந்தார். உண்டிக் கலயத்தில் காசு போடுகிறது போல எண்ணி அவனைப் படிக்க வைத்தார். அது என்னடாவென்றால் ஓட்டைக் கலயமாக இருந்தது.

ஒரு விதமாகப் பள்ளிக் கூடத்துக்குத் தலை முழுகி விட்டு 'உத்தியோகம்' செய்யப் புகுந்தான். அவனுக்குத் தாசில் உத்தியோகமா கிடைக்கும்? அவன் தகப்பனாருடைய யோக்கியப் பொறுப்பைத் தெரிந்து கொண்டிருந்த பாலகுரு செட்டியார் தம் ஜவுளிக் கடையில் அவனை

அமர்த்திக் கொண்டார். மாசம் எட்டு ரூபாய்ச் சம்பளந் தான். ஆனாலும் அந்த வேலையையாவது ஒழுங்காகச் செய்து வந்தால் போதும் என்று அவன் தகப்பனார் நினைத்தார்.

வேலாயுதத்துக்கு இந்த முழம் போடுகிற வேலை பிடிக்கவில்லை. ஜவுளிக் கடையில் இருந்த தையல்காரர் மதார் சாஹிபோடு சிநேகம் செய்து கொண்டு தையல் வேலையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கற்றுக் கொண் டான். தனியாக ஒரு தையல் யந்திரம் வாங்கித் தொழில் நடத்த வேண்டும் என்ற சுதந்தர உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று. பணத்துக்கு எங்கே போவது? கடையில் வேலையைக் கவனிக்காமல், தையல் யந்திரத்தின் அடியிலே அறுபது நாழிகையும் கிடந்தால் சம்பளம் கொடுக்கிறவர் சும்மா இருப்பாரா? "தம்பி, வேலாயுதம், நீ ஜவுளிக் கடைக்கு லாயக்கில்லை. இரும்புப் பட்டறைக்குத்தான் லாயக்கு" என்று சொல்லிவிட்டார்.

செட்டியார் சொன்ன வாக்கு ஒருவாறு பலித்து விட்டது. அம்மா அப்பாவுக்குத் தெரியாமல் ஊரை விட்டு ஓடிப்போன வேலாயுதம் இப்போது ஓர் ஆலைத் தொழிலாளியாக இருக்கிறான். தினத்துக்கு ஒன்றரை ரூபாய் சம்பளம். குத்தங் குடியில் சொக்கநாதர் ஆலையில் மூவாயிரம் தொழிலாளிகள் வேலை செய்தார்கள். தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் தொழிலாளிகள் வந்து அதில் அமர்ந்திருந்தார்கள்.

வேலாயுதம் வாயடி கையடி அடிப்பதில் கெட்டிக் காரன். அவன் இருக்கும் இடத்துக்கு விளம்பரமே வேண்டாம். அவனுடைய சேஷ்டைகளே அவனை வெளிப்படுத்திவிடும். அரை நிமிஷம் சும்மா இருக்கச் சொல்லுங்கள்; அவனால் முடியவே முடியாது. அவனை எப்போதும் தனியே பார்ப்பது அரிது. நாலு பேரோடு

கூடிக் கூத்தடித்துக் கொண்டே இருப்பான். மூவாயிரம் தொழிலாளர்கள் ஒன்று சேரும் இடத்தில் அவனுக்கு ஜமாவுக்கு என்ன குறைச்சல்?

அவன் தகப்பனும் தாயாரும் தம்முடைய பிள்ளை ஜீவனத்துக்கு வழி தேடிக்கொண்டதை அறிந்த திருப்தி யோடு கண்ணை மூடிக்கொண்டார்கள். அவனுடைய மாமன் தன் மகளை அவனுக்குக் கல்யாணம் செய்துகொடுத் தான். இப்போது வேலாயுதம் குடியும் குடித்தனமுமாக வாழ்ந்து வந்தான்.

பள்ளிக்கூடப் படிப்பு அவன் மண்டையில் ஏற வில்லையே ஒழிய அவனுடைய புத்திசாலித் தனத்துக்குக் குறைவில்லை. எப்போதும் சளசள வென்று பேசின பழக் கமோ, அல்லது வாய்ச் சண்டை போட்டதன் பயனோ ஏதாவது ஒரு விஷயத்தை எடுத்து வாதம் செய்ய ஆரம் பித்தால், எதிராளியின் பலஹீனங்களை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கிக்கொண்டே போவான். கிண்டல், பரி காசம், தொனியை மாற்றிப் பேசுதல்—இந்தத் தந்திரங்க ளெல்லாம் அவனுக்குத் தெரியும். இத்தனை சக்தியை வைத்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா? தொழிலாளர் சங்கம் நிறுவினான். அவனே தலைவனானான்.

முதலில் தொழிலாளர் சங்கம் தொழிலாளர் அறிவு விளக்கத்தைக் கருதித்தான் ஆரம்பமாயிற்று. அதற்குப் பேர்கூட ஏதோ கல்வி என்றும் கலையென்றும் சொல்வார் களே, அப்படி இருந்தது. பிறகு தொழிலாளர்களுடைய நன்மைகளைக் கவனிக்க வேண்டும் என்ற கொள்கையைச் சங்கம் தீவிரமாகக் கடைப்பிடித்தது. அது முதல் அது தொழிலாளர் சங்கம் என்ற நாமத்தைப் பெற்றது.

அகில உலகத் தொழிலாளர் சபைகளைப் பற்றிப் பத்திரிகைகளில் வருவனவற்றை ஒன்று விடாமல் படித்

தான் வேலாயுதம். அவன் இப்போது பேச்சிலே கெட்டிக்காரன் என்ற பேர் வாங்கிவிட்டான். யார் என்ன பேசினுலும் நேர்முகமாகவோ கிண்டலாகவோ மறுத்துப் பேசுவான்.

ஆகவே தொழிலாளர் நலங்களைப் பற்றிய அவனுடைய பேச்சில் முதலாளிகளின் சுயநலக் கண்டனமே அதிகமாக இருக்கும். அந்த ஆலே முதலாளியைப் பற்றிக் குறிப்பிட்டு ஒன்றும் சொல்லாவிட்டாலும், பொதுப்படப் பகற்கொள்ளைக்காரர்களென்றும், பிறர் உழைப்பில் வாழ்கிறவர்களென்றும் முதலாளிகளைத் தூஷிப்பதில் அவன் வல்லவனுக இருந்தான். அவனுடைய காரசாரமான பேச்சில் ஈடுபட்ட தொழிலாளர்கள் அத்தனைபேரும் அவனை மிகவும் பெரிய தலைவனுகவே எண்ணத் தலைப்பட்டனர். அவனுடைய பேச்சின் உணர்ச்சி, வேறு சிலர் உள்ளங்களிலே ஊறி அவர்களிடத்திலும் புரட்சி ஊற்றைக் கிளப்பியது. அதனுல் சில குட்டித் தலைவர்களும் கிளம்பினுர்கள்.

ஆலே முதலாளி இந்தச் சங்க வளர்ச்சியிலே முதலில் அத்தனை கவனம் செலுத்தவில்லை. கூடிய வரையில் தொழிலாளர்களின் நலத்தைக் கவனித்து ஒரு குடும்பம் போல் நடத்த வேண்டும் என்ற கொள்கை உடையவராகையால் தொழில் தகராறு ஒன்றும் ஏற்பட வழியில்லாமல் இருந்தது.

அவருக்குப் போதாத காலமென்றுதான் சொல்ல வேண்டும்; இந்தத் தொழிற் சங்கத்தைக் கண்டு ஏதோ சந்தேகம் அவர் உள்ளத்திலே புகுந்துகொண்டது. ஜாடைமாடையாக அதைப்பற்றிக் கொஞ்சம் தாழ்வாகப் பேசத் தொடங்கினுர். அது நெருப்புப் பொறிபோலப் பற்றிக் கொண்டது. "முதலாளி வர்க்கம் எல்லாம் ஒரு ஜாதி

தான். பாம்புக் குட்டியில் நல்லதென்றும் கெட்டதென்றும் வேறு பிரித்துச் சொல்ல முடியுமா?" என்று உபமான உபமேயங்களுடன் வேலாயுதம் வீட்டிலே பேசிக்கொண்டிருந்தான். பிறகு வீதியிலே பேசினான். மேடையிலும் பேசும்படியாகிவிட்டது.

ஒரு சின்ன சமாசாரம்: ஒரு தொழிலாளி அவசரமாகப் பக்கத்து ஊருக்குப் போய் வந்தான்; அரை நாள் வேலைக்கு வரவில்லை. முன்பெல்லாம் இதைப்பற்றி யாரும் கவனிக்க மாட்டார்கள். இப்போது முதலாளி காதுக்கு இது எட்டியது. அவர் மனசுக்குள்ளும் புகுந்து கொண்டது. முன்பே இருந்த சந்தேகமும் சேர்ந்தது. "பயல்கள் ஏதோ சூழ்ச்சி பண்ணுகிறார்கள்" என்று எண்ணினார். இந்த எண்ணத்துக்கு ஒத்து ஊதச் சில மந்திரிமார்களும் சேர்ந்தார்கள். நேரடியாக எதையும் கவனித்துச் செய்து வந்த முதலாளி இப்போது மத்தியஸ்தர்களையும் மானேஜரையும் கொண்டு விவகாரம் பேசும் நிலை வந்துவிட்டது. தொழிலாளிக்குச் சம்பளப் பிடித்தம் செய்யும்படி உத்தரவு பிறந்தது.

## 2

அமைதியான குளத்தில் சிறிய கல்லைப் போட்டாலும் அலை கிளம்பும். அந்த அலைகள் நாலு பக்கமும் பரவுமேயொழிய ஒரு பக்கமாக மாத்திரம் பரவுவதென்பதில்லை. முதலாளி மனசு வேறு பட்டதால் அமைதிக்கே பங்கம் வந்துவிட்டது. தொழிலாளிகளிடையும் கசமுசல் ஏற்பட்டது. "முதலாளி வர்க்கமே பொல்லாதது" என்று ஆரம்பித்த பிரசாரம், "இந்த முதலாளி மட்டும் என்ன வாழ்ந்தார்?" என்ற வாலையும் சேர்த்துக் கொண்டது. சந்தேகம் என்று ஆரம்பித்தால் அதற்கு

எல்லாமே அநுகூலமாகத் தோன்றும். தொழிலாளிகள் பொறுப்புணர்ச்சி யில்லாமல் ஏமாற்றப் பார்க்கிறார்கள் என்ற கருத்து முதலாளிக்கு வேரூன்றியது. தொழிலாளிகளுக்கோ முதலாளி மனப்பான்மையும், அடக்கு முறையாசையும் அவருக்கு வந்துவிட்டன என்று தோன்றியது. பிறகு சட்டதிட்டங்கள், விதிகள், விலக்குகள், சம்பிரதாயங்கள், உரிமைகள், கடமைகள் என்றெல்லாம் இரு சாராரிடத்தும் வார்த்தைகளும் வாதங்களும் எழுந்தன.

தொழிலாளர்களிடையே கிளர்ச்சியை வளர்க்க வேலாயுதம் ஏற்பட்டான். சும்மா மெல்லும் வாய்க்கு அவல் வேறு கிடைத்துவிட்டது. நெருப்பைக் கக்கும் பிரசங்கங்களை அவன் கக்கினான். தொழிலாளர்களிலே சிலருக்கு இந்தக் கிளர்ச்சி அவ்வளவாகப் பிடிக்கவில்லை. வயசான ஆசாமிகள் பட்டும் படாமலும் இருந்தார்கள். இளவட்டங்கள் மாத்திரம் துடிதுடித்துக் கொண்டிருந்தனர். வழக்கமாகக் கொடுக்கும் பஞ்சப்படி போதாதென்ற ஒரு விஷயத்தை முன்னிட்டுக் கொண்டு போராட்டம் ஆரம்பமாயிற்று.

எல்லாம் கிரமமான போக்கிலே போயிருந்தால் இந்தப் பஞ்சப்படி இரண்டு மாசங்களுக்கு முன்பே கிடைத்திருக்கும். அதற்குத்தான் தடை வந்துவிட்டதே! "கணக்குப் பார்க்கிறோம்" என்றும், "அதிக லாபம் இல்லை" என்றும் முதலாளி சமாதானம் கூறினார். தொழிலாளர் கூட்டத்தில், "பொய்க் கணக்குத் தயாராகிறது" என்றும், "திருட்டு லாபம் அதிகம்" என்றும் பிரசாரம் நடந்தது. போனஸ் வேறு கொடுக்க வேண்டும் என்ற ஒரு புதிய விஷயத்தைத் தொழிலாளர் சேர்த்துக்கொண்டார்கள்.

கீறிவிட்டு ஆற்ற வேண்டிய புண் அடிப்பாரம் போட்டுக்கொண்டு கிளம்பிப் புரையும் ஓடியது. வேறு ஊர்களிலிருந்து தொழிலாளர்களுக்காகச் சேவை செய்யக் கங்கணம் கட்டிக் கொண்ட தலைவர்கள் வந்தார்கள். உள்ளூருக்குள்ளே இருந்த விவகாரம் இப்போது அயலூருக்கும் எட்டிப் பத்திரிகைகளிலும் இடம் பிடித்துக் கொண்டது. தொழிலாளர் கட்சிக்குப் பிரசார பலம் வரவரப் பெருகியது. முதலாளி கட்சியில் ஆத்திரமும், குண்டுணிகளின் உபதேசமும் பலமாயின.

அயலார் வந்து உள்ளூர் விவகாரத்தில் தலையிடுவது முதலாளிக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அயலார் தம் காதில் வந்து ஓதும் மந்திரங்களை மாத்திரம் உற்சாகமாகக் கேட்டார். இதற்கென்றே பிறந்த அவதாரங்கள், இங்கிருப்பதை அங்கே சொல்லியும் அங்கிருப்பதை இங்கே சொல்லியும் பிழைத்து வந்தார்கள்.

இந்த மனக் கசப்பு வளர்ந்து வந்தது. முதலாளி சில தொழிலாளர்களை வேலையை விட்டு எடுத்தார். ஆலையில் உற்பத்தி குறைந்தது. மனமில்லாமல வேலை செய்யும் இடத்தில் உற்சாகம் இருக்க நியாயம் இல்லை; பிறகு உற்பத்தியிலும் இழுபறி ஏற்படுவதுதான் இயல்பு.

முதலாளி கணக்குப் பார்க்க ஆரம்பித்தார். "பணச் செலவு அதிகமாகிறதே ஒழியப் போன மாசம் நடந்த வேலை இந்த மாசம் நடக்க வில்லையே!" என்று அங்கலாய்த்தார். "இந்தப் பயல்கள் தம்மையே நாம் நம்பியிருப்பதாக எண்ணித் தலையாட்டம் போடுகிறார்கள். அயலூரிலிருந்து அதிகப் பணம் கொடுத்தாவது ஆளை வருவித்தால் இவர்கள் கொட்டம் தானே அடங்கும். மூன்றும் பேருக்குத் தெரியாமல் மாசம் ஆனவுடன் பசுக் கறந்தாற்போலச் சம்பளத்தை வாங்கிக்கொண்டு விசுவாச

மாக வேலைசெய்து வந்தகாலத்தில் மானமாய்ப் பிழைத்தார்கள். இப்போது வாலாட்டத் தொடங்கி விட்டார்கள். அந்த வாலை ஒட்ட நறுக்கத்தான் வேண்டும்" என்று முதலாளியின் 'கிளப்' நண்பர் சொன்னார். அந்த நண்பருடைய உபதேசப்படி அயலூரிலிருந்து ஆட்களைப் பிடித்துவந்தார். தொழிலாளிகளிடையே பரபரப்பு அதிகமாயிற்று. வந்த தொழிலாளர்களுக்கும் அமைதியில்லை. நான்காம் நாளே வாங்கின முன் பணத்துக்கு வழி சொல்லாமலே ஓடிவிட்டார்கள்.

இன்னும் முதலாளியின் வர்மம் போகவில்லை. அயலூரிலிருந்து இனிமேல் யாரும் வர முடியாதென்று தெரிந்த பிற்பாடு தொழிலாளர்களுக்கும் முரட்டுத்தனம் அதிகமாயிற்று. வேலாயுதம் நாளுக்கு மூன்று பிரசங்கம் செய்தான். அவன் போட்ட தூபத்தினால் தொழிலாளர்கள் கடமையை மறந்து வெறி கொண்டார்கள். ஆலையில் வேலை நடந்தால் நடந்தது; இல்லாவிட்டால்கேட்பார் இல்லை.

முதலாளிக்குக் கொஞ்சம் ஞானோதயம் ஆயிற்று. இடை நின்ற தரகர்களை நம்பியதால் தமக்கு லாபம் ஒன்றும் இல்லையென்பதை உணர்ந்தார். பழையபடி தொழிலாளர்களுடைய தொடர்பை நேரடியாக வைத்துக் கொண்டு, நடந்ததை மறந்து, தட்டிக்கொடுத்து வேலை வாங்கவேண்டுமென்ற தீர்மானத்துக்கு வந்தார்.

## 3

அன்று கூட்டத்தில் வேலாயுதம் அக்கினிக் குழம்பைக் கக்கினான். ஆலை முதலாளி தனியாகத் தன்னைக் கண்டு பேச விரும்புவதாக எழுதிய கடிதத்தைக் கூட்டத்தில் படித்தான். "என்னைத் தனியே மிரட்டிப் பணிய வைப்பதாக இவர் எண்ணியிருந்தால் அந்தத் தந்திரம் இந்த வேலாயுதத்தினிடம் செல்லாது. உலகம் முழுவதும்

தொழிலாளர் புரட்சிவெள்ளம் பரந்து ஓங்கிவருகிறது. இதனிடையே முதலாளிகள் மூழ்கி, இருந்த இடம் தெரியாமல் போகப் போகிருர்கள்'' என்றெல்லாம் ஆவேசம் வந்தவனைப் போலப் பேசினுன்; கர்ஜித்தான். அவன் முதலாளியைக் காணப் போகவில்லை. தள்ளி விட்ட ஆட்களை மீண்டும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று தொழிலாளர் சங்கத் தலைவன் என்ற முறையில் அவன் முதலாளிக்கு எழுதியிருந்தான். முதலாளி கோடைக்கானலுக்குப் போனவர் தம்மை நேரிலே வந்து சந்திக்கும்படி எழுதியிருந்தார். ''உண்டு இல்லையென்று சொல்லி விடாமல் பொறியினிடம் எலியை அழைப்பது எதற்கு?'' என்று வேலாயுதம் உறுமினுன்.

''வர முடியாது'' என்று எழுதிவிட்டான். அதற்குள் மானேஜர் முக்கியமான குட்டித் தலைவன் ஒருவனை வேலையினின்றும் நீக்கிவிட்டார். இது பெரிய சங்கடத்தில் வந்து முடிந்தது. தொழிலாளர் சங்கம் வேலை நிறுத்தத் தீர்மானத்தை நிறைவேற்றி உடனடியாகவே அமலுக்குக் கொண்டுவந்து விட்டது. முதலாளியோ ஊரில் இல்லை. அவருக்குத் தந்தி பறந்தது.

ஊருக்கு வந்து சேர்ந்தார். எல்லாம் ஒரே குழப்பம். ஆலை வேலைநிறுத்தம் தொடங்கி இரண்டு நாட்களாயின. மேலே ஒரு வாரமும் ஆயிற்று. இதுவரையில் வெறும் வாக்கு வாதத்திலும் மனஸ்தாபத்திலும் போது போயிற்று; ஆலை மாத்திரம் நில்லாமல் ஓடிக்கொண்டிருந்தது. முதலாளிகரு வேலை ஒரு விதமாக நடைபெற்று வந்தது. தொழிலாளிகளுக்கும் வாரந்தோறும் சம்பளம் கிடைத்து வந்தது.

இப்போதோ வேலை நிறுத்தம் வேலையிலும் சம்பளத்திலும் மண்ணைப் போட்டுவிட்டது. முதலாளி வகை

தெரியாமல் விழித்தார். தொழிலாளிகள் ஆவேசப் பேச்சினுல் சில நாள் பிடிவாதமாக இருந்தனர். வேலாயுதம் வெறி மூட்டினுன்.

ஒரு வாரத்துக்கு மேல் தொழிலாளர் குழுவில் பெரிய குடும்பம் படைத்தவர்களால் சமாளிக்க முடியவில்லை. "குற்றம் யாருடையதாக இருந்தாலும், முதலாளியிடம் நேருக்கு நேர் மனம் விட்டுக் குறைகளைச் சொன்னுல் ஏதாவது நன்மை கிடைத்திருக்கும்" என்ற நினைப்பு அவர்களுக்கு உண்டாயிற்று. பட்டினியின் வேதனையும் கலந்து கொள்ளவே இந்தக் கருத்தை மெல்ல மெல்லச் சில நண்பர்களிடம் வெளியிட்டனர். இளவட்டங்கள் இதைக் கேட்டவுடன் குதியாய்க் குதித்தனர். "பழம் பெருச்காளிகள்! கையாலாகாத கோழைகள்! துரோகிகள்!" என்ற பட்டத்தை அவர்களுக்குச் சூட்டினர். சண்டை எதற்காக? தீர்க்கவேண்டியவர் யார்? முறை என்ன?— இந்த விஷயங்களைப் பற்றிய யோசனையேயின்றிப் பிரசாரம் நடந்து வந்தது.

வேலை நிறுத்தத்தில் மனசு பற்ருத கூட்டம் வரவரப் பெருகி வந்தது. இளைய வீரர்களுக்கோ அதைக் கண்டு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இந்த நிலையில் தினந் தோறும் வேலாயுதம் தொழிலாளர்களை ஒரு முறை சுற்றிப் பார்த்து வருவது வழக்கம். அவன் சில காலமாகத் தனக்கு அடுத்தபடி உள்ள குட்டித் தலைவனிடம் சில விஷயங்களை ஒப்பித்துவிட்டு அவ்வப்போது மாத்திரம் வரத் தொடங்கினுன். "பிள்ளை குட்டிக்காரனை நம்பக்கூடாது" என்ற ரகசிய வார்த்தை முன்பே இளையவர் கூட்டத்தில் பரவியிருந்தது. வேலாயுதமும் பிள்ளைகுட்டிக் காரனுக இருந்தாலும், அவன் விஷயத்தில் அந்த நினைப்பு வராமல் இருந்தது. அவன் தன் கடமைகளை உதவித் தலைவனிடம்

ஒப்பித்தபோது சிலருக்கு அவனிடத்தில்கூடச் சந்தேகம் தோன்றியது.

4

"முதலாளி கடிதம் எழுதினபோது போகமாட்டேனென்று சொன்னவர் இப்போது முதலாளியைத் தாமே பார்க்க ஏற்பாடு செய்கிறுரென்று கேள்வி" என்றுன் ஒரு தொழிலாளி.

"என்னப்பா உளறுகிறுய்? புலி பசித்தால் புல்லைத் தின்னுமா? அவர் வீட்டில் யாருக்கோ உடம்பு சரியில்லையென்று சொன்னுர்கள். அதனுல் அதிகமாக இங்கே வர முடியவில்லை."

"என்னதான் இருந்தாலும் வாரத்துக்கு ஒரு முறையாவது கூட்டம் போட்டுப் பேசாமல் இருக்கும்படி என்ன வந்துவிட்டது? நான் சொல்கிறதைக் கேள். இன்று மாலை வேலை நிறுத்தக் கமிட்டிக் கூட்டம் நடக்கப் போகிறது. அதற்கு வேலாயுதம் அநேகமாக வரமாட்டார். என்ன இருந்தாலும் பிள்ளை குட்டிக்காரர் என்ற ஞாபகம் இல்லாமல் பேசுகிறுயே!" என்றுன் முதல் ஆசாமி.

அவன் சொன்ன ஜோசியம் பலித்தது. அன்று கூட்டத்துக்கு வேலாயுதம் வரவில்லை. 'எதிர்பாராதவண்ணம் வீட்டில் இருக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டபடியால் கூட்டத்துக்கு வரமுடியவில்லை' என்று ஒரு கடிதம் மாத்திரம் எழுதியிருந்தான்.

இளைஞர்களுக்குச் சந்தேகம் உறுதியாகிவிட்டது. அந்தக் கூட்டத்திற்கு அநேகமாக இளைஞர்களே, ஒற்றை ஆசாமிகளே, வந்திருந்தார்கள். அன்று முடிவாகவேண்டிய விஷயத்தை ஒத்திப் போட்டுவிட்டார்கள். ஆனுல்

கூட்டத்தில் முழுக்க முழுக்க வேலாயுதத்தைப்பற்றியே ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டார்கள்.

"முதலாளியின் தம்பி ஒருவன் உண்டே. உனக்குத் தெரியுமா?" என்று ஒருவன் கேட்டான்.

"தெரியாது. அவனைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் நமக்கு எதற்கு?"

"அவசியம் நேர்ந்திருக்கிறது. அவன்தான் வேலாயுதத்தின் மனசைக் கலைத்துக் கொண்டிருக்கிறானென்று கேள்வி. இந்த ஊருக்கு வந்து ஒரு மாசம் ஆகவில்லை. அதற்குள் இந்தத் துரோக வேலைக்கு அஸ்திவாரம் போட ஆரம்பித்துவிட்டான்."

"அது யாரப்பா, அந்தப் பேர்வழி?"

"முதலாளி அவனுக்கு ஒரு வீடு கொடுத்திருக்கிறார். சில காலம் இங்கே தங்கப்போகிறானாம். மிலிடெரியில் வேலை செய்தவனென்று சிலர் சொல்கிறார்கள். போலீஸ் வேலையில் இருக்கிறவனென்றும் சொல்லிக்கொள்கிறார்கள். டாக்டரென்று யாரோ சொன்னார்கள். அநேகமாகப் போலீஸ்காரனாக இருக்கக்கூடும்."

"சரி, சரி; வேலாயுதத்தை இனிமேல் நம்பக்கூடாது போலிருக்கிறதே!"

"அவரைக் கலைக்க ஏற்பட்ட இந்த மனிசனை நாம் இப்படியே விட்டுவிடுவதா? அப்புறம் நம் வேலை நிறுத்தமும் வீரமும் என்ன ஆவது?" என்று உக்கிராவேசத்துடன் ஒருவன் கேட்டான்.

இந்தமாதிரிப் பேச்சிலே அன்றைக் கூட்டம் நடந்து கலைந்தது.

முதலாளி குழப்பத்தில் ஆழ்ந்திருந்தார். போதாக் குறைக்கு அவருடைய ஒன்றுவிட்ட தம்பி, நேதாஜி சேனையில் டாக்டராக இருந்தவர், இரண்டு மாதம் தங்குவதற்

காக வந்திருந்தார். அவர் புரட்சிக்காரர். முதலாளி வீடு கொடுத்தார். வந்தவர் தொழிலாளர் இருப்பிடத்துக்குப் போய்வருவதாக முதலாளி காதில் விழுந்தது. கொள்ளிக் கட்டையை எடுத்துத் தலையைச் சொறிந்துகொண்ட கதையாக முடிந்துவிடுமோ என்று அஞ்சினர்.

## 5

பாதி ராத்திரி; ஏதோ சத்தம் கேட்டது. "ஐயோ!" என்று ஒருவர் கூவினர். "கொலை, கொலை!" என்று மற்ருெரு குரல் கேட்டது. அதற்குள் அருகில் இருந்தவர் கூடிவிட்டனர். வேலாயுதம் தலைதெறிக்க அங்கே ஓடிவந்தான். பார்த்தான்; காரில் டாக்டர் மண்டையிலிருந்து ரத்தம் வழிய மூர்ச்சை போட்டுக் கிடந்தார்.

"ஐயோ! என் மனைவியைக் காப்பாற்றிய புண்ணிய வாஞுயிற்றே!" என்று அலறிப் புடைத்துக்கொண்டு ஓடினன். முகத்தில் தண்ணீர் தெளித்தான். மோட்டார் ஓட்டியை மெல்ல அவர் ஜாகைக்கு விடச் செய்தான்.

அதற்குள் அவன் உள்ளம் தவியாகத் தவித்தது. அவனுடைய மனைவி ஒரு மாத காலமாக நோய்வாய்ப்பட்டிருக்கிருள். இன்ன வியாதி என்றே தெரியவில்லை. முதலில் சாமான்யமானது என்று எண்ணி ஏமாந்து போனன். பிறகு அது கடுமையானது என்று தெரியவந்தது. தொழிலாளர் சங்கத்தையும் கவனித்துக்கொண்டு அவளையும் கவனிக்க முடியவில்லை. மனைவிக்கு வியாதியென்று சொல்லலாம் என்ருலோ, தொழிலாளர்களின் அநுதாபம் அவன் வீட்டு வாசலில் தினந்தோறும் நூற்றுக் கணக்கான பேர்களைக் கொண்டுவந்து நிறுத்திவிடும். இவற்றையெல்லாம் எண்ணியே அவன் தன் மனைவியின் நோயை யாருக்கும் தெரிவிக்காமல் மறைத்து வைத்தான்.

வியாதி கடுமையானதென்று தெரிந்தவுடனே அதற்குப் பரிகாரம் தேடுவதிலே அவன் கவலை சென்றது. யாரை அணுகுவது? தொழிலாளரிடையே ஒரு வகைத் தீயை வேறு மூட்டியாயிற்று. வேலை நிறுத்தமும் ஆரம்பமாகிவிட்டது. எதைக் கவனிப்பது? எதை விடுவது? நல்ல வேளையாகச் சில உற்சாகமுள்ள இளைஞர்கள் தொழிலாளர் சங்கத்தை நடத்தும் சக்தியுடையவர்களாக இருந்தார்கள். அதனால் தன் மனைவியைக் கவனிக்கத் தொடங்கினான். அவளுக்கு வந்த குறிப்பிட்ட வியாதிக்கு யாராவது நிபுணரால்தான் சிகிச்சை செய்யமுடியும் என்றும் தெரியவந்தது.

இத்தகைய சங்கடமான நிலையில் தற்செயலாக அன்று அந்த டாக்டரைச் சந்தித்தான். அவரைப்பற்றி மற்ற விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்குமுன் அவர் ஒரு டாக்டர் என்ற செய்தி தெரிந்தது. மேலே அவன் ஒன்றும் கேட்காமல் தன் மனைவியின் வியாதியைப்பற்றிச் சொல்லி அதைக் கவனிக்கும் நிபுணர் யாராவது கிடைப்பார்களா என்று கேட்டான். இந்த உலகமே அவன் நினைவில் இல்லை. மனைவிக்குச் சௌக்கியமானால் போதும் என்ற ஒரே நினைவுதான். டாக்டரே, குறிப்பிட்ட வியாதியைக் கவனிக்கும் நிபுணராக இருந்தார்.

எல்லாம் ஒத்துக்கொள்ளவே அவரே சிகிச்சை செய்ய ஆரம்பித்தார். அவர் சிகிச்சை செய்வதுகூடப் பிறருக்குத் தெரியாமல் இருந்தது. தெரியக்கூடாதென்று எண்ணியவர் அவர். ஓய்வு எடுத்துக்கொள்ள வந்த இடத்தில் தொழில் நடத்த அவருக்கு விருப்பம் இல்லை. வேலாயுதத்தின் மனைவியுடைய நிலை பரிதாபமாக இருந்தமையால், எப்படியோ அவளுக்கு மாத்திரம் சிகிச்சை செய்ய ஒப்புக்கொண்டார்.

அந்த இரவில் அவள் யமனுடன் போராடினாள். உணர்விழந்திருந்த அந்தப் பெண்மணியின் நாடி சற்று ஓய்ந்திருந்தது. குறிப்பிட்ட ஒரு நிலை வந்தால் பயமில்லை யென்று, டாக்டர் என்ன என்னவோ சிரமப்பட்டார். இரவு நெடு நேரம் அங்கே இருந்தார். ஒருவாறு நம்பிக்கை உண்டாகும் நிலை ஏற்பட்டது. ஆறுதல் பெற்ற உள்ளத்தோடு வீடு திரும்பினார். திரும்பும்போதுதான் மண்டையில் அடிபட்டார்.

வேலாயுதம் மனக்கண்முன் இவையெல்லாம் வந்தன. டாக்டரை யார் அடித்திருக்கக்கூடும்? தொழிலாளர்கள் அடித்திருப்பார்கள் என்று நினைக்கத் தோன்றவில்லை. அவர்களைச் சேர்ந்தவன் அல்லவா? 'இவர் இங்கே வந்து வாழ்வதில் ஏதாவது மர்மம் இருக்குமோ! நேதாஜி மர்ம மனிதர். அவரைச் சார்ந்தவர்களும் அப்படியே இருக்கிறார்களே!' என்று எண்ணினான்.

டாக்டருக்கு உபசாரம் நடந்துகொண்டிருந்தது. அவர் மெல்லக் கண் விழித்தார். பக்கத்தில் கண்ணீர் வழிய வேலாயுதம் நின்றுகொண்டிருந்தான். "டாக்டர், டாக்டர், எந்தப் பாவி இந்தக் காரியத்தைச் செய்தான்?" என்று படபடப்புடன் கேட்டான்.

டாக்டர் சிறிது புன்முறுவல் பூத்தார். தலையில் கட்டுக் கட்டியிருந்தார்கள். அந்த நிலையிலும் அவர் முறுவல் பூத்தது என்னவோ மாதிரி இருந்தது. "உங்கள் ஆள்தான்" என்று மெல்லிய தொனியில் பதில் வந்தது.

"ஆ! அதென்ன?" என்று கத்தினான் வேலாயுதம்.

"'எங்கள் தலைவரைக் கலைக்க இரவோடு இரவாகப் போய்வருகிறாயா? முதலாளியின் தந்திரமா அல்லது உன்னுடைய மித்திர பேதமா?'—என்று சொல்லிக்கொண்டே

ஒருவன் அடித்தான்'' என்று சிறிது நேரத்துக்குப் பிறகு டாக்டர் சொன்னார்.

வேலாயுதம் காதில் இது விழுந்தது. ''ஆ!''—அவன் ஸ்தம்பித்துப் போனான். ''கலைப்பதா? மித்திரபேதமா? கடவுளே! என்ன இது?'' என்று அவன் கூவினான்.

மெல்ல மெல்ல அவனுக்கு உண்மை விளங்கியது. தொழிலாளர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டதை ஊகித்துக் கொண்டான். 'ஆம், அவர்கள் தங்கள் ஆவேசத்தில் அப்படித்தான் நினைப்பார்கள். சந்தர்ப்பங்கள் சேர்ந்துகொண்டன. ஆவேசத்தை மூட்டினவன் நான்தான். இடையே அறிவுக்கும் அன்புக்கும் வேலையில்லாமல் செய்துவிட்டேன். வேலை நிறுத்தம் வந்தபிறகு பட்டினியால் அவர்கள் வயிறு வாடுகிறது. அதனால் ஆத்திரம் உண்டாவது இயல்பு...முதலாளி அழைத்தபோது போகாமல் இருந்தேனே! அது என் அறிவைக் காட்டுகிறதா! ஆத்திரத்தைத்தானே காட்டுகிறது? வெறும் வெறியைக் கிளப்பி விட்ட நானல்லவோ எல்லாவற்றிற்கும் மூலகாரணம்? இந்த வெறியென்னும் பேய் தன்னைப் பெற்ற என்னையே சந்தேகிக்கும்படி செய்துவிட்டது. எனக்கு உபகாரம் செய்த இந்தப் பெரியவருக்கு இந்த அபாயம் ஏற்பட்டது. இதை உணர அவர்களுக்கு அறிவில்லை; எனக்கே இதுவரையிலும் இல்லையே! அவனவன் துயர்க் கடலுள் ஆழ்ந்திருக்கும்போதுதான் உண்மை புலப்படும். நான் தூண்டிவிட்ட தீ இப்போது என் நெஞ்சையே சுடுகிறது. ஹும்! நான் படவேண்டிய கஷ்டத்தை இந்த மகானுபாவர் படும்படியாக அல்லவோ செய்துவிட்டேன்!'—இன்னும் என்ன என்னவோ அவன் உள்ளத்தில் ஓடின. பேசாமல் இடி விழுந்தாற்போல் உட்கார்ந்துவிட்டான். கண்களில் தாரை தாரையாக நீர்

வழிந்தோடியது. டாக்டர் பேசாமல் படுத்தபடியே பார்த்துக்கொண்டிருந்தார்.

திடீரென்று வேலாயுதம் எழுந்திருந்தான். "நீங்கள் என் மனைவியின் உடல் நோயைப் போக்கி உயிர் அளித்தீர்கள். அப்படியே என் உள்ளத்தில் இருந்த அறியாமையையும் போக்கிவிட்டீர்கள். நாளைக்கு நீங்கள் முதலாளிக்கு ஒரு கடிதம் எழுதித் தந்து எனக்குப் பேட்டியளிக்கும்படி செய்யவேண்டும்" என்று அவர் காலைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக்கொண்டான்.

## 6

மறுநாள் விடிந்தவுடன் முதலாளியை வேலாயுதம் கண்டான். அவரும் இந்தச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அவனைக் கண்டவுடன், "என்னப்பா வேலாயுதம், வெகு தூரத்துக்குச் சங்கடத்தைக் கொண்டுவந்து விட்டாயே! பைத்தியக்காரத்தனமாக அல்லவோ உலகம் எண்ணும்படி ஆகிவிட்டது?" என்றார்.

"ஆமாம். இனிமேல் நான் உங்கள் ஆள். தொழிலாளருக்கும் கஷ்டம் வந்துவிட்டது. போனதை மறந்துவிட்டுப் புதிய மனிதர்கள் ஆவோம்."

வேலாயுதம் பேசினான். முதலாளியும் பேசினார். இருவருக்கும் மனம் மாறியிருந்த சமயம் ஆதலால் ஒருவர்க்கொருவர் யோசனையில் ஒத்துப்போனார்கள்.

மறுநாளே வேலை நிறுத்தம் முடிவடைந்தது. தொழிலாளர்கள் குறை தீர்ந்தது. வேலாயுதம் அன்று மாலையில் பிரசங்கம் செய்தான். பெரிய கூட்டம். டாக்டர் தலைமை வகித்தார்; தலையில் கட்டுடன் அவர் நாற்காலியில் அமர்ந்திருந்தார்.

"தோழர்களே, நான் அதிகமாகப் பேசப்போவதில்லை. நாம் அனைவரும் ஒரு குடும்பம் என்பதை நாமும் மறந்தோம்; முதலாளியும் மறந்தார். நமக்கு ஆவேசம் இருந்தது; அறிவு வெளிப்படவில்லை. ஒரு நாள் பேச்சோடு தீரவேண்டிய சமாசாரம் பல நாள் பட்டினி இருந்தும் தீரவில்லை. இந்த மகானுபாவர் உங்கள் ஆத்திரத்தைத் தம் மேனியில் தாங்கிக்கொண்டார். அதனால்தான் நமக்கு விடிவு வந்தது. ஆவேசத்துக்காகவே ஆவேசம், வேலை நிறுத்தத்துக்காக வேலை நிறுத்தம் என்ற கொள்கையை இன்றுடன் நான் விட்டுவிட்டேன். போதும் அதன் விளைவு. ஆண்டவன் நமக்குச் சாந்த நெறியையும் சமயத்தில் இழவாத அறிவையும் அருள் செய்வாராக!" என்று முடித்தான்.

★

இப்போதெல்லாம் எங்கே வேலை நிறுத்தம் வந்தாலும் குத்தங்குடியில் வேலை நிறுத்தமே வருவதில்லை. முதலாளியும் சரி, தொழிலாளரும் சரி, ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகிவிட்டார்கள்.

# பரிகாரம்

கதிர்காமம் போகிறவர்களுக்கு மாத்தரா என்றால் நன்றாகத் தெரியும். இலங்கையில் கொழும்பிலிருந்து நூறுமைல் தூரத்தில் இருக்கும் சிறிய நகரம் அது; கடற் கரை ஓரத்தில் அமைந்துள்ள வியாபார ஸ்தலம். மாத் துறை என்று அதன் பெயரைத் தமிழாற் சொல்லலாம். அங்கேதான் ஆஞ்சனேய செட்டியார் கடை வைத் திருந்தார். சின்னஞ் சிறு பிராயத்திலே செட்டியார் தமிழ் நாட்டிலிருந்து இலங்கையில் குடியேறினவராம்.

ஆஞ்சனேய செட்டியார் என்று அவரை எல்லோரும் அழைத்தாலும் அவருக்கு அப்பா அம்மா வைத்த பெயர் வேறு. அந்தப் பெயரை அவரே மறந்து போயிருப்பார். வெள்ளையன் செட்டியாரே ஆஞ்சனேய செட்டியாராகி யிருக்கிறார். அந்தச் செட்டியார் என்ற பட்டம் கூட அவர் வியாபாரம் செய்வதனால் வந்த பெயர்.

ஆஞ்சனேயரிடத்தில் அவருக்கு அபார பக்தி. இலங் கைத் தமிழர்கள் பெரும்பாலும் சிவ பக்தி உடையவர்கள். முருகன் கோயில், பிள்ளையார் கோயில், சிவன் கோயில் என்று கோயில்கள் இருக்குமே யொழிய விஷ்ணு கோயிலைக் காண்பது அருமை. அந்த இலங்கையிலே செட்டியார் ஆஞ்சனேயருக்குப் பிரம்மாண்டமான கோயில் ஒன்று கட்ட எண்ணினார்.

அவருடைய வியாபாரம் செழித்து ஓங்கியது. ரூபாய்க்கு ஒரு சதம் ஆஞ்சனேயருக்கு என்று ஒதுக்கி வைத்தார். அது ஆயிரம் ஆயிரமாகச் சேர்ந்துவிட்டது.

லட்சத்துக்கு மேலும் போயிற்று. 'ஆஞ்சனேய தர்மம்' என்றே அந்தப் பணத்தை வைத்திருந்தார்.

"ஏன், செட்டியாரே, இந்தப் பணத்தை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று யாராவது கேட்டால், "இலங்கையிலே இல்லாத அதிசயமான கோயிலைக் கட்டப் போகிறேன்" என்பார்.

"அதென்ன, அப்படி விசேஷமான கோயில்?"

"ஆஞ்சனேயருக்குப் பெரிய கோயில் எழுப்ப எண்ணியிருக்கிறேன். அவருடைய திருவருள் இருந்தால் அது நிறைவேறும்."

"ஆஞ்சனேயர் கோயிலா? பிள்ளையார் கோயில் சிவன் கோயில் என்று கட்டுவார்கள். கதிர்காமம் போகும் வழியில் இருக்கும் இந்த ஊரிலே முருகனுக்கு ஒரு கோயில் கட்டினலும் பொருத்தமாக இருக்கும். திடீரென்று ஆஞ்சனேயரை நினைத்துக் கொண்டீர்களே! அது என்ன?"

செட்டியாருக்கு இந்தக் கேள்வியைக் கேட்டவரிடம் கொஞ்சம் கோபம் உண்டாகும். ஆனல் அதை அவர் வெளியிலே காட்டிக் கொள்ளமாட்டார். அதுதானே வியாபார ரகசியம்?

"நீங்கள் ராமாயணம் வாசித்திருக்கிறீர்களா? இந்த இலங்கை ராவண ராஜ்யமாக இருந்தது. அதர்மம் வளர்ந்த பூமியாக இருந்தது. இங்கே மகாலக்ஷ்மி வந்து பத்து மாதம் இருந்தாள். அதனல் இங்கே லக்ஷ்மீகரம் உண்டாயிற்று. இன்று இந்தியாவில் பஞ்சம் பஞ்சம் என்று ஜனங்கள் திண்டாடும் பொழுது இலங்கை சுபிட்சமாக இருக்கிறதே, எதனல் என்று நினைக்கிறீர்கள்? மகாலக்ஷ்மி இங்கே தங்கியிருந்த விசேஷந்தான்."

"அதற்கும் ஆஞ்சனேயர் கோயிலுக்கும் என்ன சம்பந்தம்?"

"அதற்குள் அவசரப்படுகிறீர்களே! ராவண ராஜ்ய மாக இருந்த இலங்கையில் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின் திரு வடி பட்டது. பிறகு விபீஷண ராஜ்யமாயிற்று. சீதா பிராட்டி இருப்பதைக் கண்டுபிடித்து ராமபிரானுக்குத் தெரிவித்து ராவண சம்ஹாரத்துக்கு மூலகாரணமாக இருந்த மூர்த்தி யார் தெரியுமா? சாக்ஷாத் ஆஞ்சனேய மூர்த்திதான். ராமாயணத்திலே மிகவும் உத்தமமான காண்டம் சுந்தர காண்டந்தான். ராமாயண பாராயணம் செய்தால் முதலில் சுந்தர காண்டத்திலிருந்து ஆரம்பிப் பார்கள். தங்களுக்கு உள்ள குறைகள் போக வேண்டுமா னல் சுந்தர காண்டம் பாராயணம் செய்வார்கள். அந்தச் சுந்தர காண்டம் முழுவதும் ஆஞ்சனேயருடைய பராக் கிரமத்தைச் சொல்வது. ராமாயணத்திலே முக்கியமான காண்டமாகிய சுந்தர காண்டத்தின் கதாநாயகனே ஆஞ்சனேயரென்று சொல்லிவிடலாம்."

"நன்ருகப் பிரசங்கம் செய்வீர்கள் போலிருக் கிறதே!"

"அது கிடக்கட்டும் ஐயா; விஷயத்தைக் கேளும். இலங்கையைப் புனிதப் படுத்த வந்தவர் ஆஞ்சனேயர். அவரை இலங்கையில் உள்ளவர்கள் வழிபடாமல் இருக் கலாமா? கம்பராமாயணத்தைப் படித்தால் கம்பர் ஆஞ்ச னேயருக்கு எவ்வளவு சிறப்புச் சொல்கிருர் என்று தெரிய வரும். இலங்கையில் சம்பாதிக்கும் பணத்தில் ஒரு பகுதி அவருக்குக் காணிக்கையாகச் சேர வேண்டியது நியாயம் தானே?"

கேள்வி கேட்ட அன்பர் மேலே ஒன்றும் கேட்கமாட் டார். செட்டியார் சொல்வது நியாயமாகவே படும்.

கோயில் கட்ட ஆரம்பித்தார் செட்டியார். இந்தியாவி லிருந்து கொத்து வேலை செய்கிறவர்களையும், சிற்பாசாரி

யர்களையும் வருவித்தார். பெரிய திட்டம் போட்டுக் கோயில் கட்டத் தொடங்கினார். கட்டி முடித்துவிட்டார். பேருக்கு ஒரு சிறிய ராமர் கோயிலைக் கட்டினார். அதற் கெதிரில் கைகுவித்த கோலத்தோடு மாருதி நிற்கிறார். பெரிய திருவுருவம். சுற்றிலும் பிராகாரங்கள், மண்டபங் கள், பக்தர்கள் வந்தால் தங்கும் இடங்கள் எல்லாம் கட்டி னார். கோயில் முடிந்து கும்பாபிஷேகம் நடந்தது. அந்த மாதிரி கும்பாபிஷேகத்தை அந்தப் பக்கத்திலே உள்ளவர் கள் பார்த்தே இருக்கமாட்டார்கள். கும்பாபிஷேகத்துக் குப் பிறகு மண்டலாபிஷேகம் நடந்தது. பிறகு நித்திய பூஜை. சனிக்கிழமைதோறும் வடைமாலை சாத்துவார். சரி யாக ஆயிரத்தெட்டு வடைகளை மாலையாகக் கோத்து ஆஞ்ச னேயருக்குப் போடுவார்.

இலங்கையில் பல பாகங்களிலிருந்தும் ஜனங்கள் வந்து கோயிலைத் தரிசித்துச் சென்றார்கள். செட்டியாருடைய கடை உண்டியலில் சேரும் பணத்தோடு, கோயிலிலேயே ஓர் உண்டியல் போட்டிருந்தார்; அதில் வேறு பணம் சேர்ந் தது. ஆஞ்சனேயர் அமோகமாகப் பக்தர்களின் வழி பாட்டைப் பெற்று அநுக்கிரகம் செய்து கொண்டிருந்தார்.



நெடுந்தூரத்திலிருந்து வருகிறவர்கள் ஆஞ்சனேய தரிசனம் செய்துகொள்வதோடு ஆஞ்சனேய செட்டியாரை யும் பார்த்து அவருடைய பக்தியை உணர்ந்து பாராட்டி விட்டுச் செல்வார்கள். ஒரு நாள் அந்த ஊருக்கு ஒரு பரதேசி வந்தார். மொட்டைத் தலையும் காவி வேட்டியும் உடையவராக இருந்தார். நல்ல ஒளி படைத்த முகத்தில் புன்முறுவல் அழகு செய்தது. அவர் ஆஞ்சனேயர் கோயிலைத் தரிசிக்க வந்தார். தரிசித்துவிட்டுச் செட்டி யாரையும் பார்க்கப் போனார். துறவியானமையால் செட்டி

யார் எழுந்து மரியாதை செய்து வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

"ஆஞ்சனேயர் கோயிலைச் சாமி பார்த்ததா?" என்று விநயத்தோடு ஆஞ்சனேய செட்டியார் கேட்டார்.

"மிகவும் நன்றாக இருக்கிறது. நான் இந்தியாவில்உள்ள ஆஞ்சநேயர் கோயில் ஒன்று விடாமல் பார்த்திருக்கிறேன். தாராபுரத்து ஹநுமாரைத் தரிசித்திருக்கிறேன். நாமக்கல் மாருதியைத் தரிசித்திருக்கிறேன். ஒருவந்தூரில் உள்ள பஞ்ச முக ஆஞ்சநேயர் கோயிலில் ஒரு வாரம் இருந்திருக்கிறேன். இந்தியாவில் ஆஞ்சநேயர் கோயில் இருப்பது ஆச்சரியம் அல்ல. இலங்கையில் ஆஞ்சநேயரை யாவரும் அடியோடு மறந்து போய்விட்டார்கள். இந்த இடத்தில் இவ்வளவு அற்புதமான கோயில் கட்டியிருக்கிறீர்கள். கோயிலைப் பார்க்க மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. இந்தப் பக்கத்தில் உள்ளவர்களுக்கு இதன் அருமை தெரியாது. ஆஞ்சநேய பக்தர்களுக்கு நன்றாகத் தெரியும். அற்புதமாக இருக்கிறது."

சாமியார் இதைச் சொல்லும்போது அவர் கண்களில் ஒளி சுடர்ந்தது. உண்மையில் அவர் உள்ளத்தில் இந்தத் திருக் கோயிலைக் கண்டு பேரானந்தம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரிய வந்தது.

"சாமியைப் போன்ற மகான்களெல்லாம் கண்டு மகிழ்ந்தால் அடியேன் செய்த பாக்கியம் அது. ஆஞ்சனேய மூர்த்தி திருவருள் அதை நடத்தி வைத்தது."

"இலங்கைக்கு வந்து பணம் சம்பாதித்த இந்தியர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? உங்களைக் காட்டிலும் அதிகமான பொருள் ஈட்டிப் பெரிய பெரிய தேயிலைத் தோட்டங்களை யெல்லாம் வாங்கினவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் 'பாக்டரி' கட்டுகிறார்கள். பள்ளிக்

கூடம், ஆஸ்பத்திரி, தபால் ஆபீஸ் எல்லாம் அங்கே எழும்புகின்றன. ஆனால் ஒரு சின்னப் பிள்ளையார் கோயில் கூடக் கட்டுகிறதில்லை. அப்படி இருக்க, இங்கே நீங்கள் இவ்வளவு பெரிய கோயிலை—அதுவும் ஆஞ்சநேயர் கோயிலைக் கட்டக் காரணம் என்ன? ஆஞ்சநேயர் கோயில் கட்டவேண்டு மென்று உங்களுக்கு யாராவது சொன்னார் களா? அல்லது உங்களுக்கே தோன்றியதா?" என்று சாமி யார் கேட்டார்.

செட்டியார் சிறிது நேரம் பதில் சொல்லவில்லை. அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

சாமியார் அவரைப் பார்த்தார். "எனக்குச் சொல்லக் கூடாதென்றால் குற்றம் இல்லை. நானும் ஆஞ்சநேய மூர்த் தியையே நம்பி வாழ்கிறவனாகையால் கேட்டேன். உங்கள் பக்திதான் காரணம் என்று தெரிந்துகொண்டேனே, அதுவே போதும்!" என்று கூறினார்.

செட்டியார் சாமியாரை நிமிர்ந்து பார்த்தார். அவர் கண்களில் நீர் தேங்கி நின்றது. "சாமி, உண்மையைச் சொல்கிறேன். உங்களைப் பார்த்தால் பரம ஞானியாகத் தோன்றுகிறது; உங்களிடம் பொய் சொல்லக் கூடாது. இதே கேள்வியை இங்குள்ளவர்கள் கேட்டார்கள். ஆனால் அவர்களுக் கெல்லாம் வேறு காரணம் சொன்னேன். உங்க ளிடம் அதைச் சொல்லக் கூடாது. என் நெஞ்சில் உள்ளதை யாராவது ஒரு மகானிடம் சொல்ல வேண்டும் என்றே நானும் காத்திருந்தேன்" என்று மெல்ல மெல்லப் பீடிகை போட்டார் செட்டியார்.

"சொல்வதில் மனசுக்கு ஏதாவது சங்கடம் இருப்ப தானால் சொல்ல வேண்டாம். நானும் உங்களைப்போலவே மாருதியின் பராக்கிரமத்தில் ஈடுபட்டவன். நீங்கள் சொல் வதை நான் அறிந்து மகிழ்வேன்" என்றார் சாமியார்.

“சாமி, ஆஞ்சநேயப் பெருமான் திருவருளை என்ன வென்று சொல்வது! ஒன்றுக்கும் உதவாத பிச்சைக் காரனாக இருந்த இந்த ஏழையை இன்று இந்த நிலையில் வைத்திருப்பது அந்த மூர்த்தியின் கிருபைதான். பல வருஷங்களுக்கு முன் நான் இருந்த நிலை என்ன! அப்போது நான் மகா பாதகம் ஒன்றைச் செய்தேன்; இப்போது இத்தனை செய்திருந்தும் அந்தப் பாதகம் என் மனசை உள்ளூறத் துளைக்கிறது.” செட்டியார் சிறிது மௌனமானார்.

மறுபடியும் தொடங்கினார்: “என் அவலக் கதையை முதலிலிருந்து சொன்னால்தான் என் துக்கம் ஆறும்; விஷயமும் விளங்கும். நான் இலங்கைக்கு வந்து நாற்பது வருஷங்கள் ஆகிவிட்டன. என் இளம் பிள்ளைப் பருவத்திலே நான் தாய் தந்தையை இழந்தேன். எங்கள் ஊர் அரவக்குறிச்சி. செங்குந்தர் குலத்திலே பிறந்தேன். ஆனால் குலம், பரம்பரை, ஊர் என்று எதையும் சொல்லிக் கொள்ள முடியாத நிலையில் எட்டாவது வயசில் நான் அநாதையாகி விட்டேன். பிச்சை வாங்கும் தொழில் ஒன்றுதான் என்னால் கற்றுக்கொள்ள முடிந்தது! அதைத் தடை செய்வாரும் இல்லை. வெறும் பிச்சைக் காரனாக இருந்தவன் ஒரு குரங்காட்டியின் சிநேகம் பிடித்தேன். அவனுடைய சிநேகம் அதிகமாக ஆக நானும் ஒரு குரங்கைப் பிடித்துக் கொண்டேன். அதைப் பழக்கினேன். இலங்கையைத் தாண்டுவதும், அசோக மரத்தில் ஏறுவதும், சீதையைக் கும்பிடுவதும், ராமரிடம் கை கட்டி வாய்பொத்தி நிற்பதுமாகப் பல வேடிக்கைகள் அதற்குக் கற்றுக் கொடுத்தேன். ஊர் ஊராகப் போய்க் குரங்கை ஆட்டி ஜீவித்து வந்தேன்.”

நடுவில் சாமியார் ஒரு கேள்வி கேட்டார்: “உங்கள் ஊர் அரவக்குறிச்சி யென்றா சொன்னீர்கள்? கரூருக்குப் பக்கத்தில் இருக்கிறதே, அதுவா?” என்றார்.

"ஆம், அந்த அரவக்குறிச்சியில் பிறந்தேனே ஒழியக் குரங்காட்டியாக அந்த ஊரில் இருக்க முடியுமா? எங்கெங்கோ சுற்றினேன். ஒரு நாள் குளித்தலைக்கு வந்தேன். அங்கே ஒரு முதலியார் வீட்டுக்குப் பிச்சை வாங்கப் போனேன். அந்த வீட்டு வாசலில் குரங்கைக்கொண்டு வேடிக்கை காட்டினேன். குழந்தை குட்டிகள் சுற்றிலும் கூடிக் கொண்டார்கள். அப்போது அந்தவீட்டுப் பையன் தன்கையில் இருக்கிற மோதிரத்தைக் கழற்றிக் குரங்குக்கு முன் நீட்டினான். அவன் சிறு பிள்ளை; செல்லப் பிள்ளை. மோதிரம் போட்டிருந்தான். பின்னால் நடக்கப் போவது அவனுக்குத் தெரியுமா? அந்த மோதிரத்தைக் கையில் வைத்துக்கொண்டு குரங்கை, 'ஸூ, ஸூ' என்று கூவிப் போக்குக் காட்டினான்.

"குரங்கு அசப்பில் லபக்கென்று, அந்த மோதிரத்தை அவன் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டு வாயில் வைத்துக் கடித்தது. குரங்கு பிடுங்கினவுடன் பையன் கோவென்று கத்தினான். 'ஐயோ! என் மோதிரம்!' என்று அலறினான். நான் குரங்கினிடமிருந்து அதைப் பிடுங்கப் போனேன். குரங்கு அதை விடாமல் கடித்தது. நான் மிரட்டினேன். கையை நீட்டினேன். கோலை ஓங்கினேன். குரங்கு மோதிரத்தைத் தரவில்லை. கயிற்றைச் சுண்டி இழுத்தேன். அப்படியும் தரவில்லை. பையனோ கூச்சல் போட்டுக்கொண்டே இருந்தான். கூட்டம் வேறு கூடிவிட்டது. எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. பாவி! கையில் இருந்த கழியினால் ஓங்கி ஓர் அடி அடித்தேன். சாமி, அந்தக் கணத்தில் அந்தக் குரங்கு துடித்த துடிப்பை நினைத்தால் இப்பொழுதும் என் குலை நடுங்குகிறது. பெற்ற குழந்தையைக் கழுத்தைத் திருகிப் போடும் பெண் உண்டா? நான் அந்த மாதிரியான பாதகத்தைத்தான் செய்தேன் சாமி!

குரங்கு வீரென்று கத்தியது. சுருண்டு கீழே உருண்டது. அவ்வளவுதான். அதன் பிராணன் போய்விட்டது. மோதிரத்தை அந்தப் பையன் வாங்கிக்கொண்டான். குரங்கின் உயிரைக் காலன் வாங்கிக்கொண்டான்.

"கூடியிருந்த கூட்டம் என்னையும் முதலியார் வீட்டுப் பையனையும் கண்டபடியெல்லாம் திட்டத் தொடங்கியது.

" 'இந்தப் பிள்ளைக்குக் குரங்குப் புத்தி வருவானேன்? கையிலே போட்டிருந்த மோதிரத்தைக் கழற்றிக் காட்டுவானேன்? குரங்கு உத்தமமான மிருகம் ஆயிற்றே; ராம தூதன் அல்லவா? அதைக் கொன்ற பாவம் லேசில் தீருமா?' என்றார் சிலர்.

" 'பாவம்! பையனுக்கு என்ன தெரியும்? குரங்காட்டிக்கு அதனிடமிருந்த அந்த மோதிரத்தை வாங்கத் தெரியவில்லையே! இன்னும் பழக்கப்படாத குரங்கோ, என்னவோ!' என்று சிலர் செத்துப் போன குரங்கையே குறை கூறினார்கள்.

" 'ஏழை பாவம்! ஏதோ இதை வைத்துக் கொண்டு வேடிக்கை காட்டிப் பிழைத்து வந்தான். குழந்தைப் பிள்ளையைப் போலத்தானே வளர்த்திருப்பான்? இந்தப் பையன் பண்ணின அட்டகாசத்தில் அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. அடித்தான். படாத இடத்தில் பட்டுவிட்டது. அவன்தான் என்ன செய்வான்? இப்போது நஷ்டம் அவனுக்குத்தானே ஒழிய இந்தப் பையனுக்கு என்ன? மோதிரந்தான் கிடைத்துவிட்டதே!' என்றார் சிலர்.

"இந்தக் கூட்டத்துக்கிடையே நான் பிரம்மஹத்தி பிடித்தவனைப் போல் உட்கார்ந்திருந்தேன். குரங்கை எடுத்து மடியில் போட்டுக்கொண்டேன்.

"அந்தச் சமயத்தில் அந்த வீட்டுக்கார முதலியார், எங்கோ வெளியில் போயிருந்தவர், வந்தார். விஷயத்தை அவர் கேட்டார். யாரைக் கோபித்துக்கொள்வதென்று அவருக்குத் தெரியவில்லை. கூட்டம் கூடிக்கொண்டு ஜனங்கள் நிற்பதைப் பார்த்தார். 'எல்லோரும் போங்கள்; இங்கே என்ன வேடிக்கை?' என்று இரைச்சல் போட்டார். தம் பிள்ளையை வைதார். என்னையும் மிரட்டினர். பிறகு உள்ளே போய்ப் பத்து ரூபாயைக் கொண்டுவந்து என்னிடம் கொடுத்து, 'இந்தா, இந்தக் குரங்கைக் கொண்டு போய் எங்கேயாவது நல்ல இடத்தில் புதைத்துவிடு. அதன் மேல் பூவும் அரிசியும் வாங்கிப் போடு. குரங்கைக் கொல்வது மகா பாவம்' என்று சொல்லி அந்த புண்ணியவான் என்னை அனுப்பினர்.

"நான் தோளில் செத்த குரங்கைப் போட்டுக் கொண்டு போனேன். கூட்டம் என்னைத் தொடர்ந்து வந்தது. அவர்கள் என்னை ஓர் இடத்தில் நிறுத்திவிட்டார்கள். வீதியில் ஒரு துணியைப்போட்டு, 'ஆஞ்சனேய தர்மம்' என்று சொல்லிக் காசு வாங்கினர்கள். ஜனங்கள் காலணு, அரையணு, ஓரணுப் போட்டார்கள். சிலர் ரூபாய் கூடப் போட்டார்கள். இருபது ரூபாய் வரையில் சேர்ந்தது. கடைசியில் அன்று மாலை கொட்டு மேளத்துடன் என்னுடைய குரங்கை அந்த ஊரில் அடக்கம் செய்தேன். என் குரங்கு சாமியாகிவிட்டது.

"அன்றுதான் நான் சத்தியம் செய்தேன், 'இனி மேல் உழைத்துச் சம்பாதிப்பது; இல்லாவிட்டால் உயிரை விட்டுவிடுவது' என்று. கையில் இருந்த பத்து ரூபாயைச் செலவழிக்கவில்லை. குரங்கைக் கொன்ற பாவத்துக்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்ற தீவிர எண்ணம் உண்டாகிவிட்டது. எந்த மாதிரி பரிகாரம் என்பதை நான்

அப்போது யோசிக்கவில்லை. எந்தப் பரிகாரமானாலும் அந்தப் பத்து ரூபாயையும் அதற்காகவே வைத்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

''சாமி, அந்தக் காலங்களில் நான் பட்ட வேதனை அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். ஒவ்வொரு நாளும் என் குரங்கு கனவிலே வந்து பரிதாபமாகப் பார்த்துக்கொண்டு நிற்கும்.

''அந்த மாதிரி ஒரு வாரம் கண்டேன். பிறகு சோர் வில்லாமல் துள்ளிக் குதித்து விளையாடுவது மாதிரி கனுக் கண்டேன். அப்படி இரண்டு வாரம். பிறகு தினமும் கனவு காண்பது நின்றது. இரண்டு நாளைக்கு ஒரு முறை கனவில் என் குரங்கு வரும். குரங்காகவா வரும்? சாக்ஷாத் ஆஞ்சனேய மூர்த்தியைப் போல மாலை தரித்து, ஆடை உடுத்து, நின்ற கோலத்தில் கையைக் குவித்துக் கொண்டு நிற்கும். என் குரங்கு தெய்விகக் குரங்கு என்ற எண் ணம் என் நெஞ்சில் வேரூன்றியது.

''நான் உழைத்துச் சம்பாதிக்கத் தீர்மானம் செய் தேன் அல்லவா? வேலை எங்கே கிடைக்கும் என்று தேடிப் போனேன். ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்து வாத்தியாரிடம் வெறும் சோறு மட்டும் போடச்சொல்லி வேலை செய்தேன். அவர் மிகவும் நல்லவர். எனக்குக் கூடப் படிப்புச் சொல்லிக் கொடுத்தார். என் துரதிருஷ் டம், அவர் இரண்டு வருஷங்களில் இறந்து போனார். எனக்கு எங்கே வேலை கிடைக்கும் என்று தெரியவில்லை.

''அப்போது இலங்கைத் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யக் கூலியாட்களைக் கங்காணிகள் சேர்த்துக் கொண்டிருந்தார்கள். எனக்கு ஒரு கங்காணி எதிர்ப்பட்

டார். அவர் சொன்ன வார்த்தைகளில் ஈடுபட்டு நானும் இலங்கைக்கு வந்தேன். இங்கே ஒரு தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்தேன். ஹனுமார் கடைக்கண் பார்த்தார். நான் மெல்ல மெல்ல மேஸ்திரி ஆனேன். தேயிலைத் தோட்டங்களில் அந்தக் காலத்தில் நடந்த அக்கிரமம் சொல்லி முடியாது. அங்கே தொடர்ந்து வேலை செய்ய எனக்குப் பிடிக்கவில்லை. கொஞ்சம் கையில் பணம் சேர்த்துக்கொண்டு இந்தப் பக்கம் வந்தேன். சின்ன வியாபாரமாக ஆரம்பித்தேன். ஆஞ்சனேயர் அருளால் அது வர வரப் பெருகியது. ஜவுளிக்கடை வைத்தேன். அது முதல் நான் கௌரவ மனிதர் கூட்டத்தில் சேர்ந்து விட்டேன்.

"ஆஞ்சனேய தர்மமாகக் கையில் வைத்திருந்த பத்து ரூபாயைக் குரங்குப் பிடியாகச் செலவழிக்காமல் பிடித்து வைத்திருந்தேன். வியாபாரத்தில் லாபக் கணக்குப் பார்த்து, ரூபாய்க்கு ஒரு சதம் தனியே எடுத்து ஆஞ்சனேயருக்கு என்று போட்டேன்.

"என் பாவத்துக்குப் பரிகாரமாக என்ன செய்யலாமென்று யோசித்து யோசித்துப் பார்த்தேன். கடைசியில் கோயில் கட்டுவதென்று தீர்மானித்தேன்.

"மாருதியின் திருவருளால் அதற்கு வேண்டிய பணமும் சேர்ந்தது. ஆஞ்சனேயரே இந்தக் கோயிலைக் கட்டுவித்துக் கொண்டார். சாமி, இந்தப் பாவிக்கு இன்னும் மனசு ஆறுதல் பெறவில்லை. என் குரங்கு தெய்வமாகி விட்டது என்று தோன்றினாலும் அதைக் கொன்றுவிட்டேனே என்ற பச்சாத்தாபம் இன்னும் நீங்கின பாடில்லை."

செட்டியார் கதையைச் சொல்லி முடித்ததும் சாமியாரைக் கவனித்தார். என்ன இது? சாமியார் தாரை

தாரையாகக் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தார். கதை அவர் மனசை உருக்கிவிட்டது போலும்!

"சாமி! இந்தக் கதையைக் கேட்ட உங்களுக்கே மனசு இவ்வளவு வேதனைப்படுமானால், பாவத்தைச் செய்த எனக்கு எவ்வளவு வேதனை இருக்கும்? யோசித்துப் பாருங்கள். இந்தப் பாவம் முழுவதும் தீர வழியுண்டா? சாக்ஷாத் ஆஞ்சநேய மூர்த்தியைப் போலவே நீங்கள் எழுந்தருளியிருக்கிறீர்கள். சொல்லுங்கள். பாவம் தீருமா?" என்று நாக்குத் தழுதழுக்கச் செட்டியார் கேட்டார்.

இப்போது சாமியார் கண்ணீர் விடுவதோடு நிற்கவில்லை; விம்மலானார்; விக்கி விக்கி அழுதார். செட்டியாருக்கு ஒன்றுமே புலப்படவில்லை. "ஏன் சாமி?" என்றார்.

"நீ பாவி அல்ல அப்பா! நீ மகா புண்ணியசாலி; பெரிய பக்தன். ஆஞ்சநேயரின் திருவருளைப் பூரணமாகப் பெற்றவன். நான்தான் மகாபாவி! மகா பாதகன்!" என்று விம்மலுக்கிடையேவார்த்தைகளை வெளியிட்டார் சாமியார்.

"என்ன சாமி, அப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"ஆம் அப்பா? நான்தான் அந்தக் குரங்கைக் கொன்ற பாவி! மோதிரத்தைக் கொடுத்துக் கொன்ற பாவி!"

"என்ன! நீயா?"—செட்டியார் கேள்வியிலே ஆச்சரியம் பொங்கியது.

"ஆம். அந்தப் பாவி கந்தசாமி நான்தான். உன் வாழ்க்கை ஏறுமுகமாக நிற்கிறது. என் வாழ்வு இறங்குமுகமாக இருக்கிறது. நான் இன்று பரதேசி; என் பாவத்துக்குப் பரிகாரம் காணாத பாவி!"



மாத்துறை ஆஞ்சநேயர் கோயிலில் இன்று பூஜை செய்கிறவர் கந்தசாமி சுவாமிகள். அவர் பக்தி பெரிதா, ஆஞ்சநேய செட்டியார் பக்தி பெரிதா என்று எடை போட்டுப் பார்க்க யாராலும் முடியாது.

# புது மலர்ச்சி

"என்ன, அத்தனை சுவாரசியமாக வாசித்துக்கொண் டிருக்கிறீர்களே! யார் எழுதின கடிதம்?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே புகுந்தேன்.

"வாருங்கள், வாருங்கள். என்னுடைய நாத்தனார் எழுதியிருக்கிறார்" என்று பவானி சொன்னாள்.

அவளுக்கு அதில் சுவாரசியம் உண்டாவதற்குக் கேட் பானேன்? அவளுடைய இன்றைய வாழ்க்கையிலே அவள் நாத்தனார் எழுதிவரும் கடிதங்களே உயிர் மருந்தாக உதவின. அவளுடைய அந்தரங்கமெல்லாம் தெரிந்த எனக்கு அந்தக் கடிதங்களிலே அவள் ஆழ்ந்து போவதற் குரிய காரணம் நன்றாகத் தெரியும்.

பவானி எங்கள் ஊர்ப் பெண் பள்ளிக்கூடத்தில் ஓர் ஆசிரியை. குழந்தைகளெல்லாம் 'சின்ன வாத்தியாரம்மா' என்று அழைப்பார்கள். குழந்தைகளிடம் அவள் அன் பாகப் பழகுவாள். ஒட்டிக்கொண்டு பேசுவாள். யாரோ தூரத்து உறவினளான கிழவி ஒருத்தியோடு தனி வீட்டில் குடியிருந்துவந்தாள்.

வந்த புதிதில் எனக்கு அவ்வளவு பழக்கம் இல்லை. என் பெண் சுந்தரிக்கு அவள் ஆசிரியை. சுந்தரி அவளைப் பற்றி அடிக்கடி புகழ்ந்து சொல்வாள். "ஒரு நாள் அவளை இங்கேதான் கூட்டிவாயேன்" என்று சொன்னேன். அவள் மறுநாளே பவானியைக் கூட்டி வந்துவிட்டாள். அது முதல் எங்கள் இருவருக்கும் நட்பு உண்டாயிற்று. அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவாள். நானும் எப்போ தாவது அவள் வீட்டுக்குப் போவேன்.

ஒரு நாள் அவளிடம் துணிச்சலாக ஒரு கேள்வி கேட்டேன். "உங்கள் கழுத்தில் திருமங்கல்யம் இருக்கிறதே! உங்கள் கணவர் எங்கே இருக்கிருர்? நீங்கள் ஏன் இப்படித் தனியே இருக்கிறீர்கள்?" என்று கேட்டேன். அவள் எல்லாவற்றையும் விரிவாகச் சொன்ஞள்.

★

நடுத்தரக் குடும்பத்தில் பிறந்தவள் பவானி. எட்டாம் வகுப்பு வரையில் வாசித்திருந்தாள் .கல்யாண வயசு வந்தவுடன் அவள் தகப்பஞர் நிறையப் பணம் செலவு செய்து பி. ஏ. படித்த ஒரு பையனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார். கல்யாணம் ஆன அதிருஷ்டம் பிள்ளையாண்டானுக்குக் காலேஜில் பேராசிரியர் வேலை ஆயிற்று. பேராசிரியர் எப்போதும் படித்துக்கொண்டே இருப்பவர்; தத்துவ நூலாராய்ச்சியிலே ஈடுபடுபவர். இப்போது பங்களூரில் ஒரு கல்லூரியின் தத்துவப் பேராசிரியராக விளங்குகிருர். பவானி புக்ககம் போய் ஒரு வருஷந்தான் வாழ்ந்தாள். வீடு முழுவதும் புத்தக மயம். அவற்றை ஒழுங்காக எடுத்து வைப்பதற்கே இரண்டாளுக்கு வேலை சரியாக இருக்கும். பேராசிரியருக்குத் தங்கை ஒருத்தி இருக்கிருள்; கல்யாணி என்று பெயர். அவள் கல்யாணமானவுடனே கணவனை இழந்தவள்; தன் தமையஞருடன் இருந்து வரலாஞள். அவளுக்குக் கொஞ்சம் இங்கிலீஷ் எழுதப் படிக்க வரும்; அவள் தன் அண்ணுவுக்குச் சில சிறிய உதவிகளைச் செய்வாள். அவர் எழுதியவற்றை ஒழுங்கு படுத்தி வைப்பது, குறிப்புகளைச் சிதருமல் சேர்த்து வைப்பது, புத்தகங்களை உரிய இடத்தில் அடக்கி வைப்பது முதலிய வேலைகளைச் செய்வாள்.

பவானி வீட்டுக்கு வந்ததும் சமையல் வேலை முதலியவற்றை அவளிடம் விட்டுவிட்டாள். பவானிக்கும் புத்தக

விஷயங்களில் அவ்வளவு நாட்டம் இல்லை. மணமான புதிதில் கணவனும் மனைவியும் ஒருவிதமாக வாழ்க்கையை நடத்தினுர்கள். பவானியின் கணவர் அவளிடம் சில வேலைகளை ஏவுவார். புத்தகங்களின் பெயரைத் தெரிந்துகொள்ளும் அளவுக்காவது இங்கிலீஷ் படித்துக்கொள்ளச் சொல்வார். "அதுதான் உங்கள் தங்கை கவனித்துக்கொள்கிருளே" என்று துடுக்காக இவள் பதில் சொல்லிவிட்டாள். அன்றுதான் பேராசிரியர் உள்ளத்தில் இவளைப் பற்றி ஓர் அருவருப்பு முளையிடத் தொடங்கியது.

கல்யாணி பவானியிடத்தில் மிகவும் பிரியமாக இருந்தாள். "என்னைப் படிக்காத முட்டாள் என்று அவர் அடிக்கடி சொல்கிருர்" என்று பவானி தன் நாத்தனுரிடம் சொல்லி வருந்துவாள்.

"ஆமாம். அவருக்கு என்ன வேலை? எல்லாரும் படித்துப் பேராசிரியராகிவிட்டால் பிறகு குடும்பம் நடத்த யார் வருவார்கள்?" என்று கல்யாணி சமாதானம் சொல்வாள்.

அவர்கள் இரண்டு பேரும் வரவர நெருங்கிப் பழகினுர்கள். அவ்வளவுக்கவ்வளவு பவானிக்கும் அவள் கணவருக்கும் இருந்த நெருக்கம் தளரத் தொடங்கியது. எதற்கெடுத்தாலும் சிள்சிள்ளென்று விழத் தொடங்கினுர்.

ஒரு நாள் பிற்பகல் மூன்று மணிக்குப் பவானி அசதியாகப் படுத்துக்கொண்டிருந்தாள். முதல் நாள் இரவு நெடுநேரம் விழித்துக்கொண்டு வேலைகளைச் செய்தமையால் அவளை அறியாமல் தூக்கம் கண்ணை இழுத்தது. தலைக்கு உயரமாக ஒன்றும் கிடைக்கவில்லை. அங்கே அலமாரியில் இருந்த ஒரு பெரிய புத்தகத்தை எடுத்து அதன்மேல் ஒரு துணியை விரித்துத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு படுத்தாள். அப்படியே தூங்கிவிட்டாள்.

என்றும் இல்லாத புதுமையாக அன்று பவானியின் கணவர் மூன்றரை மணிக்கே வீட்டுக்கு வந்துவிட்டார். வந்தவுடன் தங்கை அளித்த காபியை உண்டுவிட்டுத் தம் புத்தகக் குவியலிடையே மறைந்தார். ஏதோ புத்தகம் வேண்டியிருந்தது. தேடினார்; கிடைக்கவில்லை. தங்கையைக் கூப்பிட்டுக் கேட்டார்; இருவரும் தேடினார்கள்; கிடைக்கவில்லை. பவானி தலைக்கணையாக வைத்திருந்த புத்தகத்தைத்தான் அவர் தேடினார். கடைசியில் அது அங்கே இருப்பது தெரிந்தது. அத்தனை நேரம் தேடின பிறகு, அவள் தலையணையாக்கிக் கொண்டது தெரிந்தால் யாருக்குத்தான் கோபம் வராது? ஆனால் அவர் வெளிப்படையாகக் கோபிக்கவில்லை. பேசாமல் பவானியின் தகப்பனாருக்கு ஒரு கடிதம் எழுதினார், வந்து அழைத்துக் கொண்டு போகும்படி. அவர் வந்து அழைத்துப் போனார். இரண்டு மாதங்களில் அனுப்பிவிடலாம் என்றுதான் அழைத்துச் சென்றார். ஆனால் பவானியின் துரதிருஷ்டம் வேறு விதமாக இருந்தது. அவள் கணவர் அவளை அழைத்துக்கொள்ளவே இல்லை.

ஒரு வருஷம் இப்படி இருந்தாள். அவள் கணவருக்கு என்ன என்னவோ எழுதிப் பார்த்தாள். அவள் தகப்பனாரும் எழுதினார். ஒரு பதிலும் கிடைக்கவில்லை. அவள் தன் நாத்தனாருக்கு எழுதினாள். இரண்டு மூன்று கடிதங்கள் எழுதின பிறகு அவளிடமிருந்து ஒரு சிறிய கடிதம் கிடைத்தது. "அண்ணாவின் கோபம் தணியவில்லை. எப்படியாவது உன்னை இங்கே கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்பதுதான் என் ஆசை. அதற்கு வேண்டிய முயற்சிகளையெல்லாம் செய்வேனென்று நிச்சயமாக நம்பு. முயற்சி பலித்தால் உன் அதிருஷ்டம். அண்ணாவுக்குத் தெரியாமல் உனக்குக் கடிதம் எழுதப் பயமாக இருக்கிறது. ஆகையால் என்னிடமிருந்து கடிதத்தை எதிர்

பாராதே. நல்ல செய்தி இருந்தால் தெரிவிக்கிறேன்" என்று அவள் எழுதியிருந்தாள். அதைக் கண்டபோது பவானிக்குக் கொஞ்சம் நம்பிக்கை உதயமாயிற்று.

ஒவ்வொரு நாளும் ஏதாவது நல்ல செய்தி வராதா என்று எதிர்பார்த்துக்கொண்டே இருந்தாள். ஒன்றும் கிடைக்கவில்லை. "நாத்தனாரே சத்துருவாக இருப்பாள். அவளை நம்புகிறாளாம்!" என்று தெரிந்த பெண்மணிகள் பரிகாசம் செய்தார்கள்.

மாதங்கள் போய்க் கொண்டிருந்தன. பவானியின் தகப்பனார் உலக அநுபவம் உள்ளவர். அவளை வீணே வீட்டிலே இருக்கும்படி செய்ய மனமின்றிப் பள்ளிக் கூடத்தில் சேர்த்தார். ஆறாவது பாரம் வரையில் படித்துப் பரீட்சையில் நன்றாகத் தேர்ச்சி பெற்றாள். பிறகு ஆசிரியப் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். அங்கும் படித்துத் தேர்ச்சி பெற்றாள். பிறர் கையை எதிர்பாராமல் பிழைப்பதற்குத் தம் மகளுக்கு ஒரு வழியைப் பண்ணி வைத்துவிட்டு அவர் கண்ணை மூடிக்கொண்டார்.

பவானி, வாத்தியாரம்மாள் ஆனாள். பங்களூரில் தன் கணவர் இன்னும் அந்தக் கல்லூரியில் இருப்பதைத் தெரிந்து கொண்டாள். தன் நாத்தனாருக்குத் தன் வாழ்வில் ஏற்பட்ட மாறுதல்களை யெல்லாம் எழுதியனுப்பினாள். அவளிடமிருந்து விடையே வரவில்லை.

திடீரென்று ஒரு நாள், இந்த ஊருக்குப் பவானி வந்த மறு வருஷம், ஒரு கடிதம் வந்தது. கல்யாணிதான் எழுதியிருந்தாள். "பல மாதங்களுக்கு முன் நீ எழுதிய கடிதம் கிடைத்தது. நான் இன்னும் என் முயற்சிகளைத் தளர்த்த வில்லை. என்றைக்காவது ஒரு நாள் கடவுள் என் ஆசையை நிறைவேற்றமாட்டாரா என்று ஏங்கி வருகிறேன். உனக்

காவது பல குழந்தைகளைப் பார்த்துப் பழகுவதனால் ஆறுதல் ஏற்படும். எனக்கு இங்கே என்ன இருக்கிறது? அண்ணாவின் புத்தகங்களைப் பார்த்துக்கொண்டு பொழுதைப் போக்குகிறேன். அண்ணாவோ முன் மாதிரி இல்லை. அவருடைய கோபம் குறைந்து விட்டது. உன்னை அழைத்து வரும் விஷயத்தில் மட்டும் பழைய உறுதி தளரவில்லை. என் முயற்சிக்கு ஒரு சிறிய பலன் மாத்திரம் கிடைத்தது. உனக்குக் கடிதம் எழுதுவதற்கு அண்ணா உத்தரவு கொடுத்திருக்கிறார். நீயும் நானும் பழகி எத்தனையோ வருஷங்கள் ஆனாலும் இப்போதாவது கடித மூலம் பழகச் சந்தர்ப்பம் கிடைத்ததே என்று மகிழ்ச்சி அடைகிறேன்."—இதுதான் பவானியின் நாத்தனார் எழுதிய கடிதத்தின் சாரம்.

அன்று முதல் பவானியின் வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயம் தொடங்கிற்றென்றே சொல்ல வேண்டும். இவள் நாத்தனாரிடமிருந்து மாதம் ஒரு கடிதமாவது இவளுக்கு வரும். பவானி தன் கணவரோடு வாழாவிட்டாலும் அவரைப் பற்றிய செய்திகளை அடிக்கடி தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. தன் மனத்திலுள்ள உணர்ச்சிகளை எழுதித் துயரத்தை ஆற்றிக் கொள்ளவும் சந்தர்ப்பம் உண்டாயிற்று. கல்யாணி எழுதிய கடிதங்களில் சிலவற்றை எனக்குப் பவானி காட்டியிருக்கிறாள். அவள் கடிதம் வந்ததென்றால் அன்றைக்குப் பவானி முகத்தில் ஒரு தனி ஒளியைக் காணலாம்.

"அண்ணாவுக்கு இப்போது பரீட்சை விடைத்தாள்கள் வந்திருக்கின்றன. இரவெல்லாம் உட்கார்ந்து கொண்டு திருத்திக் கொண்டிருக்கிறார். அடிக்கடி போய்ப் பார்க்கிறேன். இந்த மாதிரி சமயங்களில் நீ இங்கே இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அவருக்கும் எத்தனை உப

காரமாக இருக்கும்! இது அவருக்குத் தெரியவில்லையே!''—இப்படி ஒரு கடிதத்தில் எழுதியிருந்தாள்.

"நேற்று ராத்திரியெல்லாம் நான் அழுது அழுது தலைவலியை வருவித்துக் கொண்டேன். நேற்று மாலை அண்ணாவைப் பார்க்கச் சென்னையிலிருந்து ஒரு பேராசிரியர் வந்திருந்தார். அவர் தம் மனைவியையும் அழைத்துக் கொண்டு வந்தார். இரண்டு பேராசிரியர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள். வந்தவர் வயசானவர். அவர் மனைவி பழைய சம்பிரதாயத்தை அநுசரிக்கிறவள். அந்த அம்மாள் உள்ளே வந்தாள். என்னைப் பார்த்தாள். 'ஏன் அம்மா நீ நெற்றிக்கு இட்டுக் கொள்ளவில்லை?' என்று கேட்டாள். நான் என் நிலையைச் சொன்னேன். 'இவருக்குப் பெண்டாட்டி இல்லையா?' என்று தொடர்ந்து கேட்டாள். 'ஊருக்குப் போயிருக்கிருள்' என்று சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் வீட்டு வேலைக்காரி, 'அம்மா இங்கே வருகிறதே இல்லை' என்று சொல்லிவிட்டாள். 'சரிதான். படித்த பெண்போலிருக்கிறது. ஏன் வேறொரு கல்யாணம் பண்ணிக்கொள்ளக் கூடாது? அது கிடக்கட்டும். உனக்கு ஒன்று சொல்லுகிறேன். நீ கோபித்துக் கொள்ளக்கூடாது. வாழ்க்கை இழந்த உன்னைப் போன்றவர்கள் வாழ்கிறவர்களுக்குக் குறுக்கே முள்ளாக நிற்கக் கூடாது. என்ன, நான் சொல்கிறது தெரிகிறதா?' என்று கேட்டாள். நான் உங்களை ஒன்ருக வாழவிடாமல் தடுக்கிறேன் என்று அந்த அம்மாள் தீர்மானம் செய்துவிட்டாள். இதை நினைத்து நினைத்து ராத்திரி எல்லாம் நான் தூங்கவில்லை.''—இது ஒரு கடிதம்.

"மன்னி, உண்மையைச் சொல்கிறேன். எனக்கே இந்த வாழ்வு வெறுத்துப் போயிற்று. உடம்பும் சரியாக இல்லை. அடிக்கடி மயக்கம் மாதிரி வருகிறது. அண்ணா

விடம் எவ்வளவோ சொல்லிப் பார்க்கிறேன். உன்னை அழைத்துக்கொண்டு வந்து விடும்படி சொல்கிறேன். என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை யென்று சொல்கிறேன். அவர், 'அந்தச் சனியனைப் பற்றிப் பேசாதே. உன்னால் ஆகாவிட்டால் ஒரு வேலைக்காரியைப் போட்டுவிடுகிறேன். நீ ஓய்வு எடுத்துக்கொள்' என்கிருர். என் உயிரைக் கொடுத்தாவது உன்னை இங்கே கொண்டுவந்துவிடவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். என் ஆசை நிறைவேறுமா?"
—இப்படி ஒரு கடிதம்.

பங்களூர் நடவடிக்கைகளை அடிக்கடி கல்யாணியின் மூலம் பவானி தெரிந்துகொண்டு வந்தாள். தன் நாத்தருக்கு உடம்பு பலஹீனமாக இருப்பதாகத் தெரிந்த போது அவளைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று எண்ணிஞள். "வரட்டுமா?" என்று எழுதிஞள். "வர வேண்டாம்" என்று எழுதிவிட்டாள் அவள். அவள் வாக்கைத் தேவவாக்கியமாக மதிப்பவளாகையால் இவள் பேசாமல் நின்று விட்டாள்.

★

அன்று பவானி பள்ளிக்கூடத்துக்கே வரவில்லை என்று என் மகள் சுந்தரி சொன்ஞள். "ஆரோ செத்துப் போனதாகக் கடிதாசி வந்ததாம், அம்மா" என்ருள். யாராக இருக்கும் என்று யோசனை பண்ணிப் பார்த்தேன். பயங்கரமான எண்ணங்களெல்லாம் உதித்தன. மேலே சிந்தனையை ஓடவிடாமல் பவானியையே தேடிச் சென்றேன்.

அவள் தன் வீட்டுக் கூடத்தில் தலையை முடிந்து கொள்ளாமல் கண்ணீரும் கம்பலையுமாக உட்கார்ந்திருந்தாள். "என்ன சமாசாரம்?" என்று கேட்டேன்.

"என்னத்தைச் சொல்லுவது? என் வாழ்வே போய் விட்டது" என்று விம்மிஞள்.

"விஷயத்தைச் சொல்லுங்கள்" என்று பின்னும் கேட்டேன்.

"நான் யாரை என் வாழ்வுக்கு ஆதாரம் என்று நம்பி வாழ்கிறேனோ, எவருடைய கடிதங்கள் என்னுடைய வாழ்க்கையில் புது மலர்ச்சியை உண்டாக்கினவோ, எந்த ஆத்மா என் நன்மைக்காக அல்லும் பகலும் பாடுபட்டதோ அந்தக் குணவதி, என் நாத்தனார் என்னைத் தவிக்க விட்டு விட்டுப் போய்விட்டார்!" என்று அழுதாள் அவள்.

நானே அயர்ந்து போனேன். பவானியின் உடல் எங்கள் ஊரில் வாழ்ந்தாலும் அவள் உள்ளம் பங்களூரில் வாழ்ந்தது. அவளுடைய கணவரோடே வாழ்ந்தது என்று கூடச் சொல்லலாம். அப்படி வாழ்வதற்குத் துணையாக இருந்தவை கல்யாணியின் கடிதங்கள். என்றைக்காவது நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையை அந்தக் கடிதங்கள் ஊட்டி வந்தன. இனிமேல் யார் அப்படிக் கடிதம் எழுதப் போகிறார்கள்? கடிதம் கிடக்கட்டும்; பவானியை அவள் கணவரோடு சேர்க்க இனிமேல் யார் முயற்சி செய்யப் போகிறார்கள்?

நான் பவானியை எப்படித் தேற்றுவது? தேற்றுவதற்கு என்ன இருக்கிறது? கடலிலே கப்பல் ஆழ்ந்த வியாபாரிக்கு என்ன சமாதானம் சொல்ல முடியும்? "தெய்வந்தான் உங்களுக்குத் துணை இருக்க வேண்டும். செத்துப் போனவள் தெய்வமாக இருந்து உங்களுக்கு நன்மை செய்ய வேண்டும்" என்று ஏதோ ஒப்புக்குச் சொல்லி வைத்தேன்.

'இனிமேல் பவானியின் வாழ்வில் வேறு அத்தியாயம் தொடங்கப்போகிறது. அது நிச்சயமாக இருள் அடர்ந்ததாக இருக்கும்' என்பதை எண்ணியபோது எனக்குப் பகீரென்றது. மெல்ல விடை பெற்றுக்கொண்டு வந்தேன்.



இரண்டு வாரங்கள் கடந்தன. திடீரென்று பவானிக்கு ஒரு தந்தி வந்தது. அவளுடைய கணவர் உடனே புறப்பட்டு வரும்படி உத்தரவிட்டிருந்தார். அவளுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. என்னிடம் வந்து தந்தியைக் காட்டினாள். "என் சகோதரியைப் போல உங்களை நினைத்திருக்கிறேன். இது நம்பக்கூடிய தந்தியா? என்ன செய்வது? சொல்லுங்கள்" என்று கேட்டாள்.

"நீங்கள் என்ன குழந்தையா? உங்களை யார் ஏமாற்ற முடியும்? போய்ப் பாருங்கள். கடவுள் கிருபையால் நல்லதாகவே இருக்கும். இல்லாவிட்டால் திரும்பி வருவதற்கு யார் தடை சொல்லப் போகிறார்கள்?" என்றேன்.

பவானி புறப்பட்டுவிட்டாள். சௌக்கியமாகப் போய்ச் சேர்ந்ததாகச் சுருக்கமாக ஒரு கார்டு போட்டாள். அவ்வளவுதான்; ஒரு மாசம் வரையில் கடிதமே இல்லை. பிறகு ஒரு நீண்ட கடிதமே வந்தது. கடிதமா அது? பெரிய கட்டுரை!

"......கடவுள் கண் திறந்து பார்த்துவிட்டார் அம்மா. நான் தனிமையிலே விட்ட கண்ணீரெல்லாம் சேர்ந்து இன்று இங்கு இன்பப் பயிரை விளையச் செய்துவிட்டது. இந்தச் சமயத்தில் அந்தப் புண்ணியவதியை நினைக்க வேண்டும். என் வாழ்நாள் உள்ளவரையில் அவரை மறக்க முடியாது. எனக்கு முதல் தெய்வம் அவர்தாம். அப்புறந்தான் இவர். ஆம்! என் நாத்தனார் கல்யாணியைத் தான் சொல்கிறேன். அவர் 'என் உயிரைக் கொடுத்தாவது உன்னை என் அண்ணாவோடு சேர்ப்பேன்' என்று முன்பு எழுதினாரே, அது எவ்வளவு நிஜமாகப் போய்விட்டது! அவர் இருக்கிற வரைக்கும் என்னை அழைக்காத இவர், அவர் மறைந்தவுடன் புத்தி திரும்பி என்னை அழைத்துக்

கொண்டார். உண்மையில் அவர் இருந்ததே நான் இருந்ததற்கு ஒரு தடை போல இருந்திருக்கிறது. என்ன ஆச்சரியம் பாருங்கள்! அவர் இவருக்கு வேண்டிய எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டார். அதனால் இவருக்கு வாழ்க்கை நடந்துகொண்டிருந்தது. அவர் மறைந்த பிறகு இவருக்கு ஒன்றுமே ஓடவில்லை. எதற்கெடுத்தாலும் பிறரைக் கூப்பிட்டு அதை எடு, இதை எடு என்கிறவர் இவர். வேலைக்காரன் எப்போதும் இவருடன் இருந்து செய்ய முடியுமா? என் நாத்தனார் பிராணனை விட்டுக் கொண்டு எல்லாவற்றையும் செய்துகொண்டு வந்தார். செய்துகொண்டிருந்தவரைக்கும் அவர் அருமை இவருக்குத் தெரியவில்லை. அவர் போன பிறகு இப்போது சொல்லிப் புலம்புகிறார். 'அவள் அப்போது கிளிப் பிள்ளைக்குச் சொன்னது போல் சொன்னாளே, கேட்டேனா? கேட்டிருந்தால், அவள் சொன்னபடி உன்னை அழைத்து வந்திருந்தால் அவளுக்கும் சிரமமில்லை; எனக்கும் சௌக்கியம். பேசத் துணையின்றி, உடன் இருந்து உதவி செய்ய ஒருவரின்றி, எனக்காக ஓடாக உழைத்துத் தன் உயிரை மாய்த்துக்கொண்டாள். நான் பாவி! அவள் அருமையை அப்போதே அறியாமற் போனேன். கடைசி நேரத்தில் அவள் சொன்னபோது தான் சுரீரென்று பட்டது' என்று இப்போது சொல்லிச் சொல்லி உருகுகிறார்.

" 'இனி மேல் நான் அதிக நாள் இருக்கமாட்டேன். இத்தனை காலம் உனக்கு நான் ஏதாவது உபகாரம் செய்திருந்தால் அதற்குப் பிரதி உபகாரமாக ஒன்றே ஒன்றை நீ எனக்குச் செய்ய வேண்டும். நான் செத்துப் போவது நிச்சயம். அந்தச் செய்தியை அவளுக்குத் தெரிவி. பிறகு அவளை அழைத்து வந்து வைத்துக்கொண்டு குடியும் குடித்தனமுமாக வாழ். அவள் நல்ல உத்தமி. அவள்

எனக்கு எழுதின கடிதங்களைப் படித்துப் பார். என் பெட்டியில் வைத்திருக்கிறேன். உன்னைப் பற்றி எப்படியெல்லாம் எண்ணிக்கொண்டிருககிறுள் என்பதை அந்தக் கடிதங்கள் சொல்லும். அவள் குணத்தையும் தெளிவாக்கும்' என்று என் நாத்தனுர் இவரிடம் கடைசி வேண்டுகோளை விடுத்தாராம். கல்லாக இருந்தாலும் அந்த உத்தமியின் வார்த்தைக்கு உருகிவிடுமே! இவர் உருகினது என்ன ஆச்சரியம்? தம் தங்கை இறந்தவுடன் என்னை அழைத்து வரவேண்டாம் என்று இருந்தாராம். ஆனுல் அந்தப் பதினைந்து நாட்களிலேயே இவருக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிட்டதாம். படிப்புத் தெரியுமே அன்றி வாழத் தெரியாதவர் இவர்......

"இப்போது நான் எப்படி இருக்கிறேனென்ருு கேட்கிறீர்கள்? இனிமேல் நான் பைத்தியக்காரத்தனம் செய்யமாட்டேன். 'உனக்கு உதவியாக யாரையாவது வைத்துக்கொள்' என்று இவர் சொல்லிவிட்டார். அங்கே என்னுடன் இருந்த என் அத்தையை இங்கே அழைத்து வந்துவிட்டேன். எனக்கு இப்போது இங்கிலீஷ் தெரியும் அல்லவா? நாள் முழுவதும் அவர் புத்தகங்களை அடுக்குவதிலும் அட்டை போடுவதிலும் முனைந்திருக்கிறேன். இதுவே இன்னும் இரண்டு மாத வேலை கொள்ளும்...

"அவர் எப்படி இருக்கிருர்?—என்ன இருந்தாலும் அவர் என் கணவரல்லவா? மேலே நான் என்ன சொல்வது?

"உங்கள் ஆசிர்வாதம் என்றைக்கும் இருக்கவேண்டும். இறந்த பிறகும் தெய்வமாக நின்று என் நாத்தனுர் என்னைக் காப்பாற்றுகிருர் என்றே நம்புகிறேன்......"

கடிதம் முழுவதும் இவ்வளவுதான் என்று எண்ணிவிடாதீர்கள்! முக்கியமான பகுதிகள் இவை. என்னவோ பாவம். அன்றும் தூரத்திலிருந்தபடியே பவானிக்கு நம்பிக்கை ஊட்டினுள் கல்யாணி; இன்றும் மறைவில் இருந்தபடியே ஊட்டுகிருள். அவள் பெயர் வாழட்டும்!

# விடுதலை உண்டா?

"வங்காள கவர்னர் கல்கத்தாவில் ஒரு புத்தகசாலையைத் திறந்துவைத்தார். அதற்கு பர்த்வான் மகாராஜா ஒரு லக்ஷ ரூபாய் நன்கொடை யளித்தார்" என்று தாமோதரன் சமாசாரப் பத்திரிகையைச் சத்தம் போட்டுப் படித்துக்கொண்டிருந்தான். பக்கத்தில் இருந்த குழந்தை சந்திரா, "பொம்மை பார்க்கவேண்டும்" என்று சொன்னாள். தாமோதரன் கடைசிப் பக்கத்தில் இருந்த படத்தைக் காட்டினான். "இது என்ன?" என்று சந்திரா கேட்டாள். 'கல்கத்தாவில் புத்தகசாலையைக் கவர்னர் திறந்து வைக்கிறார்' என்று கீழே எழுதி இருந்ததை வாசித்தான் தாமோதரன்.

"கல்கத்தாவா? அந்தக் கல்கத்தாவா?" என்று கேட்டாள் சந்திரா.

"எந்தக் கல்கத்தா? உனக்கு ரொம்பத் தெரியுமோ?" என்று தாமோதரன் கேட்டான்.

"தெரியுமே! சாந்தாவின் அப்பா அங்கேதான் இருக்கிறார்?"

"எந்தச் சாந்தாவின் அப்பா?"

"கோகிலா மாமியகத்துச் சாந்தா?"

"எந்தக் கோகிலா மாமி?"

"போ அண்ணா! சும்மா சும்மா கேட்கிறாய்!" என்று சலித்துக்கொண்டாள் இளங் குழந்தை.

"அண்ணா, நீ சாந்தா அப்பாவுக்குக் காகிதம் எழுதுகிறாயா?"

"காகிதமா? எதற்கு?"

"சாந்தா ரொம்ப அழுகிறாள். அவள் சித்தி அவளை அடிக்கிறாள். அதை எழுதவேணும்."

"உன்னைக்கூடத்தான் அம்மா அடிக்கிறாள். அதையும் எழுதட்டுமா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான். சந்திரா யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

"சாந்தா வெளியிலே வந்து விளையாடவே முடியாது, அண்ணா" என்று இரக்கக் குரலோடு கூறினாள்.

"ஏனாம்?"

"அவள் சித்தி அவளைக் கட்டிப் போட்டிருக்கிறாள்."

"எதற்காக?"

"அவள் விஷமம் பண்ணுகிறாளாம். பாவம்! அவளுக்கு அம்மா இல்லையாமே! ஏன் அண்ணா, நம் அம்மாவே அவளுக்கு அம்மாவாய் ஆய்விட்டால் என்ன அண்ணா?"

"போ, போ, வாய்க்கு வந்ததெல்லாம் உளறுதே; நான் பள்ளிக்கூடம் போகவேணும்."



சந்திரா பட்சணம் தின்றுகொண்டிருந்தாள். மெதுவாகத் தின்றுகொண்டிருந்தாள். அவள் மனத்தில் ஏதோ ஒரு வேதனை கலந்த யோசனை. அதனால் குழந்தை பட்சணத்தைச் சுவைத்துத் தின்னவில்லை. கையால் மெதுவாகப் பர்பியைப் பிட்டுக் கொஞ்சங் கொஞ்சமாக வாயில் இட்டுக் கடித்தாள். அவள் கண்ணில் வெளிப் பார்வை இல்லை. அது எங்கோ சிந்தனை உலகத்தில் பார்த்துக் கொண்டிருந்தது.

அப்போது அம்மா அங்கே வந்தாள். "என்னடி இது? அரை மணியாக இதைத் தின்றுகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

சட்டென்று குழந்தை பதில் சொல்லவில்லை. அவள் புறக் காட்சிக்கு அப்பாலல்லவா இருந்தாள்?

"இல்லை அம்மா. சாந்தாவுக்கு ஒன்று கொண்டுபோய்க் கொடுக்கட்டுமா?"

"ஏன், அவள் வீட்டில் பண்ணிக் கொடுக்கமாட்டார் களா?"

"அவளுக்கு அம்மா இல்லையாமே! அம்மா இருந்தால் தான் பட்சணம் தினமும் கிடைக்குமென்று அண்ணு சொல்கிருன். ஏன் அம்மா, நீயே அவளுக்கு அம்மாவாக இருந்துவிடேன்!"

"போடி பைத்தியம்!" என்று சிரித்துக்கொண்டே போய்விட்டாள் அம்மா.



அப்பா வந்தார். கையில் ரப்பர் பொம்மை ஒன்றை வரும்போது கடையில் வாங்கிவந்தார். வரும்போதே, "சந்திரா! சந்திரா!" என்று கூப்பிட்டுக்கொண்டே வந்தார்.

"ஏன் அப்பா?" என்று கன்றுக் குட்டிபோல் துள்ளிக் குதித்து ஓடிப்போய் அவர்முன் நின்ருள் குழந்தை.

"இதோ பார், உனக்குப் பொம்மை. நன்ருயிருக்கிறதா?" என்று அப்பா சந்திராவின் கையில் அதைக் கொடுத்தார்.

சந்திரா அதை ஆவலோடு வாங்கிக் கொண்டாள். "இந்தப் பொத்தான் எதற்கு அப்பா?" என்று கேட்டாள்.

"அதை அழுத்திப் பார்."

அவள் அழுத்திஞள். கீச்சென்று பொம்மை கத்தியது. திடுக்கிட்டுக் குழந்தை அதைக் கீழே போட்டுவிட்டாள். உடனே அப்பா இடியிடி என்று சிரித்தார். அவளும் சிரித்தாள். பொம்மையைக் கையிலே எடுத்துக்கொண்டாள்.

"இது எங்கே அப்பா வாங்கினுய்?"

"இங்கேதான்."

"இந்த மாதிரிப் பொம்மை கல்கத்தாவில் கிடைக்குமோ?"

"அதென்ன அது? கல்கத்தாவைப் பற்றி நீ எங்கே கேள்விப்பட்டாய்? அங்கே பொம்மை இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன?"

"கிடைக்குமா? சொல்லேன்."

"கிடைக்கும்" என்று புன்னகை பூத்தபடியே சொன்னுர் சந்திராவின் தகப்பனுர்.

"அப்படியானுல் ஒரு காகிதம் எழுது அப்பா."

"பொம்மை இங்கே கிடைக்கிற போது, அங்கே எதற்குக் காகிதம் எழுதவேணும்?"

"இல்லே, இல்லே. சாந்தாவுடைய அப்பாவுக்கு எழுத வேணும். அவளுக்கும் இந்தமாதிரி பொம்மை ஒன்று வாங்கி அனுப்புங்கள் என்று எழுதவேணும்."

"அது யார் சாந்தா?"

"அதுதான், அம்மா இல்லே பார்; அந்தச் சாந்தா. அவளுக்கு அப்பா கல்கத்தாவில் இருக்கிறுர். அவருக்கு எழுதவேணும்; பொம்மை வேணுமென்று எழுதவேணும். சாந்தா அழுகிறுள்; சித்தி அடிக்கிறுள்; கட்டிப் போடுகிறுள் என்று காகிதம் எழுதவேணும்."

அப்பாவுக்கு ஒன்றுமே விளங்கவில்லே; "சரி, சரி; காகிதம் எழுதலாம்" என்று சொல்லிவிட்டுத் தம் காரியத்தைக் கவனிக்கப் போய்விட்டார்.

★

வீட்டுக்கு யாரோ பாட்டி வந்திருந்தாள். புராணக் கதைகளெல்லாம் தெரிந்தவள். வேதாந்தப் பாட்டுக்கள்

பாடத் தெரிந்தவள். சந்திராவின் தாய்க்குத் தெரிந்தவள். அப்படியே அடிக்கடி வந்து ஏதாவது நல்ல புராணக் கதையைச் சொல்லி விட்டுப் போவாள்.

அன்று எதோ பேசிக்கொண்டிருந்தாள். சந்திராவும் அம்மாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். பாட்டி பேச்சுக்கிடையில், 'கிளியைக் கூட்டில் அடைப்பவர்கள், வாயில்லா ஜீவனை வதைப்பவர்கள், வீணாக ஒருவரைக் கட்டிப் போடுகிறவர்க்ள் இவர்களையெல்லாம் பகவான் தண்டனைக்கு உள்ளாக்குவார்' என்று சொன்னாள். எங்கேயோ பராக்குப் பார்த்துக் கொண்டிருந்த சந்திராவின் காதில் இந்தப் பேச்சு விழுந்தது. அவளுக்குப் புரியும் செய்தி அதில் இருந்தது. "ஏன் பாட்டி, குழந்தையைக் கட்டிப் போடுகிறவர்களைச் சாமி ஒன்றும் பண்ண மாட்டாரா?" என்று திடீரென்று சந்திரா கேட்டாள்.

பாட்டி ஆச்சரியப்பட்டுப் போனாள். குழந்தைக்குத் தன் பேச்சைக் கவனிக்கும் அறிவு இருப்பதை அறிந்துதான் அவள் வியப்பை அடைந்தாள். "அதென்ன, நீ உன் குழந்தையைக் கட்டிப் போடுகிறாயா, என்ன?" என்று பாட்டி சந்திராவின் தாயைக் கேட்டாள். அதற்குக் குழந்தையே பதில் சொல்ல முந்திக்கொண்டாள்.

"இல்லை பாட்டி. சாந்தாவை அவள் சித்தி கட்டிப் போடுகிறாள். நீ போய்ச் சொல்லு. சாமி கண்ணைக் குத்திவிடுமென்று சொல்லு" என்றாள்.

குழந்தையின் அறிவைக் கண்டு பாட்டி அதன் கன்னத்தைத் தடவிக் கையைக் கீழே சொடுக்கித் திருஷ்டி கழித்தாள்.

"யார் அம்மா, அந்தச் சாந்தா?"

குழந்தை பதில் சொல்ல வந்தாள். அதற்குள் அவள் தாயே சொல்லத் தொடங்கினாள்.

"இதோ நாலு வீடு தள்ளி அந்த ஓட்டு வில்லை வீடு இருக்கிறதே, தெரியுமா? அதுதான், கிழவர் ஒருவர் வாசல் திண்ணையில் லொக்கு லொக்கென்று இருமிக்கொண்டே இருப்பாரே, அந்த வீடு."

"கோகிலா வீடுதானே? தெரியாதா எனக்கு? சொல்லு. அங்கே என்ன?"

"அவள் அக்காவுக்கு ஒரு குழந்தை. அந்தக் குழந்தை தெரியுமோ இல்லையோ?"

"தெரியுமே."

"கோகிலாவின் அத்திம்பேர் கல்கத்தாவில் வேலையாக இருக்கிறார். இந்தக் குழந்தையை இவளிடம் விட்டுவைத் திருக்கிறார். அது விஷமம் செய்கிறதாம். அன்று நான் அந்த வீட்டுக்குப் போயிருந்தேன். சந்திராவும் வந்தாள். அந்தக் குழந்தையைக் கட்டிப்போட்டிருந்தார்கள். அதைப் பார்த்தது முதல் இவள் அங்கலாய்த்துப் புலம்பு கிறாள்!" என்றாள் தாய்.

"குழந்தையின் மனசு பூப்போல இருக்கிறது. அதிலே, கருணை வழிகிறது" என்று பாட்டி மதிப்புரை கூறினாள்.

"அம்மா இல்லாவிட்டால்தானே கட்டிப் போடு வார்கள்?" என்று குழந்தை இடைமறித்துக் கேட்டாள்.

பாட்டி பதில் சொல்லவில்லை.

"ஏன் பாட்டி, சாந்தாவுக்கும் எங்கள் அம்மாவே அம்மாவாக இருக்கட்டுமே; இருக்கக் கூடாது?"

பாட்டி வியப்பில் மூழ்கினாள். அவளுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

"போடி பைத்தியம்! இதெல்லாம் உனக்கு எதற்கு? போய் விளையாடு" என்று சொல்லி அவளுடைய தாய் எழுந் தாள். பாட்டியும் விடை பெற்றுக் கொண்டு சென்றாள்.

★

சந்திராவுக்கு எப்போதும் சாந்தாவின் ஞாபகந்தான். அவளை அவள் சித்தி கட்டிப் போடுவதும், அந்தக் குழந்தை புலம்புவதும் சந்திராவின் அகக் கண்ணிலே எப்போதும் தோற்றம் அளித்துக்கொண்டிருந்தன. சாந்தாவை நினைக்கும்போதெல்லாம் அவள் உள்ளத்திலே ஒரு வேதனை உண்டாகும். அவளுக்கு மாத்திரம் சக்தியிருந்தால், சாந்தாவை அப்படியே தூக்கிக் கொண்டு வந்து தன் வீட்டில் வைத்துக்கொண்டிருப்பாள். 'நானே அம்மாவாக இருக்கலாம். இந்த அம்மா ஏன் சாந்தாவுக்கும் அம்மாவாக இருக்கக் கூடாது? நான் பெரியவளாக வளர்ந்தால்தானே அம்மாவாக இருக்கலாம்? சாந்தாவுக்கு ஏன் அந்தச் சித்தியே அம்மாவாக இருக்கக் கூடாது? எதற்காக அவளைச் சித்தி கட்டிப்போடுகிருள்? என்னை அம்மா கட்டிப் போடுகிறதில்லையே! அடிக்கிருள், சில சமயங்களில்; ஆனுல் கட்டிப் போடுகிறதில்லையே! கட்டிப் போட்டால் எப்படி இருக்கும்? கஷ்டமாக இருக்கும்! கால் காப்பிலே கட்டிப் போட்டிருக்கிருர்கள் சாந்தாவை. என்னையும் கட்டிப் போடச் சொல்லிப் பார்க்கிறேன்...'

இத்தகைய எண்ணங்கள் முடிவில்லாமல் அவளுக்குத் தோன்றிக் கொண்டே யிருந்தன. ஏதாவது கயிற்றைக் கண்டால் தன் காலில் கட்டிக் கொள்ளப் பார்ப்பாள். சரியாகக் கட்டிக்கொள்ள வராது. "அண்ணு, அண்ணு, என் காலைக் கட்டிப் போடு பார்க்கலாம்" என்பாள். அவன், "போ போ. பைத்தியம்" என்று சொல்லிவிட்டுப் போய் விடுவான்.

தானும் கட்டுண்டு பார்க்க வேண்டுமென்ற ஆசை அந்தக் குழந்தையின் இள நெஞ்சிலே உண்டாயிற்று. எப்போதாவது சந்திரா வீட்டுக்குப் போவாள். கையிலே கிடைத்ததைக் கொண்டுபோவாள். சந்திராவுக்குக் கொடுப்

பாள். சந்திரா ஆசையோடு வாங்கித் தின்பாள். ஆனால், அவளுக்கு இவளைப் போலப் பேச வராது. "சந்தா, அப் பிச்சி, இத்தி" என்று சில வார்த்தைகளைச் சொல்வாள். கன்றுக்குட்டியைப் பால் குடிக்காமல்கூடக் கட்டிப் போடு வார்களே, அப்படிக் கட்டிப் போட்டிருந்தாள் அவள் சித்தி. அந்தக் குழந்தையிடம் ஆதரவு காட்டும் ஆத்மா இந்தச் சாந்தா ஒருத்திதான். இரண்டு குழந்தைகளும் கொஞ்சநேரம் விளையாடிக் கொண்டிருப்பார்கள். அப் போது இரண்டு பேரும் இந்த உலகத்தையே மறந்துபோய் விளையாடுவார்கள்.



கத்தியினால் கயிற்றை அறுக்கலாம் என்ற சமா சாரத்தை இன்று புதிதாகத் தெரிந்து கொண்டாள் சந்திரா. அவளுடைய அண்ணா எதையோ அறுத்துக் கொண்டிருந்தான். உள்ளே இருந்து அம்மா இரைந்து கொண்டிருந்தாள். "ஏண்டா நல்ல கயிற்றை நாசமாக்கு கிறாய்? எதையாவது கட்ட வேணுமென்றால், வீடு பூராத் தேட வேண்டியிருக்கிறது; ஒரு முழம் கயிறு கிடைக்காது. நீ என்னடா வென்றால் நல்ல மணிக் கயிற்றை எலி குதறு கிறது போல் நறுக்கி நாசமாக்குகிறாய்! கீழே போடு கிறாயா, இல்லையா? வந்து முதுகில் இரண்டு வைக்கிறேன், பார்" என்று சொல்லி அதட்டினாள். அவன் பாட்டுக்குத் தன் காரியத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

சந்திரா, அம்மாவுக்கும் அண்ணாவுக்கும் நடைபெறும் வாக்கு வாதத்தைக் கவனிக்கவே இல்லை. அவள் தன் அண்ணா கயிற்றை நறுக்கும் காரியத்தை எப்படிச் செய் கிறான் என்பதையே கவனித்துக் கொண்டிருந்தாள். அவன் அந்தக் கயிற்றை இரண்டு மூன்று துண்டுகளாக் கினான். எதற்காக வென்று ஒன்று உண்டா? குழந்தைப்

பிள்ளைக்குக் கத்தியினுல் நறுக்குவது ஒரு பராக்கிரமச் செயல். அதிலே ஓர் ஆனந்தம். அதற்கு மேல் கயிற்றுக்கு ஏதாவது உபயோகம் உண்டா என்று யோசிக்கும் வேலை அவனுக்கு அநாவசியம்.

அவன் கயிற்றை நறுக்குவதற்காகவே நறுக்கிஞன். அவன் தங்கை சந்திரா மிகவும் கூர்மையாக அதைக் கவனித்துக் கொண்டே இருந்தாள். நறுக்கும் பராக்கிரமச் செயலைக் கண்டு வியக்கவில்லை. அவளுக்கு அந்தக் காட்சி என்ன என்னவோ ரகசியங்களைச் சொல்லியது. வெகு காலமாக விளங்காத புதிரை விடுவித்ததுபோல இருந்தது.

★

கோபாலன் பென்சில் சீவ வைத்திருந்த கத்தி அது. அதை எங்கே வைக்கிருன் என்று உளவறிந்து தெரிந்து கொண்டாள் சந்திரா. ஏதோ ராஜ்யத்தைப் பிடிக்கப் போகிறவளைப் போல அவள் யோசனை செய்தாள். குழந்தை மனசிலே தொடர்ச்சியாக, காரண காரியத் தோடு, இதற்கப்புறம் இதுவென்று யோசிக்கத் திறமை ஏது? ஏதோ யோசனை செய்தாள். அந்த யோசனையிலே ஒரு முடிவுக்கும் வந்தாள்.

அண்ணு விளையாடப் போயிருந்தான். மெதுவாக அவன் பெட்டியைத் திறந்து கத்தியை எடுத்துக் கொண்டாள். அடிமேல் அடிவைத்து வெளியிலே வந்தாள்; திருடனைப்போலப் பயந்து கொண்டு நடந்தாள். சாந்தாவின் வீட்டுக்கு மெதுவாகப் போய்ச் சேர்ந்தாள்.

அவள் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. உடம்பு நடுங்கியது. ஆனுலும் விடவில்லை. வீட்டுக்குள்ளே நுழைந்தாள். கூடத்திலேதான் சாந்தா இருப்பாள். சில நேரம் குளிப்பாட்ட, சாப்பிடக் கட்டவிழ்த்து விடுவார்கள். அநேகமாகக் கட்டிப்போட்டுத்தான் வைத்

திருப்பார்கள். சந்திரா பார்க்கிறபோதெல்லாம் அவள் கால் கட்டோடேதான் இருந்தாள்.

சந்திரா கூடத்துக்கு வந்தாள். ஏதோ சிணுங்கிக் கொண்டிருந்த குழந்தை அவளைக் கண்டவுடன், "சந்தா" என்று மழலைச் சொல்லால் அழைத்தது.

சந்திரா அந்தக் குழந்தையை அணுகினாள். அதற்கு விடுதலை அளிக்கப் போகிறவளாக நினைப்பு. ஆம். அண்ணா விடமிருந்து தெரிந்து கொண்ட வித்தை அது. ஒருவரா வது இதைச் செய்ய முன்வரவில்லை. சந்திரா முன் வந்து விட்டாள்.

அவள் காலைப் பிடித்தாள். கயிற்றைக் கண்டாள். நினைத்த காரியத்தைச் செய்ய முனைந்தாள்.

கீச்சென்ற சத்தம் வீட்டில் கொல்லைப் பக்கம்வரை யில் கேட்டது. குழந்தை சாந்தா வீல் வீலென்று கதறத் தொடங்கி விட்டாள். அவள் காலில் கத்திக் காயம். கயிறு அறுபடவில்லை; காலில் காயம்பட்டு விட்டது. சந்திராவும் அழ ஆரம்பித்துவிட்டாள்.

இந்தக் கூக்குரலைக் கேட்டுச் சித்தி ஓடி வந்தாள். அவள் கண்டது என்ன? சாந்தாவின் காலிலே கத்திக் காயம். பக்கத்திலே கத்தி. "சந்திரா! அடி பாவி!" என்று ஓடிவந்து சந்திராவின் முதுகில் ஓங்கி ஓரடி அடித்தாள் சித்தி.

குழந்தை சந்திரா கதிகலங்கிப் போனாள். அவள் நினைத்தது என்ன? நடந்தது என்ன? சாந்தாவுக்கு என்றே னும் விடுதலை உண்டா?

# கார்த்திகைக் கதை

அன்று கார்த்திகை; பனமரத்துப் பாளையத்தில் தங்கும்படியாக நேர்ந்தது. அங்கே ஒரு சிவன் கோயில் இருக்கிறது. ஊர் முழுவதும் விளக்கேற்றி வைத்துக் கார்த்திகையைக் கொண்டாடினார்கள். சிவன் கோயிலி லும் உற்சவம் நடந்தது. நானும் சுவாமி தரிசனம் செய்யக் கோயிலுக்குப் போனேன். கோயிலில் நிறைய விளக்குக்களைப் போட்டிருந்தார்கள். சின்ன ஊராக இருந்தாலும் அந்த ஊர் வாசிகளுக்குப் பக்தி அதிகமாகவே இருந்தது. ஆலய தரிசனத்துக்கு வந்திருந்த கூட்டத்தைப் பார்த்ததிலிருந்தே அது புலனாயிற்று.

மற்ற ஊர்களிலெல்லாம் நடப்பதுபோலவே உற்சவ மூர்த்தியைத் தனியே எழுந்தருளப் பண்ணினார்கள். ஆலயத்துக்கு வெளியே எழுந்தருளச் செய்வித்தார்கள். சொக்கப்பனை கொளுத்தும் இடம் இன்னதென்று தெரியவில்லை. கோயில் வாசலில் கூம்பு ஒன்றையும் காணவில்லை. நண்பர் ஒருவரைக் கேட்டேன். "இந்த ஊர்க் கார்த்திகையே ஒரு தனி விதம். இங்கே சொக்கப்பனை கொளுத்துவதில்லை" என்றார். "ஏன்?" என்று கேட்டேன். "அதெல்லாம் குருக்களைக் கேட்டால் தெரியும்" என்று சொல்லி விட்டார்.

சுவாமியிடம் இருந்து எல்லாவற்றையும் நடத்தும் போது குருக்களைப் போய்க் கேட்க முடியுமா? என்ன நடக்கிறது என்று கவனித்தேன். கோயிலின் வாசலில் ஒரு பெரிய விளக்கை வைத்தார்கள். சுவாமியை அங்கே எழுந்தருளப் பண்ணி, அந்த விளக்குக்குப் பூஜைசெய்தார்

கள். பிறகு அதைக் கோயிலின் கோபுரத்தின் மேல் வைத்தார்கள். அப்பால் சுவாமி கோயிலுக்குள் எழுந்தருளிப் போய்விட்டார். உள்ளூர் மேளகாரன் மேளம் வாசித்தான். ஜனங்கள் சந்தோஷமாக உற்சவத்தில் கலந்து கொண்டார்கள்.

எல்லாம் ஒருவிதமாக முடிந்த பிறகு நான் குருக்களிடம் போனேன். அவர் என்னைக் கண்டவுடன் விபூதி எடுத்துக் கொடுத்தார். நான் தட்டில் ஓரணாவைப் போட்டுவிட்டு, "ஒரு சந்தேகம்" என்றேன். "என்ன?" என்று கேட்டார். "இந்த ஊரில் ஏன் சொக்கப்பனை கொளுத்துவதில்லை? எல்லா ஆலயங்களிலும் கொளுத்துகிறார்களே! இங்கே மாத்திரம் இல்லாததற்குக் காரணமாக ஏதாவது ஐதிஹ்யம் உண்டோ?" என்று கேட்டேன்.

"அதுவா? இந்தத் தலபுராணத்தில் அந்த விஷயம் இருக்கிறது. லோகத்தில் வேறு எங்கும் இல்லாத அற்புதம் அது" என்று பீடிகை போட்டார் குருக்கள்.

"புராணத்தில் என்ன இருக்கிறது?" என்று விநயமாகக் கேட்டேன். குருக்கள் சொல்லத் தொடங்கினார்.



இந்த க்ஷேத்திரத்திற்குத் தாலவனம் என்று திருநாமம். சுவாமி தாலவனேசுவரர்; அம்பிகை தாலவன சுந்தரி. இங்கே இந்திராதி தேவர்களும், அகத்தியர் முதலிய மகரிஷிகளும் பூஜை செய்து தம்முடைய இஷ்ட சித்திகளைப் பெற்றிருக்கிறார்கள். இந்தத் தலமே அகத்தியரால் உண்டானதுதான். அகத்தியர் ஹிமாசலத்திலிருந்து தெற்கே வந்த போது ஒரு நாள் இவ்விடத்தில் தங்கினார். ஸ்நானம் செய்து சிவபூஜை செய்ய எண்ணினார். நைவேத்தியத்துக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. அப்போது இவ்விடத்தில் எங்கே பார்த்தாலும் பனமரங்கள்

அடர்ந்திருந்தன; வேறு மரம் ஒன்றும் இல்லை. நைவேத்தியத்துக்கு ஒன்றும் இல்லையே என்று அகத்தியர் சிறிது சஞ்சலம் அடைந்தார். அப்போது ஒரு பனமரத்திலிருந்து முதிர்ந்த பனம் பழம் ஒன்று தொப்பென்று கீழே விழுந்தது. 'இதுவும் பரமேசுவரன் கிருபையே' என்று எண்ணிய அகத்திய முனிவர் அந்தப் பனம் பழத்தை எடுத்து வந்து அதையே நிவேதனம் செய்தார். நிவேதனமான அது யார் காலிலேனும் பட்டுவிடுமே என்ற எண்ணத்தால் அங்கே அதைப் புதைத்துவிட்டுப் போய்விட்டார்.

சிவபிரானுக்கு நிவேதனமான அந்தப் பழம் முளைத்துப் பனங்கன்றாகி வளர்ந்தது. அது ராத்திரி காலத்தில் பள பள வென்று ஜோதி மயமாகத் தெரிந்ததை ஓர் இடையன் கண்டு சோழ மகாராஜாவுக்குப் போய்ச் சொன்னான். சோழன் மறுநாள் காலையில் வந்து பார்க்கும் போது பனங்கன்றைக் கண்டான். அன்று இரவு வந்து பார்த்தான். அந்தப் பனங்கன்று ஜோதிமயமாக விளங்குவதை அவனும் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனான். 'இது ஏதோ அற்புதமாக இருக்கிறது. இந்தப் பிரதேசத்தில் தெய்விக சக்தி இருக்க வேண்டும்' என்று நினைத்தான். அன்று இரவு அவன் தூங்கும்போது சிவபிரான் அவனுடைய கனவில் எழுந்தருளி, "அகத்தியர் பூஜை பண்ணிய போது நிவேதனம் செய்த பனம் பழத்திலிருந்து இந்தப் பனங்கன்று முளைத்திருக்கிறது. இதில் நாம் ஆவிர்ப்பவம் ஆகியிருக்கிறோம். இந்த இடத்தில் ஆலய நிர்மாணம் செய்து வாபீகூப தடாகங்களையும் அமைத்து வழி படுவாயாக!" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். கனவு முடிந்ததும் சோழ மன்னன் தூக்கத்திலிருந்தும் எழுந்தான். உடம்பெல்லாம் புளகம் போர்ப்ப எழுந்து நின்று ஆடிப்பாடிக் கண்ணீர் வார இறைவன் திருவருளை நினைந்து

பக்திபரவசமானுன். அதன்பின் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. விடிந்ததோ இல்லையோ, அந்தணர்களையும் அமைச்சர்களையும் அழைத்துத் தான் கண்ட கனவை அவர்களிடம் சொன்னுன். எல்லோரும் அதைக் கேட்டு ஆச்சரியத்தில் மூழ்கினுர்கள். சோழ மன்னனுக்கு ஆண்டவன் சொப்பனத்தில் தரிசனம் கொடுத்ததைப் பாராட்டினுர்கள்.

அது முதல் சோழ மகாராஜா ஆலய நிர்மாணத்தை ஆரம்பித்தான். பல ஊர்களிலிருந்து சிற்பிகளைக் கொண்டுவந்து வேறு எங்கும் இல்லாத முறையில் பிராகாரங்களையும் மண்டபங்களையும் எழுப்பினுன். பரிவார தேவதைகளுக்கும் ஆலயங்களை அமைத்தான். சுயம்பு லிங்கம் ஒன்று அவனுக்குக் கிடைத்தது. அதைப் பிரதிஷ்டை செய்தான். ஜோதிப் பனையைச் சுற்றிப் பளிங்குக் கல்லால் மேடை அமைத்தான். கடைசியில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. தேவர்களெல்லாம் பூமாரி பொழியப் பூலோக வாசிகள் ஆனந்த பாஷ்பம் சொரியச் சோழ மகாராஜா இந்தத் தாலவன க்ஷேத்திரத்தில் கும்பாபிஷேகத்தை வெகு விமரிசையாக நடத்தி வைத்தான்.

நித்திய நைமித்திகங்கள் குறைவில்லாமல் நடந்து வந்தன. முதல் முதல் கார்த்திகைத் திருநாள் வந்த போது வழக்கம் போலப் பனமட்டைகளைக் கொண்டு வந்து சொக்கப்பனைக்காகப் பெரிய கூம்பு கட்டினுர்கள். ஒவ்வோர் உற்சவத்தையும் சோழ மகாராஜாவே முன்னின்று நடத்தினுன். கார்த்திகைத் திருநாளும் அவன் பார்வையில் நடைபெற்றது. சுவாமியை எழுந்தருளச் செய்து கூம்புக்கு முன் நிறுத்தினுர்கள். வழக்கப்படி சொக்கப்பனை கொளுத்தும்போது, பன மட்டையில் தீப் பிடிக்கவில்லை. "பச்சை மட்டையாகக் கட்டிவிட்டார்

களோ!" என்று எண்ணிப் பார்த்தபோது எல்லாம் நன்றாகக் காய்ந்த மட்டைகளாகவே இருந்தன. பல இடங்களில் கொளுத்திப் பார்த்தார்கள்; பற்றவே இல்லை. சோழனும் பிறரும் இதைக் கண்டு வியந்தார்கள். "இறைவன் திருவிளையாடல் ஆச்சரியமாக இருக்கிறதே! காய்ந்த மட்டையில் கனல் பற்றாமல் இருக்குமோ!" என்று ஒருவரோடொருவர் பேசிக் கொண்டார்கள். சோழ மன்னன், இன்னது செய்வதென்று அறியாமல் மயங்கி நின்றான்.

அப்போது இறைவன் திருவருளால் அசரீரி வாக்கொன்று கேட்டது. "நாம் இங்கே தாலவிருட்சமாக இருப்பதனால் நம் முன் பன மரத்தை எரிக்கும் சக்தி அக்கினிக்கு இல்லை" என்று அசரீரி சொல்வதைக் கேட்டு யாவரும் பின்னும் ஆச்சரியப்பட்டுப் போயினர். உடனே பெரிய விளக்கை ஏற்றி வைத்துப் பூஜை செய்து அதைக் கோபுரத்தில் கொண்டுபோய் வைத்தார்கள். அது முதல் இந்த ஆலயத்தில் சொக்கப்பனை கொளுத்துவதே இல்லை.

கலி முற்ற முற்ற ஈசுவர நம்பிக்கை போய்விட்டது. புராணங்களில் நம்பிக்கை இல்லை. ஜோதிப்பனைகூட வெறும் பனையாகிவிட்டது. அதோ இருக்கிறதே, ஒரு மேடை; அங்கே தான் ஜோதிப்பனை இருந்ததாம். இப்போது அங்கே ஒரு வெறும் பனையைக்கூட நடுபவர்கள் இல்லை. தாலவனேசுவரர் கிருபை வைத்தால் மறுபடியும் ஜோதிப் பனை தோன்றலாம்.

## 2

குருக்கள் கதையைக் கூறி முடித்தார். தாலவனமென்ற க்ஷேத்திரம் பனமரத்துப் பாளையமாகி விட்டது போலும்! நான் அவர் சொன்ன கதையைப்பற்றி நினைத்

துக்கொண்டே போனேன். நான் தங்கியிருந்த வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டேன். அந்த வீட்டுக்கார நண்பர் பள்ளிக்கூட வாத்தியார். சாப்பிட்ட பிறகு கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து அவரோடு பேசிக்கொண்டிருந்தேன். பேச்சுவாக்கில் குருக்கள் சொன்ன புராண வரலாற்றை அவரிடம் சொன்னேன். அந்த வாத்தியார் அதைக் கேட்டுச் சிரித்தார். "இந்தப் பொய்ப் புராணத்தை நீங்கள் நம்புகிறீர்களா?" என்று என்னைக் கேட்டார்.

"புராணக் கதையை நம்புகிறேனே, இல்லையோ அது கிடக்கட்டும். இந்த ஊரில் சொக்கப் பனை கொளுத்தாததற்குக் காரணம் ஏதாவது இருக்க வேண்டுமே!" என்றேன்.

"அதற்குப் புராணத்தில்தான் தேட வேண்டுமா? யாரோ பைத்தியக்காரன் ஒருவன் இந்தப் புராணத்தைக் கட்டி வைத்தான். அதை மற்றவர்களெல்லாம் மறந்து விட்டார்கள். இந்தக் குருக்கள் மாத்திரம் மறக்காமல் பிடித்துக்கொண்டிருக்கிறார். இந்தப் பட்டிக்காட்டுக் கோயிலைப் பார்த்தால் பிராகாரங்களும் மண்டபங்களும் இருந்ததாகத் தெரிகிறதா? அத்தனை மண்டபங்களில் ஒரு மண்டபத்தின் சின்னமாவது இருக்கிறதா? சோழ மகா ராஜா வந்தானும்! கோயில் கட்டினானும்!"

"பின்னே இதற்கு என்ன காரணம்?"

"உண்மையான காரணம் வேறு; பகுத்தறிவுக்குப் பொருத்தமான காரணம் அது. ஒன்று சொல்லுகிறேனென்று நீங்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. இந்தத் தேசத்தில் சரித்திர உணர்ச்சி என்பது பூஜ்யம். புராணமென்றால் நம்புவார்கள். பூஜை செய்வார்கள். சரித்திரத்தைப் பற்றிக் கவலைகொள்ளவே மாட்டார்கள். படித்தவர்

களுக்கும் சரி, படிக்காதவர்களுக்கும் சரி, இந்தப் புராணப் பைத்தியம் போனபாடில்லை. நீங்கள் போய்ச் சாப்பாட்டையும் மறந்துவிட்டு இத்தனை நேரம் இந்தப் பொய்க் கதையைப் பொறுமையாகக் கேட்டீர்களே! அதையே சொல்லுங்கள்." என் நண்பர் புராணத்தைப்பற்றிய எதிர்ப் பிரசாரத்தை இதோடு நிறுத்தவில்லை. இன்னும் விரிவாகச் சொன்னார். நான் கேட்டுக்கொண்டே வந்தேன். எனக்கே பொறுமை போதவில்லை.

"அது கிடக்கட்டும். உங்களுக்கு உண்மையான காரணம் தெரிந்திருக்குமென்றே தோன்றுகிறது. அதைச் சொல்லுங்கள். கேட்கிறேன்" என்று இடை மறித்துச் சொன்னேன்.

"அப்படிக் கேளுங்கள். இந்த ஊருக்குப் பனமரத்துப்பாளையம் என்ற பெயர் அமைந்திருக்கிறதே; அந்தப் பேரே இது சரித்திரச் சிறப்புள்ள இடமென்று சொல்லவில்லையா? பாளையம் என்பது படை வீரர்கள் தங்கும் 'காம்ப்'. இங்கே ஒரு சமயத்தில் படை வீரர்கள் தங்கி யிருக்கிறார்கள்."

"சரி, கதையை முழுவதும் சொல்லுங்கள்" என்றேன்.

"கதையா? உண்மைச் சரித்திரமாக்கும்!" என்று அவர் திருத்தினார்.

"சரி, அந்தச் சரித்திர வரலாற்றைச் சொல்லுங்கள்" என்று திருத்தத்துடன் என் வேண்டுகோளைச் சமர்ப்பித்தேன். அவர் தம் சரித்திர வரலாற்றை ஆரம்பித்தார்.



அந்தக் குருக்கள் சொன்னதில் ஒன்று மாத்திரம் உண்மை. அதாவது இங்கே பனமரங்கள் அடர்ந்திருந்தன

என்பது வாஸ்தவம். குலோத்துங்க சோழன் காலத்தில் ஒரு பெரிய போர் நடைபெற்றது. அவனுக்கு எதிராகப் பல சிற்றரசர்கள் கூடிப் போர் செய்தார்கள். இங்கிருந்து நூறு மைல் தூரத்தில் உள்ள ஓர் ஊரில் கடுமையாகப் போர் நிகழ்ந்தது. எதிர்க் கட்சியில் ஏழு சிற்றரசர்கள் சேர்ந்திருந்தார்கள். சோழன் தனியாக அவர்களோடு போரிட்டான். முதலில் சிற்றரசர்களின் கட்சியே மேலோங்கி நின்றது. ஆனால் பல வகையான போர்த் தந்திரங்களில் வல்ல சோழ அரசன் முதலில் வளைந்து கொடுத்துப் பின்பு தாக்கினான். சிற்றரசர்கள் கை சளைத்தது. சிலர் போரில் வீழ்ந்தனர். வேறு சிலர் புற முதுகிட்டோடினர். அப்படி ஓடினவர்களைத் துரத்தி அடித்தான் சோழன். அந்த ஏழு பேர்களுள் ஒருவன் சில வீரர்களுடன் இந்தப் பக்கமாக ஓடிவந்தான். அடர்ந்த பனங்காடாக இருந்தமையாலும், ஜனங்கள் நடமாடாத இடமாக இருந்ததனாலும் இங்கேயே மறைந்திருக்கலாம் என்று தீர்மானித்தான். அதற்கு நெடுங்காலத்துக்கு முன்பு இங்கே ஓர் ஊர் இருந்து பாழாயிற்று. கோயில் ஒன்றும் இருந்து இடிந்து போயிற்று. இங்கே வந்த சிற்றரசன் பழைய சின்னங்களையெல்லாம் பார்த்து இங்கேயே தங்கிவிடலாமென்று எண்ணினான். யாருக்கும் தெரியாமல் பல மாதங்கள் இங்கே வசிக்க முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு உண்டாயிற்று. அந்தச் சிற்றரசன் சிவ பக்தன். பழுதான ஆலயத்தைப் பார்த்தவுடன், "நமக்குத் துணை இந்த நாயகர் இருக்கிறார்" என்ற தைரியம் ஏற்பட்டது. ஆலயத்தை ஒருவாறு சுத்தம் செய்து பூசித்தான். வந்தவர்களும் இங்கே தங்கிவிட்டார்கள். அப்போது கார்த்திகைத் திருநாள் வந்தது. அரசன் அன்று கோயில் விளக்கேற்ற ஏற்பாடு செய்தான். சொக்கப் பனை கொளுத்தினால் அருகில் உள்ள பனங் காட்டில் நெருப்புப் பற்றிக்கொள்ளலாம். பற்றிக்கொண்

கொண்டால் நெடுந் தூரம் பரவிக் காடாக இருந்த இடம் எல்லாம் வீணாகிவிடும். அதோடு அவர்கள் மறைவாக வாழ்வதற்கே கேடு வந்துவிடும்.

இப்படி எண்ணி அஞ்சிய அரசன் சொக்கப்பனை கொளுத்த வேண்டாம் என்று சொல்லிவிட்டான். நாளடைவில் அரசன் இங்கேயே தங்கி ஊரையும் அமைத்தான். பனங்காடு எரியும் என்ற பயத்தால் சொக்கப்பனை கொளுத்தாமல் இருந்தது. பிறகு அதுவே வழக்கமாகி விட்டது. சில வருஷங்களுக்குப் பின் அந்த அரசன் மறைந்தான். ஊர் விரிந்தது. பனங் காடு மறைந்து ஜனங்களின் போக்கு வரத்து அதிகமாயிற்று. ஆனால் சொக்கப்பனை கொளுத்தாத பழைய வழக்கம் மாத்திரம் நிலைத்துவிட்டது. இப்போது தெரிகிறதா உண்மையான காரணம்?

★

"பனமரக் காட்டுக்கு நடுவில் தங்கினதால் இந்த ஊருக்குப் பனமரத்துப் பாளையம் என்ற பெயர் வந்ததாகச் சொல்கிறீர்கள்" என்றேன்.

"ஆமாம். அதுதான் சரித்திர உண்மை" என்றார் நண்பர்.

நெடு நேரம் விழித்திருந்ததனால் தூக்கக் கலக்கம் கண்ணைச் சுற்றியது. நான் தூங்கிவிட்டேன்.

## 3

மறு நாள் விடிந்தவுடன் எழுந்திருந்து குளத்துப் பக்கம் போனேன். ஊரை நன்றாகப் பார்க்க வேண்டும் என்று எண்ணி நடந்துகொண்டிருந்தேன். அப்போது யாரோ ஒரு கிழவர் எனக்கு முன்னால் போய்க்கொண்டி

ருந்தார். நான் அவரருகில் வந்தேன். கிராமத்துக்காரர் அல்லவா? என்னைக் கண்டவுடன் என்னைப்பற்றி விசாரித்தார். என் வேலை, சம்பளம், ஊர், பேர், சொந்தக்காரர், அவர்கள் வேலை, மேல் வரும்படி ஆகிய பல விஷயங்களைச் சாங்கோபாங்கமாகக் கேட்டார். நானும் சொன்னேன். என் பங்குக்கு அவரை ஏதாவது கேட்கவேண்டாமா? அவரைப்பற்றிய விவரங்களை அவரே சொல்லிவிட்டார். ஆகவே அந்த விஷயத்தில் நான் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை. ஒரு வேடிக்கையான எண்ணம் எனக்கு உதித்தது. அந்த ஊரில் சொக்கப் பனை கொளுத்தாததற்குக் குருக்கள் புராணத்தை மேற்கோள் காட்டி ஒரு காரணத்தைச் சொன்னார். வாத்தியாரோ சரித்திரமென்று ஒன்றைச் சொன்னார். 'ஒருகால் இவர் மூன்றாவது கதை ஏதாவது சொல்வாரோ!' என்று எண்ணினேன். அதைப்பற்றியே அவரிடம் கேட்கத் தொடங்கினேன்.

"இந்த ஊரில் கார்த்திகை உற்சவத்தில் ஏன் சொக்கப் பனை கொளுத்துவதில்லை?" என்று கேட்டேன். அவர் கிழவராக இருப்பதனால் புராணக் கதையைச் சொல்வாரென்று ஒருகணம் எண்ணினாலும், மறுகணம் வேறு கதை வரலாம் என்றும் எதிர்பார்த்தேன்.

"இந்தக் கேள்வியை நல்ல வேளையாக என்னைக் கேட்டீர்கள். வேறு யாரிடமாவது கேட்டால் ஏதாவது கதை அளந்திருப்பார்கள்" என்றார் கிழவர்.

'சரிதான், நான் நினைத்தபடிதான் இருக்கும்போலிருக்கிறது' என்று எண்ணி, "அவர்கள் அளந்த கதைகளை நான் கேட்டுவிட்டேன்" என்றேன்.

"யார் என்ன சொன்னார்கள்?" என்று கிழவர் கேட்டார்.

நான் குருக்களின் தல மகாத்மியத்தையும், வாத்தியாரின் சரித்திர நிகழ்ச்சியையும் சொன்னேன்.

“இந்த வாத்தியார் இருக்கிறாரே, இவர் தாம் மாத்திரம் கெட்டிக்காரர், மற்றவர்களெல்லாம் முட்டாள் என்று எண்ணியிருக்கிறார். ஏதோ சிற்றரசன் என்று சொல்லுகிறாரே; அவனுக்குப் பேர், ஊர், காலம் ஒன்றும் இல்லையா? சாசனச் சாட்சி ஏதாவது உண்டா? குருக்கள் ரிஷியென்றும் சாமியென்றும் ஒரு கட்டுக்கதையைச் சொன்னார். அதில் யாரும் ஏமாறமாட்டார்கள். இந்த மனிதர் ஏதோ தனியே ஆராய்ச்சி நடத்தினமாதிரி, குலோத்துங்க னென்றும் சண்டை யென்றும் சரித்திரத்தைப் போலச் சொல்கிறாரே; அதுவும் கட்டுக்கதைதான். யாருக்கும் தெரியாமல் இங்கே வந்து பாளையம் இறங்கி அரசன் வாழ்ந்தா னென்றால், அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் பசியா வரம் பெற்றவர்களா? எவ்வளவு நாளைக்கு அப்படித் தலைமறைவாக வாழ முடியும்?”

கிழவர் வாத்தியார்மேல் பாய்ந்தார். அதைக் கேட்டுக் கொண்டிருக்காமல் நான் என்ன செய்வது? பேசாமல் நடுநடுவே ‘ஹூம்’ கொடுத்துவந்தேன். ஒரு கட்டத்தில் அவரை இடைமறித்து, “அப்படியானால் கார்த்திகையில் சொக்கப் பனை கொளுத்தாததற்குக் காரணமே இல்லையா?” என்று கேட்டேன்.

“அப்படி யார் சொன்னார்கள்? காரணம் உண்டு. ஆனால் எது காரணம் என்பது, தெரிந்தவர்களுக்குத் தெரியும்; எங்கள் தாத்தா சிறுபோதில் எனக்குச் சொல்லியிருக்கிறார்.”

“அதைச் சொல்லுங்கள், கேட்கிறேன்” என்றேன்.

கிழவர் தம் கதையை ஆரம்பித்தார்.

# 4

அந்தக் காலத்தில் பனமரத்துப் பாளைய ஜமீன்தார் குட்டப்ப நாயக்கர் என்றால் அழுத பிள்ளை வாய் மூடும்; அவர் பண்ணாத அட்டகாசம் இல்லை. அதோ அடுத்த தெருவில்தான் அவருக்கு வீடு. கடவுளுக்குப் பயந்து வாழ்ந்த காலம் அது. இந்தக் கோயில் சின்னதாக இருந்தாலும் கிராமத்து ஜனங்களின் கட்டுப்பாட்டால் உற்சவம் ஒன்றும் குறைவில்லாமல் நடந்துவரும்; ஊரில் பெரியதனக்காரர்கள் தங்கள் வீட்டில் எது நடக்கிறதோ, நடக்கவில்லையோ, கோயிலில் எந்த விசேஷமும் நின்றுவிடாமல் பார்த்துக்கொண்டார்கள். அந்தப் பெரியதனக்காரர்களில் என்னுடைய பாட்டனாரும் ஒருவர்.

ஜமீன்தார் குட்டப்ப நாயக்கர் விஷயத்தில் எல்லோருக்குமே மனத்தாங்கல் உண்டு. ஊருக்கு ராஜாவாயிருக்கிறவர் ஒழுங்காக இருந்தால் அவருக்கும் நல்லது; ஊருக்கும் எவ்வளவோ நல்லது. ஆனால் அவருக்குச் சொல்கிறவர் யார்? அவர்கூடக் கோயில் திட்டங்களில் ஒன்றையும் குறைப்பதில்லை.

உள்ளூர்ப் பெரியதனக்காரர்களில் ஒன்று இரண்டு பேர் ஜமீன்தாருக்கு இச்சகம் பேசுகிறவர்கள். அப்படி இரண்டு பேர் இருந்ததனால்தான் நல்ல புத்தி நாயக்கரிடம் போய் அடையப் பயப்பட்டது.

இந்த ஊரில் அநேகமாக ஓட்டுவில்லை வீடுகளே அதிகம். ஏழைகள் கூரை வீடுகள் கட்டிக்கொண்டு வாழ்ந்தார்கள். தார்சு வீடுகள் ஒன்று இரண்டே இருந்தன. அந்த வீடுகளிலும் மேல் மாடி இராது. கடவுளுடைய கோயிலுக்கு மேலே உயரமாக வீடு கட்டக்கூடாதென்று அந்தக் காலத்துப் பெரியவர்கள் சொல்லுவார்கள்.

மேல்மாடி வேண்டுமானால், கோயிலில் ஏழு நிலைக் கோபுரம் முதலில் கட்டிவைத்துவிட்டுப் பிறகு மாடி கட்டலாம். அது நடக்கிற காரியமா? மேல் மாடி வேண்டுமென்று அவ்வளவு கட்டாயம் அந்த நாளில் யாருக்கும் இல்லை.

ஆனால் ஜமீன்தார் குட்டப்ப நாயக்கருக்கு அந்த அவசியம் ஏற்பட்டது. தம்முடைய சுகபோகங்களுக்கு மெத்தை வீடு இன்றியமையாத அங்கம் என்ற புத்தி அவருக்கு உதயமாயிற்று. சிநேகிதர்களிடம் சொன்னார். மனிதனுக்குப் பயப்படாவிட்டாலும் தெய்வத்துக்குப் பயப்படும் பேர்வழிகள் மெத்தை கட்டக்கூடாது என்றார்கள். ஜமீன்தாரோ பிடிவாதமாக இருந்தார். கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். கெட்டிக் கட்டடம் கட்டாமல் கூரைக் கொட்டகை ஒன்று அமைப்பதாகத் திட்டமிட்டார். தஞ்சாவூர்ப் பக்கத்திலிருந்து ஒரு வணைக் கூப்பிட்டுக்கொண்டு வந்து மிகவும் அருமையான கொட்டகை ஒன்றை அமைத்துக் கொண்டார். அது கூரைக் கொட்டகையா? அழகான அலங்கார மண்டபம்! என்ன வேலைப்பாடு! என்ன செலவு! அந்தக் கொட்டகையைப் பார்ப்பதற்காகவே வெளியூரிலிருந்து பலர் வந்து போவார்கள். பங்குனி மாசம் கொட்டகை முடிந்தது. சித்திரை, வைகாசி, ஐப்பசி வரையில் அதில் உல்லாசமாகப் போது போக்கினார் ஜமீன்தார்.

கார்த்திகை மாசம் பிறந்தது. அந்த வருஷம் மாச முதலிலேயே கார்த்திகை வந்தது. அப்போதெல்லாம் உற்சவங்கள் மிகவும் சிறப்பாக நடைபெறும் என்று சொன்னேனல்லவா! கார்த்திகை உற்சவம் அமர்க்களமாக நடைபெற்றது. எல்லா ஊர்களிலும் நடப்பதுபோல இங்கும் சொக்கப் பனை கொளுத்துவதுண்டு. அந்த வருஷம்

மிகப்பெரிய கூம்புகட்டி வைத்தார்கள். அந்த ஜமீன்தாரின் போதாத காலம் பாருங்கள்; அவரே அதில் சிரத்தை எடுத்துக் கொண்டார். சொக்கப் பனைக்குத் தீ வைத்தார்கள். அன்றைக்கு என்று என்றும் இல்லாதபடி ஒரு சுழல் காற்று அடித்தது. சொக்கப் பனையி லிருந்து ஒரு பொறி பறந்துபோய் ஜமீன்தார் வீட்டுக் கொட்டகையில் பட்டது. பாவி பண்ணின காரியத்தை என்ன வென்று சொல்கிறது! ஏதோ கல்யாணத்துக்காக ஜவுளி யெல்லாம் வாங்கி மேல் கொட்டகையில் வைத்திருந்தார். இரண்டாவது சொக்கப் பனை ஜமீன்தார் வீட்டில் கொழுந்து விட்டு எரிந்தது. ஊர் முழுவதும் கூடி அணைத்தார்கள். கீழே இருந்தாலும் அணைத்து விடலாம்; மேல் மெத்தைக்கு ஜலத்தை எப்படிக் கொண்டு போகிறது? தீ மற்ற இடங்களுக்குப் பரவாமல் தடுப்பது பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது.

"ஜமீன்தாருக்கு இவ்வளவும் வேண்டும்" என்று ஊர் ஜனங்கள் சொன்னார்கள். ஆனால் குட்டப்ப நாயக்கருக்குப் புத்தி வந்ததாகத் தெரியவில்லை. "இனிமேல் கார்த்திகைக்குக் கோயிலில் சொக்கப் பனை கொளுத்தக் கூடாது" என்று உத்தரவு போட்டு விட்டார். அவர் ஆக்ஞையை மீற இங்கே மனிதர் இல்லை. அது முதல் இந்த ஊரில் வெறும் விளக்கு வைப்பதோடு கார்த்திகை உற்சவம் நடக்கிறது.

★

"எல்லாவற்றையும் நீங்கள் நேரில் கண்டது போலச் சொல்கிறீர்களே!" என்று கேட்டேன்.

"எங்கள் தாத்தா இப்படியே சொல்வார்; இன்னும் விரிவாகச் சொல்வார்; அவர் சொல்வதைக் கேட்டுத்தான் சொல்கிறேன்" என்றார் அவர்.

"இப்போது ஜமீன்தார் பரம்பரையில் யார் இருக்கிறார்கள்?"

"அதெல்லாம் பூண்டற்றுப் போய் விட்டது. அந்தக் குட்டப்ப நாயக்கர் பிள்ளை இந்த ஊரை விட்டே போய் விட்டான். சேலத்தில் வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்தான். அவனுக்கு அவன் தகப்பனார் விட்டுப்போன சொத்துக் கொஞ்சந்தான். அதையும் அவன் அழித்து விட்டான்."

"இப்போது குட்டப்ப நாயக்கரை எல்லோரும் மறந்து விட்டார்களே!" என்றேன்.

"ஏன்? எப்படி உங்களுக்குத் தெரிந்தது?" என்று கேட்டார் கிழவர்.

"இந்தக் கதையை மற்றவர்கள் சொல்லவில்லையே!" என்று காரணம் கூறினேன்.

"என்னைப் போல வயசானவர்களுக்குத் தெரிந்திருக்கலாம்" என்று கூறி விடைபெற்றுக் கொண்டார் அந்தப் பெரியார்.

# கை ராசி

"அம்மா, சாத்துக்குடி வேணுமா?" என்று கத்தினன் பழக் கூடைக்காரன். உள்ளே கைவேலையாக இருந்த வீட்டுக்கார அம்மாள் வருவதற்குள் குடு குடுவென்று இரண்டு வயசுக் குழந்தை சோமு ஓடிவந்தான். வாசலில் வந்து, "வா, வா!" என்று தன் மழலைச் சொல்லால் கூப்பிட்டான் பழக்காரனை. ஒரு மாச காலமாக அவனுக்குச் சாத்துக்குடி மிகவும் பழக்கமாகிவிட்டது. அவனுடைய பேச்சு, உணவு, ருசி எல்லாம் இப்போது சாத்துக்குடியில் நிற்கின்றன. கட்டி ஆரம்பமாகியிருக்கிறதென்று டாக்டர் சொல்லிவிட்டார். ஆகார விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று உத்தரவு வேறு போட்டிருக்கிறார். "தக்காளிச் சாறும் சாத்துக்குடியும் கொடுங்கள். சாத்துக்குடி எவ்வளவுக் கெவ்வளவு கொடுக்கிறீர்களோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது" என்று பழக் கடைக்காரனுக்கு விளம்பர உத்தியோகஸ்தராகப் பேசினார் அவர்.

ராமமூர்த்தி முதலியாரின் முதல் குழந்தை - இப்போதைக்கு ஒரே குழந்தை - தங்கவேலன். அவர் ஏதோ கம்பெனியில் அக்கௌண்டெண்டு - கணக்குப்பிள்ளை. ஒரு நாளைப் போல் காரியாலயத்திலிருந்து வரும்போது சாத்துக்குடி ஆரஞ்சுப் பழம் வாங்கிவர அவரால் முடிவதில்லை. கம்பெனி வேலையென்றால் சொந்தவீட்டு வேலையைவிட அதிகம் அவருக்கு. கம்பெனி மூடும் நேரம் ஐந்தரை மணி என்று பேர். அவருக்கு அந்தக் கணக்கு இல்லை; ஆறு மணி, ஏழு மணி, எட்டு மணி என்று வேலை செய்வார். வீடு

திரும்புகிற நேரம் திட்டமாக இன்னதென்று சொல்ல முடியாது. இந்த நிலையில் தினந்தோறும் பழம் வாங்கிவர முடியுமா? ஐந்தரை மணி ஆறு மணிக்குக் கம்பெனியை விட்டுப் புறப்பட்டால் பழக்கடைக்கு வந்து, வேண்டிய பழத்தை வாங்கி வரலாம். அந்த நியதிதான் அவருக்கு இல்லையே! அதோடுகூட மற்றொரு விஷயம் இருக்கிறது. திடீரென்று ஒரு நாள் பெங்களூருக்குப் போகவேண்டி நேரும்; கம்பெனி வேலையாகத்தான். அங்கே கம்பெனியின் கிளை ஒன்று உண்டு, அதில் கணக்கு வழக்குகளைச் சரிப்படுத்த முதலியாருக்கு அழைப்பு வரும். சேர்ந்தாற் போல் நாலு நாள் பெங்களூரில் தங்கிவிடுவார். அப்போது யார் பழம் வாங்கி வருவார்கள்?

அவர் குடியிருந்தது திருவல்லிக்கேணி. கிடைக்கிற பழத்தை வாங்கிக் கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லாமற் போயிற்று. இப்போதுதான் தினந்தோறும் வீதியிலேயே கூடைக்காரர்கள் பழம் கொண்டுவந்து விற்கிறார்களே. என்றைக்காவது முதலியார் பட்டணத்திலிருந்து பழம் வாங்கி வருவார்; மற்ற நாட்களிலெல்லாம் வீதியில் வரும் பழமும், திருவல்லிக்கேணிக் கடைத்தெருவில் விற்கும் பழமுந்தான் சோமுவுக்குக் கிடைத்தன.

கடைசியில் ஒரு நியதி ஏற்பட்டது. பழக் கடைக்கு முதலியார் போகவில்லை. அவர் வீட்டைப் பழம் தேடி வந்தது. கணக்காகக் குறிப்பிட்ட காலத்தில் தினந்தோறும் மூன்று பழங்களை அந்த வீட்டில் கொண்டுவந்து போட்டுவிடுவான் கந்தன். பணம் உடனே கிடைக்கிறதோ, ஒரு மாசம் கழித்துக் கிடைக்கிறதோ, அதைப் பற்றி அவனுக்கு அக்கறை இல்லை.

முதல் நாள் அவன் அந்தத் தெருவில் விற்றுக் கொண்டு போனபோதுதான் குழந்தை சோமு ஓடிப்

போய் அவனைக் கூப்பிட்டான். அதுவரையில் அந்தத் தெருவுக்கு வராதவன் கந்தன். எந்த எந்த வீட்டில் பழம் வாங்குவார்கள் என்ற 'நிகா' அவனுக்கு ஏற்பட நியாயம் இல்லையே! கட்டி விழுந்த குழந்தைகள், ஜுரம் வந்தவர்கள், எலும்புருக்கி வியாதிக்காரர்கள், பணக்கார உத்தியோகஸ்தர்கள்—இவர்கள் வாழும் இடங்களில்தான் அவனுக்குக் கிராக்கி அதிகம். அந்த இடங்களை அவன் தெரிந்துகொண்டு வருகிறான். மற்றத் தெருக்களில் அநுபவத்தால் சில இடங்களைத் தெரிந்துகொண்டிருக்கிறான்.

இன்று புதிதாக இந்தத் தெருவுக்கு வந்ததில் சிறிது நிதானமாகத்தான் வியாபாரம் ஆகும் என்பது அவனுக்குத் தெரியும். காலையில் பழக்கூடையை எடுத்துக்கொண்டு புறப்பட்டவன், என்னவோ தோன்றிற்று, இந்தத் தெருவில் நுழைந்துவிட்டான். இன்னும் 'பேரமே ஆகவில்லை. முதல் முதலில் ஒரு குழந்தை கூப்பிட்டது அவனுக்கு நல்ல சகுனமாகப் பட்டது. பல இடங்களில் பழகித் தெரிந்துகொண்ட அவனுக்கு, குழந்தையின் முகத்தைப் பார்த்தவுடனே கட்டி விழுந்திருக்கிறதென்று தெரிந்துவிட்டது. வைத்தியர்களுக்குத்தானா இந்த விஷயம் தெரியும்? கந்தனுக்கும் தெரியும். எத்தனை குழந்தைகளுக்கு அவன் பழம் கொடுத்திருக்கிறான்!

தங்கவேலன்—அந்தக் குழந்தைதான்—அழைத்தவுடன் கந்தன் அங்கே சென்று தன் கூடையை இறக்கி வைத்தான். "அம்மா!" என்று அழைத்தான். வீட்டுக்கார அம்மாள் இன்னும் வரவில்லை. அதற்குள் குழந்தை நெடுநாள் பழக்கப்பட்டவன்போல் ஒரு பழத்தை எடுத்துக்கொண்டு உள்ளே ஓடினான். "அம்மா, பயம்" என்று சொல்லியபடியே தன் தாயை அணுகினான்.

'பேரம் இன்னும் ஆகவில்லையே! முதல் முதல் இந்தக் குழந்தை கை வைத்திருக்கிறதே? பழக்கம் இல்லாத இடம். வீட்டுக்கார அம்மாள் எப்படிப்பட்டவளோ? தாராள மனசு உடையவளோ, பிசுநாறியோ?' என்று கந்தன் யோசித்தான். அதற்குள் உள்ளேயிருந்து குழந்தையுடன் தாய் வந்துவிட்டாள்.

"இந்தப் போக்கிரியிடம் ஏன் பழத்தைக் கொடுத்தாய்? வாங்குவதற்குமுன் பழத்தைக் கடித்துவிட்டானே!" என்று சொல்லியபடி அந்த அம்மாள் வந்தாள்.

"நான் கொடுக்கவில்லை. குழந்தையே ஆசைப்பட்டு எடுத்துக்கொண்டு ஓடிப்போயிற்றம்மா. அதைத் தடுக்கலாமா?" என்று கேட்டான் கந்தன்.

"பழம் நன்றாயிருந்து நான் வாங்கினால்தான் சரி. இல்லாவிட்டால் இந்தப் பழத்தை என்ன பண்ணுகிறது?" என்றாள் வீட்டுக்காரி.

"குழந்தை ஒரு பழத்தைக் கடித்தால் என்ன அம்மா? குழந்தை தெய்வத்துக்குச் சமானம். அந்த ஒரு பழம் போய்விட்டால் எனக்கு ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது அம்மா. உங்கள் குழந்தை தங்கக் கையாலே இன்றைக்கு முதல் முதல் பேரம் பண்ணியிருக்கிறது. அதைப் போய்க் கோபித்துக் கொள்கிறீர்களே! கடித்த பழம் என் பழமாக இருக்கட்டும். அதற்குக் காசு வேண்டாம். வேறே பழம் எடுங்கள். அதற்கு விலை கொடுத்தால் போதும்."

அம்மாள் மனசுக்குள் பூரித்தாள். தன் மகன் கையைத் தங்கக் கை என்றல்லவா அவன் சொல்கிறான்?

"நீ பேசுகிறது வேடிக்கையாக அல்லவா இருக்கிறது? பழம் வாங்கினாலும் வாங்காவிட்டாலும் இவன்

கடித்த பழம் உனக்கு உபயோகப்படாது. அதற்குத் தானே நான் விலை முக்கியமாகத் தரவேண்டும்?" என்ருள் அம்மாள்.

"அது சரிதான் அம்மணி. குழந்தை தூக்கிக் கொண்டு போனதை நான் தடுக்கவில்லை என்று சொன்னீர் களே; அதற்காகச் சொன்னேன். உங்கள் மனசு எனக்கு நன்ருகத் தெரிகிறதே! ஏழைபாழைகளுக்குக் காலணுக் கிடைப்பது குதிரைக்கொம்பாக இருக்கும் இந்தக் காலத்தில் ஜாக்கிரதையாகத்தான் வியாபாரம் செய்ய வேணும்."

கந்தன் விநயமான பேச்சினுல் தையல்நாயகி அம்மாளை வசப்படுத்திவிட்டான். அன்று அந்த அம்மாள் சேர்ந்தாற் போல் ஆறு பழம் வாங்கிளுள். முதல் முதல் நல்ல பேரந் தான். அதோடு நிற்கவில்லை. அன்று பல தெருக்களுக்கு அலையவேண்டிய அவசியமே இல்லாமல் நாலு இடங்களில் நறுக்கென்று பேரம் படிந்து கூடை முழுவதும் காலியாகி விட்டது.

மறுநாள் கந்தன் வந்தான். திண்ணையில் கூடையை இறக்கி வைத்துவிட்டு, "அம்மா!" என்று கூப்பிட் டான். "நேற்றுத்தானே பழம் வாங்கினேன்? மறு படியும் இன்றைக்கு எதற்கு?" என்று உள்ளே இருந்து வந்த அம்மாள் கேட்டாள்.

"நீங்கள் இன்று பழம் வாங்கவேண்டாம். நான் இங்கே பழம் விற்க வரவில்லை. உங்கள் குழந்தைக்கு ஒரு பழம் கொடுத்துவிட்டுப் போகத்தான் வந்தேன்."

"அதென்ன அதிசயம்? இனுமாகவா, விலைக்கா?" என்று கேட்டாள் அம்மாள்.

"உங்களைப் பார்த்தால் மகாலட்சுமியைப் போல் இருக்கிறது. உள்ளதைச் சொல்லிவிடுகிறேன். நீங்கள்

எப்படி நினைத்துக் கொண்டாலும் சரி. நான் நேற்றுத் தான் முதல் முதலாக இந்தத் தெருவுக்கு வந்தேன். அது வும் இந்த வீட்டில்தான் முதல் முதல் கூடையை இறக்கி வைத்தேன்; உங்கள் குழந்தை ஓடிவந்து கை வைத்தது. பேரம் ஆகாமல் இருக்கிற கூடையில் யாராவது கை வைத் தால் கூடைக்காரர்கள் சண்டைக்கு வந்துவிடுவார்கள். ஆனால் உங்கள் குழந்தை கை தங்கக் கை. ராசியுள்ள கை. நேற்று அலைச்சல் இல்லாமல் கூடைப் பழத்தையும் விற்று விட்டேன். உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. தப்பாக நினைத்துக்கொள்ள வேண்டாம். குழந்தையைக் கூப்பிடுங்கள். அவன் தன் கையாலேயே ஒரு பழத்தை எடுத்துக் கொள்ளட்டும்" என்றான் பழக்கூடைக்காரன்.

தன் குழந்தையைப் பாராட்டினால் எந்தத் தாய் வயிறு தான் குளிராது? "மெச்சி உனை ஊரார் புகழ்ந்தால், மேனி சிலிர்க்குதடீ!" என்று பாரதியார் பாடவில்லையா? தையல்நாயகி உள்ளே ஓடினாள். தங்கவேலனை எடுத்துக் கொண்டு வந்தாள். "போக்கிரி! உனக்கு இனும் கிடைக்கிறது. எடுத்துக்கொள். ஒரு பழத்தை அந்தக் கூடையிலிருந்து எடுத்துக்கொள்" என்றாள். குழந்தை இரண்டு கையையும் கொண்டுபோனான். "இந்தா; ஒரே ஒரு பழம்" என்று எச்சரித்தாள் தாய்.

"இரண்டு எடுத்துக் கொண்டால்தான் என்ன அம்மா? எனக்கு இரட்டிப்பு லாபம் கிடைக்கிறது" என்று வஞ்சகம் இல்லாத சந்தோஷம் முகத்தில் ஒளியைப் புகுத்தப் பேசினான் கந்தன்.

தங்கவேலன் ஒரு பழத்தை எடுத்துக்கொண்டான்: "எனக்கு அம்மா?" என்றான்.

"உனக்குத்தான் கண்ணு. உன் தங்கக் கைக்குச் சம்மானம்!" என்று கைக்கு ஒரு முத்தம் கொடுத்தாள்

தாய். "இதோ பார் அப்பா! இந்தப் பழத்துக்கு விலை வாங்கிக்கொள். சும்மா தரவேண்டாம். நீ குழந்தைக்கு ஆசையோடு தரவேண்டுமென்று வந்தாயே; அதுவே பெரிது" என்று சொன்னாள். அவன் வாங்கமாட்டேன் என்றான். கடைசியில் பெயருக்காக அரையணாக் கொடுப்பதென்று சமாதானத்துக்கு வந்தார்கள்.

இப்படி ஆரம்பித்த வியாபாரம் நெருங்கிய அன்பைக் குழந்தைக்கும் கந்தனுக்குமிடையே உண்டாக்கிவிட்டது. தினந்தோறும் அவன் வருகிறதென்று வழக்கமாகிவிட்ட படியால், ஒவ்வொரு நாளும் இரண்டிரண்டு பழமாக வாங்கும் நியதி ஏற்பட்டது. அதோடு தங்கவேலனுக்கு எடுத்துக்கொள்ளும் பழம் ஒன்று; அதற்கு மாத்திரம் அரையணா விலை.

## 2

கந்தன் பழம் கொடுக்க ஆரம்பித்துச் சில மாதங்கள் ஆகிவிட்டன. தங்கவேலனுக்கு இப்போது கட்டி கரைந்து விட்டது. கந்தன் இப்போதெல்லாம் பழம் விற்கும் வியாபாரியாக அந்த வீட்டில் பழகவில்லை. குடும்பத்தைச் சேர்ந்தவனைப் போலவே பழகினான். அந்த வீட்டுக்கு வேண்டிய சில்லறை வேலை ஏதாவது இருந்தால்கூடச் செய்வான். அவன் வராத நாட்களில் அவன் மனைவி பழம் கொண்டுவந்து கொடுப்பாள். சூரியன் ஒரு நாள் வராமல் இருந்தாலும் இருக்கலாம்; பழம் அந்த வீட்டுக்கு வராமல் இராது.

"குழந்தைக்கு இவ்வளவு சீக்கிரம் கட்டி கரைந்தது சாமி புண்ணியந்தான் அம்மா. ஒவ்வொருத்தர் வீட்டில் மாசக் கணக்கிலே குழந்தைகள் கஷ்டப்படும். நல்ல மருந்தாகக் கொடுத்திருக்கிறீர்கள்" என்பான் கந்தன்.

"மருந்திலே ஒன்றும் இல்லை கந்தா. எல்லாம் உன் பழத்தின் மகிமை அப்பா. குழந்தைக்கு அந்தப் பழம் இல்லாவிட்டால் எப்படியாகியிருக்குமோ? கடவுள்தான் உன்னைக் கொண்டுவந்து விட்டார்" என்பாள் தையல் நாயகி அம்மாள்.

"என் பழம் என்ன செய்யும் அம்மா? நல்லவர்களுக்கு ஒரு குறைவும் வராது அம்மா. என் ராஜா தங்கக் கை இருக்கும்போது யாருக்கு என்ன குறைச்சல்?...அம்மா, ஒரு விஷயம் சொன்னளா அவள்?"

"யார்? உன் பெண்டாட்டியா?"

"ஆம். இந்த வெள்ளிக்கிழமை அவளுக்கு ஒரு தங்கச் சங்கிலி கிடைக்கப் போகிறது. எல்லாம் இந்தத் தங்கக் கையின் ராசி" என்று குழந்தையின் கையை முத்தமிட்டான் கந்தன்.

"இந்த வருசம் குழந்தைக்குப் பிறந்த நாள் எப்போது அம்மா வருகிறது?"

"அடுத்த மாசம்."

"கிழமை, தேதி தெரியுமா? அன்றைக்குச் சாமிக்கு அர்ச்சனை பண்ணுவீர்களா?"

"உனக்கு இருக்கும் அக்கறை அவருக்கு இல்லையே! சதா வேலை வேலை வேலைதான். அவருக்கு இதைப் பற்றிய ஞாபகமே இல்லை. ஏதாவது செய்யவேணும். குழந்தை நல்லபடியாகப் பிழைத்து எழுந்திருக்கிறது. பருப்புப் பாயசம் வைத்துச் சாப்பிடவேணும்."

கந்தன் குழந்தையின் பிறந்தநாளைக் குறிப்பாகக் கேட்டான். எதற்குத் தெரியுமா? அன்று அவன் தங்கவேலனுக்கு ஏதாவது பரிசளிக்க எண்ணினன். என்ன வாங்கித் தருவதென்று யோசனை பண்ணிப் பார்த்தான். தன் மனைவியோடு கலந்து ஆலோசித்தான். துணிமணிகளாக

இருந்தால் கிழிந்துவிடும். ஆகையால், ஏதாவது வெள்ளிப் பாத்திரம் வாங்கித் தரலாமென்று தீர்மானித்தான்.

"ஏன் அம்மா, குழந்தைக்குப் பிறந்த நாள் ஆனால் தெரிந்தவர்கள் ஏதாவது கொடுக்கிறது உண்டா?" என்று மெதுவாகக் கேட்டான் கந்தன்.

"ஆமாம்! முதல் ஆண்டு நிறைவுக்கே கவனிக்கிறவர்களைக் காணோம். ஒவ்வொரு பிறந்த நாளுக்கும் யார் கொடுக்கிறார்களோ!" என்று அசுவாரசியமாகச் சொன்னாள் தையல்நாயகி அம்மாள்.

"அதற்கு இல்லை அம்மா. யாராவது குழந்தையின் மேல் பிரியப்பட்டு வாங்கித் தரக்கூடாதா?"

"பேஷாக வாங்கித் தரலாம். ஆனால் யார் தருகிறார்கள்?"

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? இந்தக் குழந்தையிடம் எவ்வளவோ பேர் பிரியமாக இருக்கிறார்களே! அன்றைக்கு ஊரிலிருந்து தங்கவேலன் அத்தை வந்தார்கள்; இன்னும் ஒரு நாள் யாரோ வந்தார்கள். அவர்களெல்லாம் ஒன்றும் வாங்கித் தருவதில்லையா?"

"நன்றாக வாங்கித் தருவார்கள்! இருக்கிறதைச் சுருட்டிக்கொண்டு போகாமல் இருந்தால் போதாதா? நீ என்னவோ கதை பேசுகிறாய். அதெல்லாம் இந்தக் காலத்தில் எங்கே அப்பா நடக்கிறது? குழந்தையிடம் உண்மையான விசுவாசம் உனக்குத்தான் இருக்கிறது. நீ ஏதாவது வாங்கிக் கொடு; இரண்டு கைகளையும் நீட்டிப் பெற்றுக் கொள்கிறேன்."

"நான் தரமாட்டேனா?" என்று சிரித்துக்கொண்டே கந்தன் போய்விட்டான்.

தையல்நாயகி அம்மாள் பேச்சுவாக்கில் ஏதோ சொன்னாளே ஒழிய, அவள் மனசில் யோசித்துச் சொன்

னது அல்லது அது. ஆனால் கந்தன் அதை உண்மையாக்கி விட்டான். குழந்தையின் பிறந்த நாளன்று அவன் ஒரு வெள்ளிக் கிண்ணத்தைத் தூக்கிக் கொண்டுவந்து குழந்தையின் கையில் கொடுத்தபோது தையல்நாயகி அம்மாள் பிரமித்துப் போனாள்.

"என்ன கந்தா இது? எதற்கு?"

"அன்றைக்கு ஒரு நாள் சொன்னீர்களே! ஏதாவது வாங்கிக் கொடு, பெற்றுக்கொள்கிறேன் என்றீர்களே!"

"என்ன, பைத்தியமாக இருக்கிறாயே! நான் சொன்னதற்காகவா இதை வாங்கினாய்?"

"இல்லை அம்மா. நான் வாங்கித் தந்தால் பெற்றுக் கொள்வீர்களோ, மாட்டீர்களோ என்று பயமாக இருந்தது. உங்கள் வார்த்தையால் அந்தப் பயம் போய்த் துணிவு பிறந்ததம்மா."

"நீ கலிகாலத்து மனிதனாகத் தோன்றவில்லையே, கந்தா! குழந்தைக்குப் பழம் கொடுப்பது போதாதென்று இத்தனை ரூபாய் செலவழித்து இதை வாங்கிக் கொண்டுவந்து கொடுக்கிறாயே! நீ அன்றாடம் பழம் விற்று ஜீவனம் செய்கிறவன். உன்னிடம் இதை நான் வாங்கிக்கொள்ளலாமா?"

"இது என்னுடையது அல்ல அம்மா. குழந்தையுடையதுதான். உண்மையைச் சொல்கிறேன். குழந்தைக்குத் தினமும் ஒரு பழம் கொடுக்கிறேனே; அதற்கு அரையணா நீங்கள் தருகிறீர்கள். அதை வாங்க எனக்கு மனசில்லை. நீங்களோ கட்டாயப்படுத்தினீர்கள். ஒரு யோசனை தோன்றியது. அந்த அரையணாவைத் தினந்தோறும் உண்டியலில் போட்டு வைத்தேன். பத்து மாசத்தில் பத்து ரூபாய் சேர்ந்துவிட்டது. அந்தப் பணத்துக்குத்தான் இதை வாங்கினேன்."

தையல்நாயகியின் உள்ளம் அவனுடைய அன்பின் உயர்வை எண்ணி உருகியது. அவன் யார்? அவள் யார்? குழந்தைக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? ஏழைக் கூடைக்காரன்! அவன் அன்பு அணு அணுவாய்ச் சேர்ந்து மலையாகிவிட்டதே! அந்த வெள்ளிக் கிண்ணம் என்ன? பத்து மாதங்களாக அவன் கொடுத்த பழங்கள் பெருங் குவியலாக அவள் அகக்கண்முன் தோற்றின. அவன் அன்பு-அதற்கு உருவம் என்ன? மலையா? கடலா? அல்லது வானமேதானு? இல்லை இல்லை; பெரியவர்கள் அதன் உருவத்தைச் சொல்லியிருக்கிறுர்கள். அதன் எல்லை, அதன் அளவு, அதன் ஆழம், அதன் விரிவு அளவிட ஒண்ணுதவை. மனிதனிடத்தில் அது தோன்றலாம். ஆனுல் அந்த மனிதனுலே எல்லை காணமுடியாதது அது. அதற்கு ஒன்றைத்தான் அளவாகக் கூறலாம். அளவாகவா? அன்று அன்று; உவமையாகக் கூறலாம். உவமைகூட அல்ல; அதுவே அது. அன்புதான் பரம்பொருள். பரம்பொருள் தான் அன்பு.

தையல்நாயகியின் கண்ணில் நீர் துளித்தது. அவள் என்ன பேசுவாள்? "வாங்கிக்கொண்டேன்" என்று சொல் வாளா? "கூடாது" என்பாளா? "பாவம், ஏழையின் பணம்!" என்று இரங்குவாளா? "அன்பின் அடையாளம்" என்று போற்றுவாளா?—ஒன்றுமே தோன்ருமல் நின்ருள்.

குழந்தை தங்கவேலன் கிண்ணமும் கையுமாக நின்ருன்; அம்மாவையும் கந்தனையும் மாறி மாறிப் பார்த்த படியே நின்ருன்.

தையல்நாயகியின் மோனம் கலைந்தது. "கந்தா, இன்று நீயும் உன் பெண்டாட்டியும் இங்கேதான் சாப்பிடவேண்டும். நீ தந்த கிண்ணத்தை நான் அளவில்லாத சந்

தோஷத்தோடு வாங்கிக்கொள்கிறேன். நான் வாங்கிக் கொள்வதாவது! யார் வாங்கிக்கொள்ள வேண்டுமோ அவன்தான் தயாராக வாங்கிக்கொண்டானே! என்ன, வருகிருயா?"

"பருப்பும் பாயசமும் சாப்பிட வலிக்கிறதா அம்மா?" என்று ஆனந்தக் களிப்புத் துளும்பக் கந்தன் ஒப்புக் கொண்டான்.

# எங்கள் ஆண்டவன்

சென்னையில் ஒரு வீட்டில் இரண்டு பேர் குடியிருந் தார்கள். முன்கட்டில் இருந்தவர் கோயம்புத்தூர் ஜில்லாக் காரர்; முத்துசாமி முதலியார் என்று பேர். பின்கட்டில் வசித்தவர் திருநெல்வேலி ஜில்லாக்காரர்; சங்கர முதலியா ரென்பது அவர் பெயர். இரண்டு பேரும் இரண்டு கம்பெனி களில் வேலை பார்த்தார்கள். ஒருவருக்கு நூறு ரூபாய் சம்பளம்; மற்றொருவருக்கு நூற்றிருபது ரூபாய் சம்பளம்.

இரண்டு பேருடைய குடும்பங்களும் அன்னியோன் னியமாகவே பழகிவந்தன. ஏதாவது பண்டம் வேண்டு மானால் ஒரு குடும்பத்தினர் மற்றவர்களிடத்தில் வாங்கிக் கொள்வதும் திருப்பிக் கொடுப்பதுமாக அவர்கள் பரஸ் பரம் உபகாரம் செய்துகொண்டார்கள். காலையிலே எழுந் தால் நீராடி உணவுண்டு கம்பெனிக்கு ஓடுவதே வழக்க மாகிப்போன ஆண் பிள்ளைகள் அதிகமாகக் கலந்து பேசிப் பழக நேரம் இல்லாவிட்டாலும், பெண்மணிகள் பழகிச் குலாவிக் கூடி வாழ்ந்தனர்.

ஒரு நாள் முத்துசாமி முதலியார் பின்கட்டுக்கார ராகிய சங்கர முதலியாரிடம் வந்தார். "ஐயா, வெள்ளி ரூபாயாக ஒற்றை ரூபாய் கிடைக்குமா?" என்று கேட்டார்.

"சுத்த வெள்ளி எங்கே கிடைக்கப்போகிறது? எல் லாம் நிக்கலாகவே வந்துவிட்டதே!" என்றார் அவர்.

"அதற்குக் கேட்கவில்லை. என்னிடம் எல்லாம் ஒரு ரூபாய் நோட்டாகவே இருக்கின்றன. ஒற்றை ரூபாய் நாணயம் வேண்டும்" என்று விளக்கினார் முன்கட்டுக் காரர்.

"ஏது, நாணயத்தின் மேலே நாட்டம்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டார் திருநெல்வேலி ஜில்லாக்காரர்.

"குழந்தை ராஜுவுக்கு உடம்பு சரியில்லை. ராத்திரியெல்லாம் உளறுகிறுன். ஆண்டவனுக்கு முடிந்துபோடலாமென்று பெண்டுகள் சொல்கிறுர்கள். அதற்கு ரூபாயாகக் கிடைக்கவில்லை" என்ருர் கோயம்புத்தூரார்.

"அடடா! விஷயம் எனக்குத் தெரியாதே! குழந்தைக்கு ஜுரமா வந்திருக்கிறது? அதுதான் இரண்டு நாட்களாக அவனைக் கண்ணிலே காணவில்லை. டாக்டரும் பார்க்கிறுர் அல்லவா?"

"பார்க்காமல் என்ன? அதோடுகூட ஆண்டவன் மேலும் பாரத்தைப் போடுவது நல்லதுதானே?"

"அது மிகவும் நல்ல காரியந்தான். இந்தாருங்கள் ரூபாய்" என்று தம் பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்து நீட்டினுர் சங்கர முதலியார்.

"சந்தோஷம். இந்தாருங்கள் நோட்டு" என்று முத்துசாமி முதலியார் நீட்டினுர்.

"இதென்ன பிரமாதம்? நான் கொடுத்ததாகத்தான் இருக்கட்டுமே" என்று சொல்லியபடியே அந்த நோட்டை வாங்கிப் பையில் போட்டுக்கொண்டார் சங்கர முதலியார். உடனே, "அது சரி, செந்திலாண்டவன் கண் கண்ட தெய்வம்! அங்கே சந்தனக் காப்புச் செய்வதாகப் பிரார்த்தனை செய்துகொள்ளுங்கள்" என்று யோசனை சொன்னுர்.

கோயம்புத்தூரார், "எங்கள் குல தெய்வம் பழநி ஆண்டவர். அவருக்குத்தான் இதை முடிந்து போடப் போகிறேன். எங்கள் வீட்டு வழக்கம் அது" என்று சொல்லிவிட்டுப் போகத் தொடங்கினுர்.

அவர் நண்பர் அவரை இடைமறித்து, "இங்கே பாருங்கள்; எங்கள் வீட்டில் எங்கள் பாட்டையாவுக்குப்

பாட்டையா காலந் தொடங்கிச் செந்திலாண்டவனுக்குப் பிரார்த்தனை செய்கிறோம். உங்களுக்குச் சொல்கிறேன்; ஆண்டவன் கிருபையால் எங்கள் வீட்டில் கடுமையான வியாதி வந்து படுத்தவர்களே இல்லை. ஏதாவது தலைவலி, ஜுரம் என்று அறிகுறி தோன்றினால் போதும்; திருச்செந்தூருக்கு எழுதி இலை விபூதி தருவிக்க வேண்டியது தான்; அப்புறம் வியாதி இங்கே ஏன் வருகிறது?''

"அதெல்லாம் சரி; எங்கள் பரம்பரை வழக்கம் பழனியாண்டவருக்குப் பிரார்த்தனை செய்து கொள்வது. அதை எப்படி மாற்றுவது?"

"சரி, உங்கள் இஷ்டம்" என்று கடுமையாகச் சொல்லி உள்ளே போய்விட்டார் சங்கர முதலியார்.



குழந்தைக்கு ஜுரம் வந்திருந்தது. பழனியாண்டவனைப் பிரார்த்தித்துக் கொண்டு முடிந்து போட்டார்கள். நல்ல டாக்டர் ஒருவரும் வந்து பார்த்தார். ஜுரம் முதலில் லேசாக இருந்தது, பிறகு கடுமையாகிவிட்டது. கடைசியில் அது 'டைபாயிட்' ஜுரம் என்று டாக்டர் சொன்னார். "மூன்று வாரம் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கு மருந்தைக் காட்டிலும், கூட இருந்து கவனித்துக் கொள்வதுதான் முக்கியம்" என்று அவர் எச்சரிக்கை செய்தார்.

"பழனியாண்டவனே! நீதான் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும்" என்று வீட்டில் யாவரும் வேண்டிக் கொண்டார்கள்.

இந்த நிலையில் பின்கட்டுக்காரர் தூர இருந்தபடியே டாக்டர் வருவதையும் போவதையும் கவனித்து வந்தார். நெருங்கிவந்து பேசவில்லை. டாக்டரிடம் மாத்திரம், "எப்படி இருக்கிறது?" என்று கேட்பார். "அப்போதே

சொன்னேன். இந்தப் பாவி மனிதன் கேட்டானு? செந்திலாண்டவன் விபூதி வருவித்து நாலு நாள் உள்ளுக்குக் கொடுத்தால் இது இவ்வளவுக்கு வந்திருக்குமா? திருச்செந்தூரின் பெருமை இந்தக் கொங்கர்களுக்கு எங்கே தெரியப்போகிறது? ஊமையைப் பேச வைத்த ஸ்தலம் என்பதை இவர்கள் கேட்டிருப்பார்களா? மனிதனுக்கு நல்லது பொல்லாதது தெரியவேண்டும். இல்லாவிட்டால் தெரிந்தவர்கள் சொல்வதையாவது கேட்க வேண்டும். மலைமேலிருக்கிற சாமியெல்லாம் வந்து காப்பாற்றப் போகிறதாக்கும்!" என்று முணு முணுப்பார்.

சில சமயங்களில், "இந்தப் பழநியாண்டவன் காப்பாற்றுவதை நான் பார்க்கத்தானே போகிறேன்? எல்லாம் அரோ ஹராத்தான்!" என்று கூடச் சொல்வார்.

அவர் பராமுகமாக இருப்பதை முத்துசாமி முதலியார் கவனிக்கவில்லை. அவருக்குக் குழந்தையைப் பற்றிய கவலையே பெரிதாக இருந்தது. கம்பெனிக்கு லீவு எழுதிப் போட்டுவிட்டு அல்லும் பகலும் குழந்தையைக் கவனித்துக்கொண்டே இருந்தார்.

சங்கர முதலியார் அவர் கவலையை உணரவில்லை. "என்னிடம் ஒரு யோசனை கேட்கக்கூடாது? நானே பணம் அனுப்பி ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ஏற்பாடு செய்வேனே!" என்று மனசுக்குள்ளே பொருமினுர்.

முத்துசாமி முதலியார், "ஆண்டவா, பழநி மலையானே! நீதானப்பா காப்பாற்ற வேண்டும்" என்று கசிந்து பிரார்த்திப்பார்; அந்த ஒலி இவர் காதில் விழும் போதே, "ஆமாம்; காப்பாற்றப் போகிருன் ஆண்டி! ஆண்டிக் கோலம் போட்டுவிடப் போகிருன், பார்" என்று பல்லைக் கடித்துக் கொள்வார்.

★

கடைசியில் குழந்தை இறந்துவிட்டது. முத்துசாமி முதலியார் துக்கக் கடலில் ஆழ்ந்திருந்தார். யார் யாரோ துக்கம் கேட்க வந்தார்கள். பின்கட்டுக்காரரும் போனுர். ஏதோ கேட்டார். அப்போதும் அவர் சும்மா இருக்கவில்லை. "டாக்டருக்கு இவ்வளவு செலவழித்தீர்கள். நான் சொன்னதை மாத்திரம் கேட்க உங்களுக்கு மனசு வரவில்லை" என்ருர்.

அருகில் இருந்த பெரியவர் ஒருவர், "என்ன சொன்னீர்கள்?" என்று விசாரித்தார்.

"அதை இப்போது சொல்லி என்ன பிரயோசனம்? நான் மண்டையை உடைத்துக்கொண்டேன், செந்திலாண்டவனுக்கு முடிந்து போடும் என்று. ஆயிரம் ஆயிரம் வருஷங்களாக ஜனங்களைக் கரையேற்றுவதற்காக ஆண்டவன் அலை கொந்தளிக்கும் கடற்கரையில் நிற்கிறுன். அவனை நினைத்தால் எல்லாம் தீர்ந்துவிடுமென்றேன். இவர் நம்பவில்லை."

"அப்படியா?" என்ருர் பெரியவர்; அவர் தெய்வத்தை உண்மையாக நம்புகிறவர்.

"உங்களுக்கு ஆண்டவன் அருமை தெரியும் போல் இருக்கிறது. இவர் என்னடா என்ருல், பழநியாண்டவனுக்கு முடிந்து போட்டார். அப்போதே சொன்னேன் வேண்டாமென்று. இப்போது கண் முன்னே பார்க்கிருர் பலனை. எங்கள் ஆண்டவன் இப்படிக் கை விடுவாஞ?"

பெரியவருக்கு அந்தத் துக்கச் சூழலிலும் சிரிப்பு வந்தது. 'பழநியாண்டவன் ஒரு கட்சி; செந்திலாண்டவன் ஒரு கட்சி. பழநியாண்டவன் தீமை செய்பவன்; செந்திலாண்டவன் நன்மை செய்பவன்! அட! ஓரே தெய்வத்திலும் பிரிவினையா? பாழாய்ப் போன மனித உள்ளமே!' என்ற எண்ணங்கள் அவர் உள்ளத்தூடே எழுந்தன.

ஆனுல் அவர் வாய், "அப்படியா!" என்ற வார்த்தையைத் தான் வெளியிட்டது.

# வட்டியும் முதலும்

"....காலேஜில் படித்தாலே 'நாணம்' என்பது போய்விடும் போல் இருக்கிறது. அத்தனை பேருக்கு நடுவில் நீ என்னைப் பார்த்துச் சிரித்தாயே; அது நியாயமா? மற்றவர்கள் என்ன நினைத்துக் கொள் வார்கள்? கல்யாணத்துக்கு இருக்கும் பெண்..."

மேலே கமலா படிக்கவில்லை. முன்பே இரண்டு மூன்று முறை கடிதம் முழுவதையும் படித்துவிட்டாள். இன்னும் எத்தனை தடவை படிக்கப் போகிறாளோ தெரி யாது. அவன் தேனில் தோய்த்து அந்தக் கடிதத்தை எழுதியிருந்தான், என்ன!

அவள் இதழின் ஓரம் விண்டது. புன்னகை மெல்லத் தலைகாட்டியது. 'அது நியாயமா?' என்ற கேள்வியிலே அவள் கண் மறுபடியும் மறுபடியும் இடறியது. கண் இடறியதும் வாய் புன்முறுவல் பூத்தது. அவள் உள்ளத் தில் பழைய காட்சி விரிந்தது.

★

"அவள் நன்றாகப் பிடில் வாசிப்பாள்" என்றார் கமலாவின் அப்பா கோபாலையர்.

"காலேஜில் படிக்கிற பெண்களுக்குச் சங்கீதம் கற்றுக்கொள்ளக்கூட நேரம் கிடைக்கிறதா!" என்று கேட்டார் வந்த பெரியவர்.

கமலாவைப் பார்ப்பதற்காக அவர்கள் வந்திருக்கிறார் கள். பதினாறு வயசு கடந்து பதினேழாம் வயசில் அவள் நடமாடிக் கொண்டிருந்தாள். இண்டர் பரீட்சை எழுதி யிருக்கிறாள். நிச்சயமாக முதல் வகுப்பில் தேர்ச்சி பெறு வாள் என்பதில் யாருக்கும் சந்தேகம் இல்லை. அவளுக்கு

என்னவோ மேலே படிக்கவேண்டுமென்று ஆசை. அவள் தகப்பனுருக்கோ நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்துவிட வேண்டுமென்ற எண்ணம்.

"இவ்வளவு தூரம் படிக்க வைத்திருக்கிறீர்கள். இன்னும் இரண்டு வருஷங்கள் பொறுக்கக்கூடாதா? ஒரு வகையாகப் பி. ஏ. பரீட்சையும் எழுதிவிடட்டுமே" என்று யாராவது சொல்வார்கள்.

"இவள் பி. ஏ. பட்டம் பெற்று உத்தியோகத்துக்குப் போகப் போகிருளா என்ன? வீட்டில் சோம்பேறியாகப் பொழுது போக்குவதைவிட, காலேஜுக்குத்தான் போய் வரட்டுமே என்று அனுப்பினேன். ஆயிற்று; நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிவிட்டால், அப்புறம் இவளுக்குச் சாமர்த்தியம் இருந்தால் பட்டத்தைப் பெற்றுக்கொள்ளட்டுமே!"

"வீட்டிலே இருந்து பி. ஏ. பட்டம் பெறமுடியுமா?"

"அதைச் சொல்லவில்லை. நல்ல பெண் என்ற பட்டத்தைப் புருஷனிடத்திலும் மற்றவர்களிடத்திலும் பெறட்டும் என்று சொல்கிறேன்."

"போம் ஐயா, சுத்தக் கர்நாடகமாக இருக்கிறீரே!" என்று நண்பர் அலுத்துக்கொள்வார்.

தகப்பனுர் தம்முடைய கருத்தையே சாதிக்கப் பார்த்தார். கமலா தன் தந்தையின் விருப்பத்துக்குக் குறுக்கே நிற்கவில்லை. ஆகவே அவர் ஜாதகங்களை வாங்கிவந்தார்; பார்த்தார். ஜோசியர்களை நாடி ஓடினுர்.

நல்ல இடமாக ஒன்று தட்டுப்பட்டது. பையன் உதவி இஞ்சினீயராக இருக்கிறுன். இருபத்தைந்து வயசாகிறது. சொத்தும் இருக்கிறது. ஜாதகம் பொருந்தியிருக்கிறது. மனிதர்களும் நல்ல குடும்பம் என்று தோன்றுகிறது.

அன்று அவர்கள் பெண் பார்க்க வந்திருந்தார்கள். பையன் பார்ப்பதற்கு லட்சணமாகவே இருந்தான். முகத்தில் சுறுசுறுப்பின் ஒளி தவழ்ந்தது. அவன் கண்கள் சதா துறுதுறுவென்று அலைந்துகொண்டே இருந்தன. அந்தக் கூடம் முழுவதையும் சில கணங்களில் பார்த்து விட்டன.

''முதலில் காபி கொண்டுவந்து வைக்கச் சொல். பிறகு பிடில் வாசிக்கலாம்'' என்று கோபாலையர் சொன்னார்.

அவள் இரண்டு கைகளிலும் இரண்டு வெள்ளித் தட்டில் இனிப்புச் சிற்றுண்டியைக் கொண்டுவந்து வைத்தாள். மூன்றாவது மனிதர் ஒருவரும் இருந்தமையால் மற்றொரு தட்டையும் வாங்கிக்கொண்டுவந்து வைத்தாள். அப்போது தான் அந்த 'நியாயம் இல்லாத காரியம்' நடந்தது.

அவள் அதிகமாக நாணிக் கோணிக்கொண்டு நடக்க வில்லை, காலேஜில் பழகினவள் ஆகையால். ஆனால் வணக்க மின்றியும் நடக்கவில்லை. அவள் நடையில் கம்பீரம் இருந்தது; விநயமும் இருந்தது. கண்ணால் அந்தப் பையனை நன்றாகப் பார்த்தாள்; ஆனால் அவள் பார்த்ததை யாரும் கவனிக்கவில்லை.

இப்போது, அதாவது அங்கே வந்திருந்த மூன்றாவது பேர்வழியிடம் சிற்றுண்டித் தட்டை வைத்தபோது, அவள் நிமிர்ந்தே பார்த்துவிட்டாள். ஒரு கணம் பிரமிப்புத் தட்டியது. அடுத்த கணம் அவள் முகத்தை முறுவல் ஒளி செய்தது. அவனும் அவள் முகத்தைப் பார்த்தான்; நகை பூத்தான்.

அவள் சரசரவென்று உள்ளே போய்விட்டாள். அப்புறம் பிடிலை வைத்துக்கொண்டு ஏதோ பாடினாள். மறுபடியும் எல்லோருக்கும் நமஸ்காரம் செய்தாள். அந்த மூன்

ருவது பேர்வழியைப் பார்த்துப் புன்னகை செய்தது முதல் அவள் நிலை மாறிவிட்டது. கிராமத்து வயலில் வரப்போரத்தில் பழக்கம் இல்லாதவர் நடப்பதுபோல ஒவ்வொன்றையும் தட்டுத் தடுமாறிக்கொண்டே செய்தாள்.

வந்தவர்கள் விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்; போய்த் தகவல் தெரிவிப்பதாகச் சொல்லிப் போனார்கள்.

இங்கே கமலாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை; "ஏன் அப்பா, மறுபடியும் இரண்டு வருஷம் காலேஜில் படித்தால் என்ன?" என்று கேட்கத் தொடங்கினாள்.

"பிள்ளையாண்டானை உனக்குப் பிடிக்கவில்லையா?" என்று அவர் நேர்முகமாகவே கேட்டுவிட்டார். அவள் என்ன சொல்வாள்?

"அதற்கு இல்லை. என் மனசு சரியாகவே இல்லை. கல்யாணம் பண்ணிக்கொண்டவுடன் உங்களை யெல்லாம் பிரிந்துபோக வேண்டுமே! எப்படியும் அது இருக்கவே இருக்கிறது. இன்னும் இரண்டு வருஷங்கள்..."

"போடி அசடு!" என்று அவள் பேச்சை நிறுத்தினார் கோபாலையர்.

இரண்டு நாள் கழித்து அவர்களிடமிருந்து சமாசாரம் வந்தது. பையனுடைய தகப்பனாரே வந்தார். "ஜாதகத்தை எங்கள் குடும்பத்து ஜோசியரிடம் காட்டினதில் ஏதோ ஒரு பொருத்தம் இல்லையென்று சொன்னார். இவ்வளவு தூரம் நம்பிக்கை கொடுத்துவிட்டு மாற்றுவதா என்று எனக்கே வருத்தமாக இருந்தது. ஆனால் வேறு ஏற்பாடு ஒன்று செய்யலாமென்று நினைக்கிறேன். உங்களுக்குச் சம்மதமானால் சொல்லுங்கள்" என்றார் அந்தப் பெரியவர்.

"என்ன?" என்று நிதானமாகக் கேட்டார் கோபாலையர்.

"அன்றைக்கு எங்களுடன் வேறொரு பிள்ளையாண்டான் வந்தானே, அவன் ஐ. ஏ. எஸ். பரீட்சைக்குப் போயிருக்கிறான். இப்போது ஏதோ வேலையில் இருக்கிறான். என் தங்கை பிள்ளை. நல்ல கெட்டிக்காரன். நானே அவன் ஜாதகத்தை வாங்கி உங்கள் குட்டியின் ஜாதகத்தோடு வைத்துப் பார்க்கச் சொன்னேன். மிகவும் உத்தமமாகப் பொருந்தியிருக்கிறதாம். இந்த மாதிரி இணைவது மிகவும் அருமை என்று ஜோசியர் சொன்னார்."

கோபாலையருக்கு இது மிகவும் ஆச்சரியமாக இருந்தது. தம் பெண் விஷயத்தில் அவருக்கு உள்ள சிரத்தையை நினைந்துதான் ஆச்சரியப்பட்டார்.

"அப்படியா! கடவுளுடைய சித்தம் அப்படி இருந்தால் அப்படியே நடக்கட்டும். அந்தப் பிள்ளையும் அவனைச் சேர்ந்தவர்களும் என் பெண்ணைப் பார்க்க வேண்டாமோ?"

"அன்றைக்கே அந்தப் பையன் பார்த்துவிட்டான்; நாங்களும் பார்த்தோம். அதுவே போதும். பெண்ணைப் பற்றி எல்லோருக்கும் திருப்திதான்" என்று அவர் சொன்னார்.

மேலே ஏற்பாடுகள் நடந்தன. கமலா இதற்கு ஆட்சேபம் சொல்லவில்லை. கல்யாணம் சுபமாக நிறைவேறியது.

இந்தக் காட்சிகளெல்லாம் கமலாவின் மனக்கண் முன்னே ஓடின.

மறுபடியும் அவள் இதழ்க் கோணத்திலே ஒரு புன்னகை அரும்பியது. கடிதத்தின் மேல் மீட்டும் கண் சென்றது.

★

'....காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டுபோனான்' என்ற கதையாகிவிட்டது நம்

முடைய விஷயம். திடீரென்று என்னுடைய மாமா உன் தகப்பனாரிடம் வந்து எனக்கு உன்னைக் கேட்டது ஏன் என்று உங்களுக்குத் தெரியாது. அவர், ஜாதகம் பொருந்தவில்லை என்று சாக்குச் சொன்னாராம். அதெல்லாம் சுத்தப் பொய். காரணம் சொல்கிறேன்.

'நான் என் ஆபீஸ் வேலையாகச் சென்னைக்கு வந்திருந்தேன். அன்று உன்னைப் பார்ப்பதற்காக என் மாமா பிள்ளை புறப்படுவதாக ஏற்பாடு செய்திருந்தார்கள். மாமா, மாமி, ரகு மூவரும் புறப்படத் தயாரானார்கள். அம்மாமி ஒன்று சொன்னாள். "மூன்று பேராகப் போவானேன்? சீனுவும் வரட்டுமே! நமக்குக் கொடுக்கிற காபியை அவனுக்கும் கொடுக்கச் சொன்னால் போகிறது' என்றாள். ஆகவே நானும் புறப்பட்டு வந்தேன். நான் உன்னை அங்கே பார்ப்பேனென்று கனவிலும் நினைக்கவில்லை.

'நீ என்னைக் கண்டதும் பிரமித்தது போல நானும் பிரமித்துப் போனேன். என் மாமா பிள்ளை மகா கெட்டிக்காரன். நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டதையும் நம்மை அறியாமல் சிரித்துக் கொண்டதையும் அவன் கவனித்துவிட்டான்.

'வீட்டுக்கு வந்தான். அவன் தனியே வந்து என்னைக் கண்டான். "உனக்கு அந்தப் பெண்ணை முன்பே தெரியுமா?" என்று கேட்டான்.

' "தெரியும்; ஆனால் தெரியாது" என்றேன்.

' " இந்த ஒளிவு மறைவெல்லாம் வேண்டாம். உண்மையைச் சொல்" என்றான்.

' " உண்மையைத்தான் சொல்கிறேன். ஓரளவு தெரியும். ஆனால் பெயர்கூடத் தெரியாது."

'அவனுக்கு மேலே விசாரிக்க இஷ்டம் இல்லை.

'"நீ அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறாயா?" என்று கேட்டான்.

'அந்தக் கேள்வியை நான் எதிர்பார்க்கவில்லை. இரண்டாம் தடவையாக நான் பிரமித்தேன்.

'"இதோ பார் சீனு; நீ அவளை எங்கே எப்படிச் சந்தித்தாய் என்றெல்லாம் நான் கேட்டுக் கொண்டிருக்கப் போவதில்லை. அவள் உனக்காகவே பிறந்தவள் என்று எனக்குத் தோன்றிவிட்டது. ஆகவே, அவள் கழுத்தில் நீ தாலி கட்டும்படி ஏற்பாடு செய்யப் போகிறேன்" என்று சொல்லி என் முதுகைத் தட்டினான். தன் தகப்பனாரிடம் என்ன சொன்னானோ, ஏது சொன்னானோ; அந்தப் பெரியவரையே நேரில் அனுப்பி, கதா நாயகனை மாற்றிவிட ஏற்பாடு செய்தான். கல்யாணம் ஆனபிறகு என் அம்மாஞ்சியிடம் நான் சொன்ன சூத்திரத்திற்கு விளக்கம் கூறினேன். "அவளைத் தெரியும்; ஆனால் தெரியாது" என்று சொன்னேனே, அதை விளக்கினேன்......'

மறுபடியும் அவள் கண் மேலே படிக்காமல் நின்றது. பழைய நினைவு மறுபடியும் வந்தது.

★

அவள் தகப்பனார் உள்ளே வந்தார்.

"கமலா, பிடிவாதம் பிடிக்காதே. அந்தப் பெரியவர் இப்போது தான் வந்து போனார். அவருடைய பையனுக்கும் உனக்கும் ஜாதகப் பொருத்தம் இல்லையாம். ஆனால் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல ஒரு காரியம் நடந்திருக்கிறது. நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டு விட்டு விஷயத்தைச் சொன்னார்.

"ஐ.ஏ.எஸ்.ஸுக்குப் போயிருக்கிறாரா?" என்று கமலா கேட்டாள்.

தம் பெண்ணின் மனசிலே கொஞ்சம் சபலம் தட்டுவதாக எண்ணிக் கொண்டார் அவர். கமலாவோ இந்த உலகத்திலேயே இல்லை. அவள் சொர்க்க லோகத்தில் நடைபோட்டுக் கொண்டிருந்தாள்.

''ஆமாம்; இப்போதும் ஒரு வேலையில் இருக்கிறானாம். கெட்டிக்காரப் பையனாம்.''

''அவர் கண்ணிலே இருந்த ஒளியே அவர் எத்தனை அறிவாளி என்பதைக் காட்டுகிறது''—கமலா தான் இப்படிச்சொன்னாள்; உடனே நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''அவனையும் பார்த்தாயா? சரி; ஈசுவர சங்கற்பம் அப்படித்தான் எல்லாவற்றையும் பொருத்தமாகக் கொண்டுவந்துவிடும்'' என்று சொல்லிவிட்டு அவர் கமலாவின் பதிலை எதிர் பார்க்காமல் மேற்கொண்டு பேச்சை நடத்தப் போய்விட்டார். கமலாவின் உள்ளம் அவருக்குத் தெரிந்துவிட்ட பிறகு அவர் தாமதம் செய்வாரா?

★

மீண்டும் புறக் கண்களுக்கு உணர்வு வந்தது. கையில் உள்ள கடிதத்தைப் பார்த்தாள்.

'...இறைவன் திருவருளாலும் உன் அதிருஷ்டத்தாலும் எனக்குப் பரீட்சையில் ஐந்தாவது இடம் கிடைத்தது போல விரைவில் நல்ல வேலையும் கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். உன்னை அழைத்து வர ஏற்பாடு செய்ய வேண்டும். நல்ல நாள் பார்த்து அழைத்து வரலாம் என்று அம்மா சொல்கிறாள். அந்த நல்ல நாளை நான் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீ எனக்குத் தரவேண்டிய பழைய பாக்கியை நினைவில் வைத்துக் கொண்டிருப்பாய் என்று நினைக்கிறேன். நீ இங்கே வரும்போது வட்டியும் முதலுமாக அதைச் செலுத்துவா யென்று நம்புகிறேன்...'

இந்தத் தடவை 'வட்டியும் முதலும்' என்பதில் அவள் கண்கள் நிலைத்து நின்றன. அதை மீட்டும் மீட்டும் படித்தாள். அவள் உடம்பு புல்லரித்தது. அவள் வாயிதழ் மலர்ந்து முல்லை மென்னகையைப் புறப்பட விட்டது. மறு படியும் சிந்தனையுலகப் பிரயாணம் தொடங்கியது.



அவள் காலேஜில் இண்டர் இரண்டாம் ஆண்டு படித்துக்கொண்டிருந்த வருஷம். மேரி ராணி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள். கல்லூரிக்குப் போய்விட்டு வழக்கம்போல் வீட்டுக்கு வருகிறவள் அன்று ஓர் ஆசிரியையோடு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டாள். மற்றப் பெண்களெல்லாம் போய்விட்டார்கள். ஆசிரியையுடன் பேசிவிட்டுப் புறப்பட்டாள். வழக்கமாக உடன் வருகிற பெண்கள் யாரும் இல்லை. தனியே காலேஜ் வாசலில் வந்து நின்றாள். 21-பி. பஸ்ஸை எதிர் நோக்கி நின்று கொண்டிருந்தாள். ஐந்து நிமிஷத்தில் பஸ் வந்தது. ஏறி நின்றாள். பஸ் போய்க் கொண்டிருந்தது. கண்டக்டர் டிக்கட் கொடுத்துக்கொண்டு வந்தான். கமலாவிடம், "டிக்கட்" என்று கேட்டபோது அவள் தான் போகும் இடத்தைச் சொல்லி ஐந்து ரூபாய் நோட்டை நீட்டினாள். கண்டக்டர், "நான் அப்போதிலிருந்து கத்திக்கொண்டு வருகிறேன், சில்லறையில்லை என்று. நீங்கள் இதை நீட்டு கிறீங்களே" என்று சள்ளென்று விழுந்தான். அவளுக்கு அவன் சொன்னது தெரியாது என்பதையெல்லாம் நினைக்க அவனுக்கு அவகாசம் ஏது? அவனுடைய அலுப்பு அவனுக்குத் தெரியும்.

"பாரப்பா; சில்லறை இருக்கும். என்னிடம் இருந்தால் கொடுக்க மாட்டேனா?" என்று கெஞ்சும் தொனியில் கமலா சொன்னாள்.

"அப்படியானால் நான் பொய் சொல்கிறேனாக்கும்? இறங்கம்மா கீழே. உங்களுக்கெல்லாம் நல்ல தனமாகச் சொன்னால் தெரியாது. டிரைவர், ஹோல்டான்" என்று சடசடவென்று வார்த்தைகளைக் கொட்டினான் கண்டக்டர்.

கமலாவுக்கு உடம்பு படபடவென்று வந்தது. கண்டக்டர் வெறி பிடித்தவனைப் போலப் பேசுவதை அவள் சகிக்கவில்லை. அவள் என்ன செய்ய முடியும்? உடம்பெல்லாம் கூசியது. கூனிக் குறுகி நின்றாள். 'இறங்குவதா, வேண்டாமா?' என்ற யோசனையில் ஈடுபட்டாள். அதற்கு நேரம் ஏது?

"என்னம்மா, சும்மா நிற்கிறாய்?" என்று உறுமினான் கண்டக்டர்.

அவள் கண்களில் நீர் புறப்பட்டது. அதைக் கையால் மறைத்துக் கொண்டாள்.

அப்போதுதான் அந்தக் குரல் கேட்டது. "ஏன் ஐயா, சும்மா கத்துகிறாய்? எத்தனை ஐயா, தரவேணும்?" என்று மிடுக்கான தொனியோடு வந்தது கேள்வி.

"இரண்டணாக் காசுங்க" என்று ஏளனத் தொனியோடு பேசினான் கண்டக்டர்.

"இதுதானே? இந்தா, வாங்கிக் கொள்" என்று அவன் நீட்டினான். கண்டக்டர் வாய் அதோடு அடைத்து விட்டது.

கமலா மெல்லத் தலையெடுத்துப் பார்த்தாள். இருபது இருபத்திரண்டு வயசுள்ள ஆணழகன் ஒருவன் அவளைப் பார்த்தபடியே அமர்ந்திருப்பதைக் கண்டாள். தலையைச் சிறிது தாழ்த்தி, "தாங்க்ஸ்" என்று சொன்னபடியே அவனிடம் ஐந்து ரூபாயை நீட்டினாள்.

"பரவாயில்லை. இரண்டணா ஒரு பிரமாதம் இல்லை" என்றான் இளைஞன்.

"இல்லை, இல்லை. எனக்குச் சில்லறை வேண்டும்" என்றாள் அவள்.

"என்னிடமும் சில்லறை இல்லையே! இரண்டணாக் கொடுத்து நான் ஏழையாகப் போவதில்லை" என்றான் அவன்.

அவளுக்கு மேலே பேச ஒன்றும் தோன்றவில்லை. "நீங்கள் யார்? உங்கள் விலாசம் என்ன?" என்று கேட்க வேண்டுமென்று நினைத்தாள். அத்தனை பேருக்கு நடுவில் அப்படிக் கேட்பதற்கு லஜ்ஜையாக இருந்தது. அதோடு அந்தப் போக்கிரிக் கண்டக்டர் வேறு அவர்கள் இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

என்ன செய்கிறது என்று புரியாமலே அவள் நின்று கொண்டிருந்தாள். "உட்காருங்கள், இங்கே" என்று அந்த இளைஞன் சொன்னான். அவள் உட்காரவில்லை. அவளை வெட்கம் பிடுங்கித் தின்றது. அங்கே நிற்பதே மிகவும் தர்மசங்கடமாக இருந்தது. நடுவிலே இறங்கி விடலாமா என்றுகூடத் தோன்றியது. அதற்குள் அவன் நடுவில் ஓரிடத்தில் இறங்கினான். அவனுக்குத் தன் நன்றியை நன்றாகத் தெரிவித்துக்கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவளுக்கு இருந்தது. எப்படித் தெரிவிப்பது? அவன் பெயர்கூட அவளுக்குத் தெரியாதே!

அவன் போய்விட்டான். அவன் போவதை அவள் பார்த்தாள். சில கணமே அப்படிப் பார்க்க முடிந்தது. அதற்குள் அவன் நடையிலே உள்ள அழகை அவள் மனக் கண்ணிலே படம் பிடித்துக் கொண்டாள். பஸ் புறப்பட்டு விட்டது. அவளும் உட்கார்ந்து கொண்டாள்.

இப்போது அவள் தவியாகத் தவித்தாள். 'அவரிடம் விலாசத்தைக் கேட்டிருக்கலாம். பிறகு அப்பாவிடம் சொல்லி ஒரு கடிதம் எழுதச் சொல்லியிருக்கலாம். அவர் யாரோ? என்ன பண்ணுகிறாரோ? இந்த ஜன சமுத்திரத்

தில் மறுபடியும் நாம் அவரைச் சந்திக்க முடியுமா, என்ன?'—அவள் சிந்தனை ஓடிக்கொண்டே இருந்தது. பஸ் நிற்கும் இடத்தில் வந்து நின்றது. அவள் சிந்தனை இன்னும் கலையவில்லை. "ஏன் அம்மா, இறங்கவில்லையா?" என்று கண்டக்டர் கேட்டபோதுதான் அவள் இந்த உலகத்துக்கு வந்தாள். "அந்த மனிதர் உங்களுக்குச் சொந்தமோ?" என்று கிண்டலாக வேறு கேட்டுவைத்தான் கண்டக்டர்.

கண்டக்டர் மேல் கண்களால் அனலைக் கக்கிவிட்டு அவள் சரசரவென்று இறங்கினாள்.

வீட்டுக்கு வந்ததுமுதல் அந்த இளைஞனுடைய ஞாபகந்தான். 'நம் நன்றியைச் சரியாகத் தெரிவிக்க முடியவில்லையே!' என்ற எண்ணத்துக்கு மேலாக ஏதோ ஒன்று அவள் இருதயத்தினூடே குறுகுறுத்தது.

அன்று முதல் அவள் அந்தப் பஸ்ஸிலே ஒவ்வொரு நாளும் கவனித்துப் பார்த்தாள். அவனைக் காணலாமென்ற ஆசைதான். உலகம் முழுவதுமே வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தது. ஆனால் அவன் மட்டும் வரவில்லை. 'அட பைத்தியமே! யாரோ ஒருவனைச் சில நிமிஷம் பார்த்துவிட்டு ஏங்குகிறாயே!' என்று அவள் நெஞ்சு அவளைப் பரிகசித்தது. ஆனாலும் அவளுக்கு ஆறுதல் பிறக்கவில்லை.

காலேஜ் படிப்பு நின்றது. பஸ் போக்குவரத்தும் ஒழிந்தது. 'இனி அவரை எங்கே காணப் போகிறோம்! நாம் நன்றியறிவில்லாத ஜன்மம் ஆகிவிட்டோம்' என்று நிச்சயம் செய்து கொண்டாள்.

★

மீண்டும் கடிதத்துக்குத் தன் கருத்தையும் கண்ணையும் திருப்பினாள்.

'......நினைக்க நினைக்க வேடிக்கையாக இருக்கிறது. நான் படிப்பை முடித்துவிட்டு ஐ. ஏ. எஸ். எழுதவேண்டுமென்ற எண்ணத்தோடு அது சம்பந்தமான விவரங்களை விசாரிக்க வந்திருந்தேன். திருச்சிராப்பள்ளியிலே இத்தனை கூட்டம் பஸ்ஸில் இல்லை. சென்னைப் பஸ் கூட்டம் மகா மோசம். கண்டக்டர்களுக்கு மட்டு மரியாதையே இல்லை. அன்று நான் மயிலாப்பூர் போய்விட்டு வந்துகொண்டிருந்தேன். அப்போதுதான் அந்தச் சம்பவம் நடந்தது. உன்னுடைய சங்கடமான நிலையைக் கண்டபோது எனக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அத்தனை வீரர்கள் அந்தப் பஸ்ஸில் அமர்ந்திருந்தார்களே; ஒருவராவது உனக்கு உதவி செய்ய முன்வரவில்லையே! என்ன பட்டணம்! இருதயம் அற்ற பட்டணம்!

'நான் உன்னை நன்ருகக் கவனித்தேன். டிக்கட் வாங்கின பிறகு நீ படும் அவஸ்தையையும் கண்டேன். நீ யார், உன் விலாசம் எது என்று தெரிந்துகொள்ள ஆசைப்பட்டேன். பட்டணம் போக்கிரிகள் ஏதாவது கதை கட்டிவிடுவார்களே. ஆதலால் சும்மா இருந்தேன்.

'பஸ்ஸை விட்டு இறங்கின பிறகுதான் நான் பண்ணியது பைத்தியக்காரத்தனம் என்ற எண்ணம் வந்தது. இரண்டணுக் கொடுத்தது அல்ல; உன்னைப் பற்றித் தெரிந்துகொள்ளாமற் போனது. அந்த நிமிஷத்தில் நான் கோழையாகிவிட்டேன்.

'அதுமுதல் என் மனத்தில் நீ குடிகொண்டு விட்டாய். உன்னை நினைப்பது தர்மமல்ல, சாத்தியமல்ல, அறிவல்ல என்றெல்லாம் எனக்குத் தெரியும். ஆனுலும் ஏதோ ஒன்று என் மனசிலே அப்படி ஓர் உணர்ச்சியை உண்டாக்கிவிட்டது. நான் கனவிலும் நனவிலும் உன்னை எண்ணினேன். அதைப்பற்றி ஒரு காவியமே எழுதிவிடலாம்;

'இந்த நிலையிலிருந்த நான் அன்று எதிர்பாராமல் உன்னைக் கண்டபோது மின்சார அதிர்ச்சிக்கு உட்பட்டாற் போலத்தான் இருந்தது. மீட்டும் காணமுடிந்ததே என்ற சந்தோஷம் வேறு. நீ மாத்திரம் சிரிக்கவில்லை. நானுந் தான் சிரித்தேன். அதை இப்போது மறைக்கவேண்டிய அவசியம் இல்லையே!......'

அவள் முத்துப் பற்கள் நிலவொளி வீசின.



உள்ளே தனியே கமலாவும் சீனுவும் இருந்தார்கள். வெற்றிலை பாக்குப் பழத்துடன் இரண்டணுக்காசு ஒன்றை ஒரு தாம்பளத்தில் வைத்து அவள் அவன்முன் நீட்டி, "இந்தாருங்கள், உங்கள் பழைய பாக்கி!" என்று சொல்லிச் சிரித்தாள். அவன், தட்டை நீட்டிய அவ்ளுடைய கையைப் பற்றிக்கொண்டு, "அசல் இது; அதற்கு வட்டி?" என்ருன்.

"இதோ, நான்தான்!" என்ருள் கமலா.

"பேஷ்! பேஷ்! நல்ல லேவாதேவி!" என்று சிரித்தான் அவன்.

"லேவாதேவி அல்ல; நிஜமான தேவிதான்" என்று அவள் சட்டென்று சொன்ஞள்.

"போக்கிரி!" என்று அவன் அவள் கன்னத்தை இடது கையால் தட்டிஞன். மேலே பேச முடியவில்லை.

# வேம்பும் வெல்லமும்

அன்று வருஷப் பிறப்பு. நான் மாரிமங்கலத்தில் தங்கும்படி நேர்ந்துவிட்டது. 'வருஷத்துக்கு ஒரு நாளும் அதுவுமாக வெளியூரில் தங்குவதா?' என்று அன்புடையோர் கேட்பார்கள். ஒவ்வொரு நாளும் வருஷத்துக்கு ஒருநாள்தான்; சித்திரா பௌர்ணமி, ஆடிப் பண்டிகை, திருவாதிரை, தீபாவளி, கார்த்திகை, தைப் பொங்கல் எல்லாமே வருஷத்துக்கு இரண்டு முறை வருவதில்லையே! அதுமட்டு மல்ல; கார்த்திகை மாதம் பதினெட்டாம் தேதி ஒரு விசேஷமும் இல்லாத நாள்; அது மாத்திரம் வருஷத்துக்கு ஒரு நாள் அல்லாமல் இரண்டு நாள் உண்டா? இன்னும் பார்க்கப் போனால் எந்த நாளும், நம் வாழ்க்கையிலேயே ஒரு நாள்தான்; திரும்பி வராத ஒரு நாள். காலமென்னும் பெருங்கடலில் ஒவ்வொரு கணமும், 'போனால் வராது.' ஆகவே எந்த நாள்தான் அருமை இல்லாதது? ஏதோ விருந்து உணவும் வேடிக்கையும் உள்ள நாளை மாத்திரம், 'வருஷத்துக்கு ஒரு நாள்' என்று சொல்லுகிறார்கள்.

அப்படிப்பட்ட 'ஒரு நாள்' வரிசையில் ஒரு நாளாகிய வருஷப்பிறப்பன்று நான் சொந்த ஊரில் இல்லாமல் மாரிமங்கலத்தில் இருந்தேன். அங்கே வருஷப்பிறப்பு நன்றாகத்தான் கழிந்தது. என்னுடைய நண்பன் பெரிய மிராசுதார். அவனுடைய வீட்டிலே இனிய விருந்துண்டேன். வருஷத்தின் முதல் நாள் என்ன அநுபவம் ஏற்படுகிறதோ அது வருஷ முழுவதுக்கும் கிடைக்கும் அநுபவத்தின் அறிகுறி என்றால், அந்த வருஷத்துக்குத்தான் முதல்

பரிசு கொடுக்கவேண்டும். அன்று நண்பன் நாராயணன் இட்ட விருந்து இருக்கட்டும்; அவன் சொன்ன கதை எப்படி இருந்தது! அதை நான் நன்றாக ரசித்தேன்.



“இதோ, இது என்ன தெரியுமா?” என்று கேட்டான் நாராயணன்.

“நானும் தமிழ்நாட்டான்தான் அப்பா. வருஷப் பிறப்புக்கு வேப்பம் பூப் பச்சடி பண்ணும் வழக்கம் எனக்குத் தெரியாதா என்ன?”

“வேப்பம் பூப் பச்சடி ஏன் செய்கிறார்கள்?”

“மனிதனுடைய வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் கலந்து கலந்தே வரும். அந்த இரண்டையும் சமமாகப் பாவித்து வாழவேண்டும். இந்தப் பச்சடியில் கசப்பும் இருக்கிறது; தித்திப்பும் இருக்கிறது. இந்த இரண்டும் வாழ்க்கையின் இயல்பைக் காட்டுகின்றன.”

“பேஷ்! அற்புதமான வியாக்கியானம்” என்று நாராயணன் சொல்லிக்கொண்டே அந்தப் பச்சடியை ஒரு விரலால் தொட்டு நாக்கில் வைத்துக்கொண்டான். “இது வேம்படி வெல்லந்தானே?” என்று யாரையோ கேட்டான்.

“ஆமாம்; பின்னே வேறு ஏதாவது போடலாமோ?” என்று உள்ளேயிருந்து பதில் வந்தது.

“உன்னுடைய வியாக்கியானம் உலகத்துச் சமாசாரம். நான் ஒரு வியாக்கியானம் செய்யப்போகிறேன். அது எங்கள் குடும்பத்துச் சமாசாரம். வியாக்கியானம் என்றால் நீ சொன்னதுபோன்ற தத்துவார்த்தம் அல்ல. இது ஒரு கதை; உண்மைக் கதை; வாழ்க்கையில் நடந்த கதை.”

நான் நாராயணன் முகத்தைப் பார்த்தேன்.

"ஆம், உண்மையாக எங்கள் குடும்பத்தில் நிகழ்ந்த கதை. இந்தக் கதையின் நாயகர் எங்கள் பாட்டனார். இந்த வேப்பம் பூப் பச்சடி அந்தக் கதையின் தலைப்பு."

"என்னப்பா புதிர் போடுகிறாய்? வேப்பம் பூப் பச்சடி கதையின் தலைப்பாம்! தெளிவாகத்தான் சொல்" என்று அவனைக் கேட்டேன்.

"வேப்பம் பூப் பச்சடியில் வேம்பு இருக்கிறது; வெல்லம் இருக்கிறது. இந்த இரண்டையும் சேர்த்தால் கதைக்குப் பெயராகிவிடும்."

"வேம்பும் வெல்லமும்—அதுதானே?"

"ஆமாம், அதுதான். வேம்பும் வெல்லமும் சேர்ந்துதான் நம் வாழ்க்கை என்று வியாக்கியானம் செய்தாயே; அந்த வியாக்கியானத்துக்கு விளக்கக் கதை இது."

நான் பொறுமையை இழந்தேன். "சரிதான், பீடிகை போதும்; கதையைச் சொல்லப்பா" என்று முடுக்கினேன். 'வேம்பும் வெல்லமும்' ஆரம்பமாயிற்று.

★

எங்கள் தாத்தாவும் நாராயணன் என்னும் பெயருடையவரே. ஆனால் அவர் நவகோடி நாராயணராகப் பிறக்கவில்லை. இளமையிலே நடுவீதி நாராயணராகத்தான் இருந்தார். ஏழைக் குடும்பம்; அதிகப் படிப்பில்லை. ஆனால் சுறுசுறுப்பும் தடித்தனமும் அதிகமாக அவரிடம் இருந்தன. துணிவோ அபாரம். எதற்கும் அஞ்சாத வல்லாள கண்டர் அவர்.

அன்று வருஷப்பிறப்பு. ஏழையானாலும் வருஷத்துக்கு ஒரு நாளைக் கொண்டாடாமல் விடுவார்களா? "தம்பி, இன்றைக்கு வேப்பம் பூ வேண்டும்" என்று வீட்டிலே சொன்னார்கள். தம்பி நாராயணன் புறப்பட்

டான். அவன் நினைத்தால் சாக்குச் சாக்காக வேப்பம் பூவை ஒடித்துக்கொண்டு வந்துவிடுவான். அன்றைக்கு அவனுடைய கெட்ட காலமோ, நல்ல காலத்தின் பால காண்டமோ தெரியவில்லை, வேம்படியாள் கோவிலுக்குப் போய்ச் சேர்ந்தான். இந்த ஊரில் வயல்களுக்கிடையே ஒரு திடல் இருந்தது. மிகவும் சின்னத் திடல். அந்தத் திடலில் ஒரு வேப்பமரம். அதற்கடியில் தான் வேம்படியாள் என்னும் தெய்வம் கோவில்கொண்டிருந்தாள். கோவிலும் குளமும் இருந்தன என்று நினைக்காதே. சாமியை அங்கே நட்டிருந்தார்கள். வயல்களில் வேலை செய்கிறவர்கள் என்றைக்காவது அந்த வேம்படியாளுக்குப் பூசை போடுவார்கள்.

முரட்டுத் தம்பி நாராயணன் நேரே அந்தத் திடலுக்குப் போனான். விடுவிடென்று வேம்படியாளுக்கு விதானமாகத் தழைத்திருந்த வேப்பமரத்தின் மேல் ஏறினான். கொத்துக் கொத்தாகப் பூத்திருந்த வேப்பம் பூவைப் பறிக்கும் காரியத்திலே முனைந்தான்.

சிறிது நேரம் அந்த வேலையில் ஈடுபட்டிருந்தான். அதற்குள் ஏதோ சத்தம் அவன் காதில் விழுந்தது. வயல் வரப்பின்மேல் யாரோ கத்திகொண்டே ஓடிவந்தார்கள். "அடபாவி! நாசமாய்ப் போகிறவனே!" என்ற வாழ்த்தொலிகள் அவன் காதில் விழுந்தன. ஒரு பக்கம் மாத்திரம் அல்ல; நாலு பக்கங்களிலும் கூச்சல் கிளம்பியது. சற்று நேரத்துக்குள் வயலில் வேலை செய்யும் ஹரிஜனங்கள் நாலைந்துபேர் வேம்படிக்கு வந்துவிட்டார்கள்.

"ஏ புத்தியற்ற முட்டாளே! உனக்குப் பூ ஒடிக்க வேறே மரம் இல்லையோ?" என்று ஒருவன் கேட்டான்.

"வேம்படியாள் உன் கண்ணைக் குத்திவிட மாட்டாளோ?" என்றான் ஒருவன்.

"வேம்படியாள் கவனிக்கிறவரைக்கும் நாம் சும்மா இருப்பதா? பூவை ஒடித்த கையை ஒடித்து அடுப்பில் வைக்கவேண்டாமோ?"

"இறங்கடா பயலே, இறங்கு!"

"வருஷப்பிறப்பும் அதுவுமாக உனக்குப் புத்தி போயிற்றே!"

"தெய்வத்துக்குப் பயப்படாத பயல்கள் வேறு யாருக்குப் பயப்படப் போகிறார்கள்?"

இந்த வசவுகளையும் மிரட்டல்களையும் கேட்டு ஜீரணிக்க நாராயணனுக்கு நேரம் இல்லை. அதற்குள்ளே வேம்படியாளின் பக்த ஜனங்கள் அவனைக் கீழே இழுத்துக் கிடத்தி அடி அடியென்று அடித்துவிட்டார்கள்; காறித் துப்பினார்கள். கொலை செய்யாமல் உயிரோடு விட்டுவிட்டார்கள். வேம்படியாள் முன்னே நினைவு தப்பிப்போய் நாராயணன் கிடந்தான். அவளுடைய அடியார்கள் அவனை அப்படியே போட்டுவிட்டு வருஷப்பிறப்புக் கொண்டாடப் போய்விட்டார்கள்.

"முரட்டுப் பயல் பூவொடிக்கப் போனானோ, வேறு எங்கே விளையாடப் போனானோ? உதவாக்கரை!" என்று வீட்டிலுள்ளோர் எண்ணினார்கள். அவன் சாப்பாட்டுக்குக்கூட வரவில்லை. பிற்பகல் நெடுநேரம் கழித்து நடக்கமுடியாமல் தட்டுத் தள்ளாடிக்கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தான் நாராயணன்.



அன்று முதல் என் பாட்டனார் வேறு பிறவி எடுத்தாரென்றே சொல்லவேண்டும். ஹரிஜனங்கள் அடித்த அடியிலிருந்து பிழைத்ததைச் சொல்லவில்லை. முரடராகவும் கருத்தில்லாத சோம்பேறியாகவும் பதினெட்டு வருஷங்களைக் கழித்த நாராயணர் அன்று முதல் தம்முடைய

விளையாட்டுப் புத்தியை விட்டொழித்தார். வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற தீவிரமான சங்கற்பம் அவர் உள்ளத்திலே பதிவாயிற்று. அது முதல் அவர் அதிக மாகப் பேசுவதில்லை. ஏதாவது வேலை பார்க்க வேண்டு மென்று அலைந்தார். கடைசியில் வேறு ஊர் ஒன்றில் ஒரு கடையில் சிற்றாளாக அமர்ந்தார்.

அவருடைய சங்கற்பம் உறுதிப்பட்டது. முதலாளி யிடம் நல்ல பேர் வாங்கினார். கடையில் விற்பனை சம்பந்த மான நெளிவு சுளிவுகளெல்லாம் தெரிந்துகொண்டார். சரக்குப் பிடிக்கிற நோக்கங்களையும் புரிந்து கொண்டார். "நாராயணன் புத்திசாலி; கெட்டிக்காரன்; நாணயமுள்ள வன்" என்ற அபிப்பிராயம் கடை முதலாளி மனசில் உண்டாயிற்று. அதன் பயன், லாபத்தில் ஒரு பங்கு நாரா யணருக்குக் கிடைத்தது. லக்ஷ்மீ கடாட்சம் விழுந்து விட் டால் பிறகு செல்வ வருவாய்க்குக் கேட்கவா வேண்டும்? முதலாளி உடம்பு தளர்ந்தது. அவர் பிள்ளைகள் கருத் துடையவர்களாக இல்லை. கடைசியில் நாராயணரிடமே கடையை ஒப்பித்துவிட்டுப் பரலோகத்தில் இடம் பிடிப் பதற்கு வேண்டிய காரியங்களில் ஈடுபட்டார் முதலாளி. நாராயணருக்கே கடையை அளித்துவிட்டார். ஏதோ பேருக்கு ஒரு சிறு தொகையைப் பெற்றுக் கொண்டார். அந்தப் புண்ணியவானுடைய நல்லெண்ணமும் எங்கள் பாட்டனாரின் உழைப்பும் சேர்ந்துகொண்டன. கடை பிர பலமாயிற்று. பாட்டனார் கையில் முதல் சேர்ந்தது.

தம்முடைய சொந்த ஊரில் நிலம் வாங்கவேண்டு மென்று அவர் நினைத்தார். அதோடு இந்த ஊரிலேயும் ஒரு கடையை ஆரம்பித்தார். அந்தக் கடையும் அமோக மாக வளர்ந்தது. அவர் முதல் முதலில் எந்த நிலத்தை வாங்கினார் தெரியுமா? வேம்படித் திடலும் ஒரு வயலும்

ஒருவருக்குச் சொந்தமாக இருந்தன. அந்த இரண்டை யும் முதலில் வாங்கினார். அதற்கு உள்ள விலையில் இரண் டத்தனை கொடுத்து வாங்கினார். சொந்தக்காரருக்கு இவ ருடைய ஆவல் தெரிந்துபோயிற்று. என்ன கேட்டாலும் கொடுப்பாரென்று பட்டது. விலையை ஏற்றிவிட்டார். புதிதாக ஒருவர் முன்னுக்கு வந்தால், கிராமத்தார்கள் அவரைக் கண்டு வயிற்றெரிச்சல் படுவது இயல்புதானே? மற்றப் பிரமுகர்களும் நிலம் உடையவருக்குத் தூபம் ஏற் றினார்கள். விலை இரண்டு பங்காக உயர்ந்து போயிற்றே என்று பாட்டனார் எண்ணவில்லை. "அதில் என்ன புதை யலா இருக்கிறது? போதாக் குறைக்கு வீணாக ஒரு திடல் வேறு இருக்கிறது. வேறு இடத்தில் இதைப்போல மூன் றத்தனை இடம் நல்ல நன்செய்யாக ஒரே தாக்காக வாங்க லாம்" என்று நண்பர்கள் சொல்லிப் பார்த்தார்கள். அவர் கேட்கவே இல்லை. ஒரே பிடிவாதமாக அந்த இடத்தை வாங்கிவிட்டார்.



நாராயணர் செய்ய எண்ணிய அடுத்த காரியந் தான் ஊரையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. வேம்படி யாளை அந்த வேப்பமரத்தடியிலிருந்து எடுத்துவிடப் போகிறார் என்ற செய்தியைக் கேட்டவர்கள், பழைய நாரா யணனை நினைத்துக் கொண்டார்கள். "அந்த முரட்டுத் தனம் இன்னும் போகவில்லை" என்றார் சிலர். "பழி வாங்க எண்ணுகிறானப்பா! இவன் பண்ணின அக்கிரமத் துக்கு வேம்படியாள் என்ன செய்வாள்?" என்றார் சிலர். "ஆமாம், அந்தச் சாமியை என்ன செய்யப்போகிறானாம்?" என்று கேட்டார் ஒருவர். "கடவுளுக்கே வெளிச்சம்! ஏதோ கொஞ்சம் பசை கையில் சேர்ந்திருக்கிறது. அதற்

கெல்லாம் நாசகாலம் வந்துவிட்டதோ, என்னவோ!'' என்றார் சிலர்.

ஆனால் நாராயணரிடம் மதிப்புடைய மக்களும் இல்லாமல் போகவில்லை. "இவர் ஏதாவது ஆச்சரியமான காரியத்தைத்தான் செய்வார்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

இந்த ஊரின் கீழ்க்கோடியில் நாராயணர் ஒரு சின்னக் கோவிலைக் கட்டினார். மூன்றும் பேருக்குத் தெரியாமல் வேம்படியாளை இடம் பெயர்த்து அந்தக் கோவிலிலே குடியேற்றி விட்டார்.

"இவன் வாழ்வானா? இத்தனை தைரியமாகச் செய்தானே!'' என்று அவருடைய விரோதிகள் பேசிக் கொண்டார்கள்.

என் பாட்டனார் தாம் நினைத்ததைச் செய்துவிட்டார். வேம்படியாளை வேம்பில்லாத இடத்தில் வைத்துவிட்டார். தமக்கு அடி வாங்கித் தந்த பழைய வேப்பமரத்தை வெட்டி அடுப்பெரித்துவிட்டார். அதற்கு எத்தனை தைரியம் வேண்டும்? யோசித்துப் பார்.

அதோடு அவர் நிற்கவில்லை. அந்த வேம்படித் திடலையே அழித்து நன்செய் பண்ணிவிட்டார். நெல்லும் கரும்பும் விளையும் பூமியாக அதை மாற்றிவிட்டார். அதற்காக அவர் செலவிட்ட பணம் கொஞ்சமா நஞ்சமா? எப்படியோ வேம்பையும், அது முளைத்த மண்ணையுமே மாற்றி வாழ்க்கையில் வெற்றி கண்டார்.

★

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு ஊரார் ஏசலுக்கும் வசவுக்கும் ஆளானார் எங்கள் பாட்டனார். அன்றும் வருஷப் பிறப்புதான். அன்று நாராயணருடைய மனைவி இறந்து போனாள். வெறும் வாயை மெல்லுகிறவர்களுக்கு அவல் கிடைத்தால் சும்மா இருப்பார்களா? "வேம்

படியாள் சும்மா விடுவாளா? பச்சை மரத்தை வெட்டின பாவிக்கு ஏற்ற தண்டனைதான். குழந்தை குட்டி பிறப்ப தற்கு முன்னே மனைவியை அவள் பலி கொண்டு விட்டாள். வேம்படியாள் கண் கண்ட தெய்வம் அல்லவா? இன்னும் என்ன செய்யப் போகிறாளோ!" என்று பேசினார்கள்.

என் பாட்டனார் இந்த வார்த்தைகளைக் கேட்காமலா இருந்திருப்பார்? அவர் எதற்கும் அசையவில்லை. இரண் டாந்தாரம் கல்யாணம் பண்ணிக்கொண்டார். வாழ்வில் மீண்டும் மலர்ச்சி ஏற்பட்டது. வியாபாரம் பெருகிற்று. நன்றாகத்தான் வாழ்ந்தார். அவருக்கு ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் பிறந்தார்கள்.

★

நாராயணன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

"கதை அவ்வளவுதானே? இதில் வேம்பு எங்கே, வெல்லம் எங்கே?" என்று நான் கேட்டேன்.

"இன்னும் கதை முடியவில்லையே! இதோ முடித்து விடுகிறேன். வேம்பும் வெல்லமும் வரும் பார்" என்று சொல்லி நாராயணன் மறுபடியும் தொடர்ந்து சொல்ல லானான்.

★

என் பாட்டனாருக்கு ஒரே பிள்ளையென்று சொன் னேன் அல்லவா? அவரே என் தந்தையார். என் பாட்ட னார் காலமானதற்குப் பிறகும் சில வருஷங்கள் என் பாட்டி உயிருடன் இருந்தாள். என்னதான் என் பாட்ட னார் தைரியசாலியாக இருந்தாலும், அவர் மனைவி பெண் தானே? அவளுக்கு மனசில் ஒரு குறை இருந்தது; வேம் படியாளுக்கு வேப்ப மரச் சம்பந்தம் இல்லையே என்ற குறைதான். வேம்படியாள் என் பாட்டனாருடைய முதல்

மனைவியைப் பலி கொண்டுவிட்டாள் என்ற செய்தியை அவள் கேட்டபோது, தனக்கு என்ன ஆகுமோ என்ற பயம் அவளுக்கு இருந்தது. அதனால் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் வேம்படியாள் கோவிலுக்குப் போய்த் தரிசனம் செய்துவரத் தவறியதில்லை. "தாயே, எங்கள் அபசாரங்களை யெல்லாம் பொறுத்துக் காப்பாற்ற வேண்டும்" என்று பிரார்த்தனை செய்வாள்.

அவள் மனசில் இருந்த குறையை என் பாட்டனாரிடம் சொல்ல அவளுக்குத் தைரியம் இல்லை. வேம்படியாள் கோவிலில் வேப்பமரம் நடவேண்டும் என்ற விருப்பத்தை அவள் என் தகப்பனார் மூலம் நிறைவேற்றிக் கொண்டாள். "உன்னுடைய தகப்பனாரைப் போலத் தைரியசாலி யாரும் இல்லை. வேம்படியாள்தான் அவரைக் காப்பாற்றினாள். அவள் அருள் எப்போதும் உனக்கு இருக்கவேண்டும். அவள் கோவிலில் வேப்ப நிழல் இருக்கவேண்டும். உன் தகப்பனார் வேம்படித் திடலை அழித்ததற்கு அதுதான் பிராயச்சித்தம்" என்று சொன்னாள்.

"அப்பாவுக்கு வேம்படியாள் மேல் வெறுப்பு இல்லை. வேப்ப மரத்தின் மேல்தான் வெறுப்பு. அதன் பூவை ஒடிக்கப் போய்த்தானே அவர் அடி பட்டார்?" என்று கேட்டார் என் தந்தையார்.

"அப்படிச் சொல்லாதேயடா மகனே; வேம்பு என்ன செய்யும்? அன்று அவர் பட்ட அடிதானே அவரை உருப்பட வைத்தது? வேம்படியாள் அருளால்தான் அவர் முன்னுக்கு வந்தார். அவள் சந்நிதியில் உணர்விழந்து கிடந்தாரே, அதற்கு இரங்கி அவள் அருள் செய்தாள்" என்று பாட்டி சமாதானம் சொன்னாள்.

"அவர் ஆத்மாவுக்குத் திருப்தி இல்லாத காரியம் போல இது எனக்குத் தோன்றுகிறது. வேம்படியாளை

வேம்பிலிருந்து பிரித்ததுதான் அவருடைய சாமர்த்தியம்.''

"இல்லை, இல்லை. அவர் வேப்பம் பூப் பறிக்கப் போனார். வருஷப் பிறப்பில் வேம்படியாளின் வேப்பம் பூ அவருக்கு உதவவில்லை. அந்தக் குறையையும் நாம் போக்கி விடலாம். நீ வேம்படியாள் கோவிலில் வேப்ப மரங்களை நடு. வருஷப் பிறப்புக்கு அந்தப் பூவையே நம் வீட்டில் உபயோகிக்கலாம்.''

இந்த யோசனை என் தந்தையாருக்கு மிகவும் உசிதமாகப் பட்டது. அவர் தம்முடைய யுக்தியால் மற்றொன்றையும் சேர்த்துக் கொண்டார். வேம்படித் திடல் வேம்படி வயலாகி யிருந்த தல்லவா? அந்த வயலில் கரும்பு போட்டிருந்தார். அந்தக் கரும்பிலிருந்து வெல்லம் காய்ச்சினார். என் பாட்டி உயிரோடு இருந்தபோதே, வேம்படியாள் கோவில் வேப்பம் பூவையும் வேம்படி வயல் வெல்லத்தையும் சேர்த்துப் பச்சடி செய்தார். என் பாட்டனாரின் வாழ்க்கையின் ஆரம்பம் வேம்பு. அதன் வெற்றி வெல்லம். இரண்டையும் கலந்து என் பாட்டியின் ஆசிர்வாதத்தைப் பெற்றார் என் தகப்பனார். அது முதல் வேம்படியாள் கோவில் வேப்பம் பூவே எங்கள் வீட்டு வருஷப் பிறப்புக்கு உபயோகப்பட்டு வருகிறது. வேம்படி வயலில் கரும்பு போட்டிருந்தால் அந்த வெல்லத்தைச் சேமித்து வைத்திருப்போம். வருஷப் பிறப்பில் உபயோகப் படுத்துவோம்.



"எங்கே, இன்னும் கொஞ்சம் அந்தப் பச்சடியைக் கொண்டு வா'' என்று உத்தரவிட்டான் நாராயணன்.

என் இலையில் மீண்டும் வந்த அந்தப் பச்சடியைக் காவியத்தை ரசிப்பதைப் போல ரசித்து ருசி பார்த்தேன்.